



பண்டிதமணி

# திரு. மு. கதிரேசச் செட்டியார் அவர்கள்

# திருவுருவச் சிலை திறப்புவிழா மலர்

மகிபாலன் பட்டி 3-4-1974.

பண்டிதமணி

# திரு. மு. கதிரேசச் செட்டியார்

அவர்கள்

## திருவுருவச் சிலை திறப்புவிழா மலர்



**மகிபாலன்பட்டி**

இராமநாதபுர மாவட்டம்

**3-4-1974**


பொறுப்பாசிரியர் :

**டாக்டர் மெ. சுந்தரம், எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,**

தலைமைத் தமிழ்ப் பேராசிரியர், மாநிலக் கல்லூரி, சென்னை.

துணைப் பொறுப்பாசிரியர் :

**திரு. எம். எஸ். மெய்யப்பன், பி.இ.,**

உரிமையாளர், ஹோட்டல் ஓஷியானிக், சென்னை.

பேரன்புடையீர்,

நிகழும் திருவள்ளுவர் ஆண்டு 2005 பங்குனி மாதம் 21-ஆம் நாள் (3—4—1974) புதன்கிழமை மாலை 4-30 மணி அளவில்

தமிழ்ப் பேராசான், முதுபெரும் புலவர்

பண்டிதமணி திரு. **மு. கதிரேசச் செட்டியார்** அவர்களின்

**திருவுருவச் சிலையைத்**

தமிழக முதல்வர்

மாண்புமிகு டாக்டர் கலைஞர் **மு. கருணாநிதி** அவர்கள்

திறந்துவைப்பார்கள்.

செட்டிநாட்டு அரசர் டாக்டர்

திரு. **மு. அ. முத்தையாச் செட்டியார்** அவர்கள்

விழாத் தலைமை ஏற்பார்கள்.

தொழில் அமைச்சர்

மாண்புமிகு திரு. **செ. மாதவன்** அவர்கள்

மலர் வெளியிடுவார்கள்.

பேராசிரியப் பெருமக்கள் பாராட்டுரை நல்குவார்கள்.

அனைவரும் வருகை தந்து விழாவினைச் சிறப்பிக்க வேண்டுகின்றோம்.

இங்ஙனம்

**விழாக் குழுவினர்**

**மகிபாலன்பட்டி**

## நிகழ்ச்சி நிரல்

**3—4—'74 புதன்கிழமை, மாலை 4-30 மணி**

தமிழ்த்தாய் வணக்கம்

வரவேற்புரை :
டாக்டர் மெ. சுந்தரம்

தலைவர் முன்னுரை :
செட்டிநாட்டு அரசர் டாக்டர்
திரு. மு. அ. முத்தையாச் செட்டியார் அவர்கள்

திருவுருவச் சிலை திறப்பும், வாழ்த்தும் :
தமிழக முதல்வர்
மாண்புமிகு டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள்

மலர் வெளியீடு :
தொழில் அமைச்சர்
மாண்புமிகு திரு. செ. மாதவன் அவர்கள்

பாராட்டுரை :

டாக்டர் வ. சுப. மாணிக்கம்

தவத்திரு குன்றக்குடி அடிகளார் எம். எல். சி.

நன்றி நவிலல்

நாட்டு வாழ்த்து

## விழாக் குழுவினர்

செட்டிநாட்டு அரசர் திரு. மு. அ. முத்தையாச் செட்டியார்
திரு. தவத்திரு குன்றக்குடி அடிகளார் எம்.எல்.சி.
திரு. எஸ். எஸ். தென்னரசு எம். எல். சி.
திரு. சா. கணேசன் எம்.எல்.சி.
திரு. வ. செ. சிவலிங்கம் செட்டியார்
திரு. எ. சி. முத்தையா
பேராசிரியர் டாக்டர் மெ. சுந்தரம்
திரு. எம். எஸ். மெய்யப்பன் (ஓட்டல் ஓஷியானிக்)
திரு. நா. ஆறு. நாகராசன்
திரு. பெரி. அழகு
திரு. ஆர். வி. சாமிநாதன் எம்.பி.
திரு. தா. கிருஷ்ணன் எம்.பி.
திரு. சி. சேதுராமன் எம்.எல்.ஏ.
திரு. சித. சிதம்பரம் எம்.எல்.ஏ.
திரு. எம். சி. டி. முத்தையா
திரு. லெ. அழகு சுந்தரம் செட்டியார்
திரு. எம். எம். முத்தையா
திரு. இராமநாதன் செட்டியார்
திரு. லெ. நாராயணன் செட்டியார்
திரு. எம். மெய்யப்பன் குவாலிட்டி மில்ஸ்
திரு. கதி. சுப்பிரமணியன் செட்டியார்
திரு. கதி. கனகசபாபதி
திரு. சி. சுப. சுப்பிரமணியன் செட்டியார்
திரு. இராம. சேதுச் செட்டியார்
திரு. ந. மு. மு. முத்துராமன் செட்டியார்
திரு. சி. ராம. நாகப்ப செட்டியார்
திரு. ம. வெ. மங்கைபாகக் கோனர்
திரு. சி. பந்தப்பனம்பலம்
திரு. கரு. சேது அம்பலம்
திரு. மெய்யப்பத் தேவர்
திரு. ஆ. இ. ஆசிமுகமது ராவுத்தர்
திரு. கரு. வெள்ளத்துரை

## பதிப்புரை

நகரத்தார் மரபில் தோன்றி நாட்டார் போற்ற நற்றமிழ்த் தொண்டு புரிந்த பெருமகனார், முதுபெரும் புலவர் பண்டிதமணி திரு. மு. கதிரேசனார் அவர்கள். அப்பெருந்தகையாரின் பெரும் புலமைப் பேராறு தமிழ்ப் புலத்தின் பல்வேறு கழனிகளில் பாய்ந்து, அவற்றையெல்லாம் மருதநிலமாக்கி மாண்புறச் செய்தது. ''தண்டா நயம்விரி பண்டித மணியார்'' எனப் புலவோர் உலகம் போற்றி மகிழ்ந்த நற்றமிழ் நயத்தின் நாயகர் எண்டிசை புகழும் நம் பண்டிதமணியார். நகைச்சுவை மாமணியார் நம் நற்றமிழ்ப் பண்டிதமணியார். அம் முதுபெரும் புலவரின் மாண்பினைத் தமிழ்கூறும் நல்லுலகம் என்றும் நினைந்து நன்றி உணர்வோடும், நற்றமிழ் உணர்வோடும் திகழத் தமிழக அரசின் சட்டம்-தொழில் அமைச்சர் மாண்புமிகு திரு. செ. மாதவனார் அவர்களின் சிந்தையில் சீரியதொரு திட்டம் உருவாகியது. அதுதான் புலவர் பெருமகனாருக்குத் திருவுருவச்சிலை திறப்பு விழவாக மலர்ந்தது. மாண்புமிகு திரு. மாதவனார் அவர்கள் தொழில் அமைச்சர்; ஆம். அவர்கள் தொழில், தமிழ்த் தொண்டு புரிதல், தமிழினத்தை முன்னேற்றல், தமிழ் நாட்டை வளப்படுத்தல். இத்தகைய முத்தொழில் புரியும் அமைச்சர் பெருமகனார் அவர்கள் முத்தமிழ்ப் புலவருக்கு விழா அயர எண்ணியது, முத்துக் குளித்தல் போல், போற்றி மகிழத்தக்க பூரிப்பான செயலாகும். தமிழ்ப் புலவோரின் தொண்டிற்கு முதலிடம் தந்த அமைச்சர் பெருந்தகையாரின் பேருள்ளத்திற்குத் தமிழ் உலகம் நன்றி கூறும் கடப்பாடுடையது.

செந்தமிழ் வளர்க்கும் செட்டிநாட்டரசர் அவர்கள் பண்டிதமணி அவர்களைத் தொடக்க கால முதல் அகமும் புறமும் நன்கு அறிந்தவர்கள். பண்டிதமணி அவர்களின் முன்னேற்றத்தில் ஈடு இணையற்ற ஈடுபாடு காட்டியவர்கள். அவர்கள் இவ்விழாக் குழுவின் தலைவராய் அமர்ந்து, காட்டிய ஆர்வமும், ஊட்டிய ஊக்கமும் இவ்விழாவினை வலிவும் பொலிவும் கொள்ளச் செய்துள்ளது. பண்டிதமணி அவர்களுக்கு நடுவண் அரசு 'மகாமகோபாத்தியாய' பட்டம் அளிக்கச் செட்டிநாட்டு அரசர் அவர்கள் மேற்கொண்ட முயற்சிகள் இலக்கிய வரலாற்றில் இடம் பெறுவனவாகும்.

இரு கண் போன்ற இரு செயலர் பெருமக்கள், திரு. நா. ஆறு. நாகராசனார், திரு. பெரி. அழகு ஆகியோர் இத்தமிழ் விழாவினைத் திருவிழாப்போல் உருவாக்கி உள்ளனர். அவர்களின் உழைப்பும் ஆர்வமும் அன்னாரின் தமிழ் உள்ளத்தைத் தெள்ளிதின் எடுத்துக் காட்டும்.

இம்மலர் மலர்ந்து மணம் கமழ, இதில் இலை, தழை, குழை இல்லாமல்முழுவதும் மலராகவே அமைய, அருமைத்தம்பி, அன்பமை தமிழ்ப் பண்பாளர் திரு. மெ. செ. மெய்யப்பனார் எனக்கு உறுதுணையாய் அமைந்து புரிந்த உதவிகளை என்றும் நினைவிற் கொள்வேன். அவர்களின் நற்றமிழ் உள்ளம், இரவு பகலென்று பாராது இம்மலர்ப் பணியில் ஈடுபட்டது. பண்டிதமணியாரின் புலமை நலத்தினைத் திறனாய்ந்து தெளியும் அன்னாரின் கட்டுரை ஒன்றும் இம் மலருக்கு அணி செய்கின்றது. இது இவர்களின் தமிழ்ப் பணிக்கு முடிமணியாக அமைந்து உள்ளது. அத்தண்டமிழ் உள்ளம் தழைக்க வாழ்த்துகின்றேன்.

தமிழே தன் உயிராகவும், மூச்சாகவும் கொண்டு, நாளும் நற்றமிழ்த் தொண்டு பூண்டு வரும் ஆரூர் நம்பி, அருமை அண்ணாவின் தம்பி, தமிழக முதல்வர் தமிழவேள் டாக்டர் கலைஞர் அவர்கள் இச்செந்தமிழ்ப் பேராசானின் சிலையினைத் தம் தண்டமிழ்க் கரத்தால் திறக்க முற்படுவது, தமிழ் செய்த தவமேயாகும். தம் கைவண்ணத்தாலும், கருத்து வண்ணத்தாலும் தமிழ் மொழியினை உயர் தனிச் செம்மொழி ஆக்கி வரும் தமிழவேள் டாக்டர் கலைஞர் அவர்கள் இவ்விழாவிற் கலந்து கொள்வது, தமிழ் ஆசிரியர்கள் உலகிற்குப் பெருஞ்சிறப்பூட்டுஞ் செய்தியாகும். தானே கலைஞராய், கவிஞ ராய், தரணி ஆள்வோராய், தலைவராய், தம்பியாய்த் திகழும் தமிழவேள் கலைஞர் அவர்கள் இப்புலவர் விழாவில் கலந்து கொள்வது, தமிழக அரசு தமிழ்ப்புலவோரிடம் கொண்டுள்ள ஈடுபாட்டினையும், பெருமதிப்பினையும் விளக்கப் போதிய சான்றாகும். தலைகொடுத்துத் தமிழ்காக்க முற்பட்டு — தனிமைச் சிறைப்பட்டுத் தமிழ் புரக்க முற்பட்ட தமிழ்த் தாயின் தலைமகன், தமிழ்மக்களின் தானைத் தலைவன், தமிழவேள் கலைஞர் அவர்களுக்கு, இவ் விழாக்குழு பெரிதும் நன்றி பாராட்டும் கடப்பாடுடையது.

இவ் விழாவின் செயற்குழுவினர் அவ்வப்போது அளித்த ஊக்கமும், காட்டிய ஆர்வமும் இம்மலரையும், விழாவினையும் மலரவைத்தன.

இம்மலரில் இடம் பெற்றுள்ள பல நிழற்படங்கள், பண்டிதமணியாரின் கையெழுத்துப் படிகள் ஆகியவற்றைப் பண்டிதமணி அவர்களின் மகன் திரு. கனகசபாபதி அவர்கள் அன்புடன் அளித்து உதவினார்கள். அவர்கள் நற்றமிழ் உள்ளத்திற்கு மலர்க்குழு தன் நன்றியினைப் புலப்படுத்திக் கொள் கின்றது.

இம்மலரினைக் குறுகிய காலத்தில் சீரிய முறையில் அச்சிட்டு உதவிய ஆசியன் அச்சகத்தார்க்கும், அதன் உரிமையாளர் திரு. செ.மெ. பழனியப்ப செட்டியார் அவர்களுக்கும் இம்மலர்க்குழு தன் நன்றியினை உரித்தாக்கு கின்றது. மலர் கண்கவர் வண்ணம் எழில் தோற்றம் அளிப்பது, அவர்கள் கைவண்ணத்தால் என்பது தானே போதரும்.

இவ் விழாவினைப் பற்றி அவ்வப்போது நற்றமிழ் உள்ளங்கள் பல உசா விக் கொண்டு ஊக்கமளித்துக் கொண்டிருந்தன. அவ்வூக்க உரைகளை என்றும் மறவோம்.

இம்மலரில் பண்டிதமணி அவர்களுடன் பழகி, அவர்களை நன்கு அறிந்த தண்டமிழ்ச் சான்றோர் பலர் கைவண்ணங்களைப் படைத்துள்ளார்கள். கருத்து நிறைந்த, நடை நயம் வாய்ந்த அக்கட்டுரைகள் — கன்னித் தமிழ்ப் படைப்புக்கள் இம்மலருக்கு மணம் ஊட்டுகின்றன. நற்றமிழ் உலகில் கொற்றம் பரப்பும் அக்கோமக்களுக்கு மலர்க்குழுவின் மனமார்ந்த நன்றி என்றும் உரித்தாகும்.

நற்றமிழ் நந்தவனத்தில் இத்தமிழ் மலர் தனிமலராய் நின்று மணம் பரப்பவும், இத்தமிழ் விழா, தனிப் பெரும் திருவிழாவாக மலரவும் வாழ்த்து கின்ற தெள்ளு தமிழ் உள்ளங்கள் அனைத்திற்கும் என் உளமார்ந்த நன்றியினை யும் வணக்கத்தினையும் புலப்படுத்திக் கொள்கின்றேன்.

மகிபாலன்பட்டி
3—4—1974

அன்பன்,

**மெ. சுந்தரம்**

பொறுப்பாசிரியர், மலர்க்குழு.



பண்டிதமணியாரின் திருவுருவச் சிலையினைத்
திறந்துவைத்த மாண்புமிகு தமிழக முதல்வர்
**தமிழவேள் டாக்டர் கலைஞர் அவர்கள்**



பண்டிதமணியார் திருவுருவச்சிலை
திறப்புவிழாத் தலைவர் மேதகு செட்டிநாட்டரசர்
டாக்டர் மு. அ. முத்தையாச் செட்டியார் அவர்கள்



பண்டிதமணியாரின் மலரினை வெளியிட்ட
தமிழகத் தொழிலமைச்சர்
மாண்புமிகு திரு. செ. மாதவனர், பி.காம்., பி.எல்.



**சோழவந்தான் அரசன் சண்முகனார்**
(பண்டிதமணியாரின்
இலக்கிய, இலக்கண ஆசிரியர்)

மு. கருணாநிதி
முதலமைச்சர்

தலைமைச் செயலகம்
சென்னை - 9
15 - 9 - 1973

வடமொழியையும், வண்டமிழையும் வகையாகக கற்றுணர்ந்த தமிழ்ப் பெரியார் பண்டிதமணி கதிரேசன் செட்டியார் அவர்களின் நினைவாக மலர் வெளியிடும் குழுவின் முயற்சி அறிந்து மட்டற்ற மகிழ்ச்சி அடைகின்றேன்.

தமிழர்தம் பண்பாட்டை மறவாமல் தமிழர்நெறி சிறக்கப் பாடுபட்டு, தாய்மொழியின்பால் நீங்காப் பேரன்புகொண்ட பண்டிதமணியின் தொண்டு இன்றையத் தமிழர்க்கு நல்ல பயனுள்ள பாடமாகும். ''கற்க கசடற'' என்ற பொய்யில்புலவன் பொன்னுரை போற்றி, ''நிற்க அதற்குத்தக'' என்ற நீள்மொழி உணர்த்திய பண்டிதமணி கதிரேசன் செட்டியார் நினைவாக, செய்ந்நன்றி மறவாமல் விழா எடுக்கும் குழுவினரைப் போற்றுவதோடு, விழா வெற்றிபெற வாழ்த்துகின்றேன்,

மு. கருணாநிதி

இரா. நெடுஞ்செழியன்
கல்வி அமைச்சர்

தலைமைச் செயலகம்,
சென்னை-9.
26 - 9 - 1973

தமிழ்ப் பெரும் புலவரும் சிறந்த எழுத்தாளரும் சீரிய சொற்பொழிவாளருமான பண்டிதமணி கதிரேசனர் அவர்களின் பெருமையையும், தமிழ் வளர்ச்சிக்கு அன்னர் ஆற்றிய தொண்டினையும், எடுத்துக் காட்டும் வகையில் நண்பர்கள் மலர் வெளியிடவிருப்பதறிந்து மிக்க மகிழ்ச்சியடைகிறேன்.

தமிழ்ப் புலவர்களால் பெரிதும் பாராட்டப் பெற்று அஞ்சா நெஞ்சங் கொண்ட தமிழறிஞரான கதிரேசனர், அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் எட்டு ஆண்டுகள் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றித் தமிழ்த் தொண்டு புரிந்தார். இத்தகைய தமிழ்ப் பெரியார்களின் நினைவைப் போற்றுமுகத்தான் செயல்படும் நிறுவனங்களும் மன்றங்களும் பாராட்டுதற்குரியன.

தங்கள் முயற்சி வெற்றியடைய என் வாழ்த்துக்கள்.

வாழ்க தமிழ்ப் புலவர் கதிரேசனர் புகழ் !

**இரா. நெடுஞ்செழியன்**

செ. மாதவன்
தொழில் அமைச்சர்

தலைமைச் செயலகம்,
சென்னை-9.

பண்டிதமணி அவர்களின் நினைவாலயம் நிறுவ இருப்பதறிந்து மிக்க மகிழ்ச்சி.

சங்ககாலப் புலவர்களை நாம் நேரில் கண்டதில்லை; ஆனால், பண்டிதமணி அவர்கள் சங்ககாலச் சான்றோர்களில் ஒருவராய் நம் மிடையே வாழ்ந்து செந்தமிழ்ப் புலமைக்குச் சீரியதோர் எடுத்துக் காட்டாக விளங்கினார்கள். "சுக்கிரநீதி" போன்ற தமிழாக்க நூல்கள் அவர்களது வடமொழிப் புலமையைக் காட்டி நிற்கின்றன.

ஆன்றமைந்த சான்றோரான பண்டிதமணி அவர்களின் நினைவு மனம் நிலைத்து நிற்பதாக.

செ. மாதவன்

டாக்டர் ராஜா சர்

**முத்தையா செட்டியார்**

சென்னை-28.

## வாழ்த்துச் செய்தி

முதுபெரும் புலவர், மகாமகோபாத்தியாய பண்டிதமணி திரு. மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் தமிழகத்தின் தலைசிறந்த தமிழ்ப் புலவர் பெருமகனார் ஆவார்கள். தமிழ்த்தாயின் தலைமகனாகிய அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியப் பெருமகனாக அமர்ந்து, ஆற்றிய மொழித் தொண்டு தமிழ் இலக்கிய வரலாற்றில் பொன்னெழுத்தால் பொறிக்கத் தக்கதாகும். தமிழ்த்தாத்தா டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களுக்குப் பின்னர் மகாமகோபாத்தியாய என்ற இரு மொழிப் புலமைப் பட்டம் எய்திய ஏந்தல் இவர்கள்.

இத்தகைய முதுபெரும் புலவர்க்கு—தண்டமிழ்ப் பேராசானுக்கு தமிழ்நலங் காக்கும் தமிழக அரசு விழா அயர்வது பெரிதும் போற்றுதற்குரிய செயலாகும். தலை சிறந்த பெருங் கவிஞரும் புலவருமாகிய தமிழக முதல்வர் தமிழவேள் டாக்டர் கலைஞர் அவர்கள் இவ்விழாவில் ஈடுபாடு காட்டித் திருவுருவச் சிலையினைத் திறந்து வைப்பது மனமகிழ்வூட்டும் மாண்பார் செய்தியாகும். தமிழவேள் டாக்டர் கலைஞர் அவர்கள் புலவோர் மாட்டுக் கொண்டுள்ள பேருள்ளம் இதனின்று புலனாகும்.

இத்திருவுருவச்சிலை நிறுவு விழாவினை உருவாக்கிய பெருமை, தொழில் அமைச்சர் மாண்புமிகு திரு மாதவனார் அவர்களைச் சாரும். தமிழகத்தைத் தொழில் துறையில் வளப்படுத்தி வரும் உள்ள வளஞ்சான்ற தொழிலமைச்சர் அவர்கள் இப்புலவர் விழாவில் பேரார்வம் காட்டி முன்னின்று நடத்தி வைப்பது, நாட்டு மக்களுக்கு நன்மகிழ்வூட்டும் நற்றமிழ்ச் செய்தியாகும்.

அருந்தமிழ்த் தொண்டு புரிவோர்க்கு ஆக்கம் பல நல்கி, ஊக்கம் அளிக்கும் தமிழக அரசு முன்னின்று நடாத்தும் இப் புலவர் விழாவில் பங்கு கொள்வதில் நான் பெருமகிழ்ச்சி கொள்கிறேன். தலைசிறந்த தமிழ்த் தொண்டு புரியும் பேராசிரியப் பெரு மக்களுக்குத் தமிழ் நலங் காக்கும் தமிழக அரசு பட்டமும் விருதும் அளித்துச் சிறப்பிக்க வேண்டும் என்பதே என் வேணவா. அந்நற்பணி பண்டிதமணி உணர்வுகளை நற்றமிழ் நாட்டில் பரப்ப ஆற்றுப்படை பாடுவதாகும்.

பண்டிதமணியாரின் திருவுருவச்சிலை திறப்புவிழா, தக்க பெருமக்கள் முன்னின்று நடாத்துவதால் சிறப்புற நிறைவுறும் என்பது ஒருதலை. எல்லாம் வல்ல இறைவன் திருவருளால் இவ்விழா நற்பயன் நல்கி நலம் பல விளைவிப்பதாக. விழா சிறப்புற நிறைவேற என் உளமார்ந்த வாழ்த்துக்கள்.

முத்தையா செட்டியார்

நெ. து. சுந்தரவடிவேலு
துணை வேந்தர்
சென்னைப் பல்கலைக் கழகம்

சென்னை-5
15 - 12 - 1973

அன்புடையீர்,

தமிழ்ப் பெரும் புலவரும், தமிழ் அறிஞருமான பண்டிதமணி கதிரேசன் செட்டியாரவர்களுக்கு நினைவுச் சின்னம் எழுப்ப இருப்பதை அறிய மிக்க மகிழ்ச்சி. இதனை ஒட்டி மலர் ஒன்றினை வெளியிடுவது மிகப் பொருத்தமான செயலாகும்.

மலர் நல்லவண்ணம் மலர வாழ்த்துகிறேன்.

இந்த நூற்றாண்டின் திருப்பத்திலும் தொடக்கத்திலும் அருந்தமிழ்த் தொண்டு ஆற்றிய பெரியோர்களில் தலைசிறந்த ஒருவர் பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார். 'பண்டிதமணி' என்ற பட்டத்திற்கு எல்லா வகையிலும் தகுதி படைத்த தமிழ்ப் புலவர் ஏருய் அவர் இலங்கினர்.

பண்டிதமணியின் தனிப்பெருஞ் சிறப்பு அவர் வடமொழிப் புலமை மிக்கவராக விளங்கினும் தனித் தமிழ் ஆர்வலராய் விளங்கினர் என்பதே ஆகும். இதற்கு அடுத்த நிலையில் குறிக்கத்தக்க சிறப்பு தமிழ் மொழி மட்டுமே அறிந்தாரும் வடமொழி நூல்களை அறிந்து பயனடையும் வகையில் அவர் செய்த மொழியாக்கங்களே ஆகும்.

பண்டிதமணி பெரிதும் பொருட்செல்வர்கள் குடியில் பிறந்தும் புலமைச் செல்வராக விளங்கியதும் அவர்தம் தனிச் சிறப்பே ஆகும். பல்வேறு பொருள்கள் பற்றிய அவருடைய இலக்கியக் கட்டுரைகளும் (திருவாசக ஆராய்ச்சியாகிய) கதிர் மணி விளக்கமும் அவர்தம் அஃகி அகன்ற புலமைக்கு அழியாச் சான்றுகளாகும்.

கலைச் செல்வராகிய அவர்கள் சிலைவடிவில் போற்றப்படுவது வளர்ந்து வரும் தலைமுறைகட்கு உழைப்பின் உயர்வை உணர்த்தத் தக்க தூண்டுகோலாகும்.

வாழ்க பண்டிதமணி புகழ் !

நெ. து. சுந்தர வடிவேலு.

## கி. ஆ. பெ. விசுவநாதம்

திருச்சிராப்பள்ளி
14-9-1973.

தமிழகத்தில் சிறந்த தமிழ்த்தொண்டும், சைவத்தொண்டும் புரிந்து மறைந்த தமிழ்ப் பெரியார் முதுபெரும் புலவர் பண்டிதமணி உயர்திரு. மு. கதிரேசன் செட்டியார் அவர்களின் திருவுருவச் சிலை திறப்பு மகிபாலன்பட்டி மணிமண்டபத்தில் அண்மையில் நடைபெறவிருக்கிறது என்ற செய்தியும், அதன் நினைவாக மலர் ஒன்று வெளிவரவிருக்கிறது என்ற செய்தியும் என்னை மகிழ்விக்கின்றன.

உருவச்சிலைத் திறப்புவிழா இனிது நடைபெற வேண்டுமெனவும், மலர் நல்லறிஞர்களின் கட்டுரைகளைத் தாங்கி வெளிவந்து தமிழகம் முழுதும் நன்மணம் வீச வேண்டுமெனவும் முழுமனதுடன் வாழ்த்துகிறேன்-

தங்களன்பிற்குரிய,
**கி. ஆ. பெ. விசுவநாதம்**

---

## கருமுத்து தியாகராசச் செட்டியார்

### தமிழ் போன்று புகழ் வளர்க

என் இனிய நண்பர் பண்டிதமணி கதிரேசன் செட்டியார் அவர்களின் திருவுருவச்சிலை திறப்பு விழாவும், மணிமண்டபத் திறப்பு விழாவும் சிறப்புற நிகழ இருப்பதறிந்து மட்டற்ற மகிழ்ச்சி அடைகின்றேன்.

முதுபெரும் புலவர் பண்டிதமணி அவர்கள் தமிழ் மொழியில் மட்டுமன்றி வடமொழியிலும் பெரும்புலமை சான்றவர். சைவ சித்தாந்த உண்மை விளக்கத்தை நிலை கண்டுணர்ந்தவர். கேட்டார்ப் பிணிக்கும் சொல்லாற்றலும், பயில்வார் உவக்கும் எழுத்தாற்றலும் மிக்கவர். அவர்தம் ஆழ்ந்த புலமைக்கும், விளங்கிய மெய்யுணர் விற்கும் அவர் இயற்றிய கட்டுரைக்கோவை, மண்ணியல் சிறுதேர், கதிர்மணி விளக்கம் முதலிய நன்னூல்கள் தக்க சான்றாகும்.

இருபதாம் நூற்றாண்டின் தலைசான்ற தமிழ்ப் பேரறிஞரான பண்டிதமணி அவர்கள் ஆன்றவிந்தடங்கிய பண்பும், அசைவிலா இறையன்பும், பழகுதற்கினிய நட்பும், வானுயர் ஒழுக்கமும் சான்று உலகம் உவப்ப வாழ்ந்து, வானுறையும் அமரர் நிலை அடைந்து சிறந்தவர். அப்பெருமகனாரின் நினைவை நிலைபெறுத்தும் திருவுருவச் சிலை, மணிமண்டபத் திறப்புவிழாக்கள் இனிதே நிகழவும், பண்டிதமணி அவர்கள் புகழ் தமிழ் உள்ளளவும் வளர்ந்தோங்கித் திகழவும் ஆலவாய் அவிர்சடை அண்ணல் அருள் புரிவாராக.

**கருமுத்து தியாகராசச் செட்டியார்**

**எஸ். பி. ஆதிநாராயண்**
துணைவேந்தர்
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

அண்ணாமலை நகர்
15—12—73

தமிழும் வடமொழியும் வல்ல பெரும்புலவர் பண்டிதமணி மகாமகோபாத்திய மு. கதிரேசச்செட்டியார் அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் விரிவுரையாளராகவும் பேராசிரியராகவும் ஆராய்ச்சித் துறைத் தலைவராகவும் இருந்து மாணவர்களுக்கு அரிய நூல்களைச் சுவை பொருந்தப் பாடம் சொல்லியும், கௌடலியர் எழுதிய அர்த்த சாத்திரத்தை மொழிபெயர்த்தும் திருவாசகப் பகுதிகளுக்கு அரிய உரை வரைந்தும், தமிழிசை இயக்கத்திற்குத் துணைபுரிந்தும், தமிழ் மொழிக்கு அரும்பெருந் தொண்டுகளைச் செய்துள்ளார்கள். அவர்கள் பிறக்கும் பெருமையுடையது, இராமநாதபுரம் சில்லாவிலுள்ள மகிபாலன்பட்டி என்னும் ஊராகும். இவ்வூர் சங்க காலத்தில் பூங்குன்ற நாட்டின் தலைநகராகிய பூங்குன்றம் என்பதாகும். இவ்வூரிற் பிறந்த சங்கப் புலவராகிய கணியன்பூங்குன்றனர் என்ற பெரியோர் பாடியது 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்னும் முதற்குறிப்புடைய புறநானூற்றுப் பாடலாகும். இப்பாடல் உலக முழுவதனையும் ஒரு குடும்பமாகக் கருதி அறம் கூறிய பண்டைப் புலவரின் மன விரிவுக்கும் ஆழ்ந்த வாழ்க்கையநுபவத்திற்கும் எடுத்துக் காட்டாக விளங்குதலை யாவரும் உணர்வர்.

இவ்வாறு சங்ககாலத்தில் கணியன் பூங்குன்றனரும், இக்காலத்தில் பண்டிதமணி மகா மகோபாத்தியாய மு. கதிரேசச் செட்டியாரவர்களும் பிறக்கும் புலமை வளம் நிறைந்த பூங்குன்ற நாட்டின் தலைநகராகிய மகிபாலன்பட்டியிலே புலவர்களுக்குச் சிறப்புச் செய்யும் நோக்கத்துடன் தமிழ்நாடு அரசு மணிமண்டபம் அமைப்பது தமிழுக்கும் கல்வி வளர்ச்சிக்கும் சிறப்பும் ஆக்கமும் அளிக்கும் நற்பணியாகும். புலமைக்குச் சிறப்பளிக்கும் இப்பணியினைச் செய்ய முன்வந்த அரசினர்க்குத் தமிழ் மக்களின் பாராட்டும் எங்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் நன்றியும் வாழ்த்தும் என்றும் உரியவாகும்.

---

**மு. வரதராசன்**
துணைவேந்தர்
மதுரைப் பல்கலைக் கழகம்

பல்கலை நகர்
14 - 12 - 1973

இந்த நூற்றாண்டில் தமிழ் இலக்கிய இலக்கணங்களில் ஆழ்ந்து கற்றுப் புலமை நிரம்பிப் பலருக்குக் கற்பித்துப் புகழ் எய்தி பெருமக்களுள் பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் அவர்கள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர் ஆவார். அவர்தம் புலமை ஆழமுடையது, நுட்பமுடையது. பரப்புமுடையது. வடமொழி நூல்களையும் கற்றுத் தெளிந்த காரணத்தால் இலக்கியங்களை ஒப்பிட்டு, அவற்றின் சிறப்புகளை எடுத்துரைப் பதிலும் அவர் வல்லவராக விளங்கினர். வடமொழி மிருச்சகடிகத்தை "மண்ணியில் சிறு தேர்" என்ற பெயரில் மொழிபெயர்த்து அழகிய நாடக நூலாகத் தமிழுக்கு நல்கியுள்ளார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராக அமர்ந்து, அவர் ஆற்றிய தொண்டு போற்றுதற்கு உரியது. சென்னைப் பல்கலைக் கழகத்தில் பாடநூல் குழுவில் இருந்து அவர் சீரிய தொண்டு புரிந்துள்ளார்; கூட்டங்களில் விரிவுரையாற்றும் போதும் தலைமையுரை வழங்கும்போதும் அறிஞர் பெருமக்கள் அவருடைய சொல் விருந்துகளைக் கேட்டுப் பெருமகிழ்வு எய்தினர். அகநானூறு, குறுந்தொகை முதலிய சங்க நூல்களிலும், சிலப்பதிகாரம் முதலிய காவியங்களிலும் அவருக்கிருந்த ஈடுபாடு பெரிது. அவற்றின் இலக்கிய நலன்களை அவர் எடுத்தோதிய முறை தனிச் சிறப்பு வாய்ந்தது. இடையிடையே நுட்பமான நகைச்சுவை தோன்ற அவர் ஆற்றிய சொற்பொழிவு தனிச் சுவையுடன் திகழ்ந்தது. மகிபாலன்பட்டி என்ற ஊரின் பெயர் அத்தகைய புலவர் பெருமகனால் விளக்கம் பெற்றது எனலாம். அவர்க்கு உருவச்சிலையை நிறுவி, தமிழ் மக்கள் அவர்தம் நினைவைக் கொண்டாடுவது மிகப் பொருத்தமாகும். வாழ்க பண்டிதமணி அவர்கள் புகழ்!

மு. வரதராசன்

**திருபழநி ஆதீனம்** குருகுலர், மதுராந்தகம்
*(திருக்குறள் பீடம்)* *4 - 9 - 1973*

திருவருள்!

*4-9-73* அன்புரை நாள் கடந்து கிடைத்தது. முதுபெரும் புலவர்பிரான் திரு. பண்டிதமணியவர்கட்குத் 'திருவுருவச் சிலைத்திறப்பும், மணிமண்டபத் திறப்பும்' செய்தக்கன; அவர்கள் தோன்றிய மகிபாலன்பட்டியிலேயே நிகழ்தல் இன்னுஞ்சிறப்பு' 'ஒரு குலமும் சுற்றமும் ஓரூரும் நீ' என்னும் அருட்கருத்துப்படி, அவரவர் உடம்பை அவரவர் சிறப்பித்துக் கொள்ள முயல்வது போல், பிறவியில் நேர்ந்த அவரவர் ஊர் முதலியனவும் அருட்கொடை எனக்கருதி, மாட்சி செய்து மேம்படுத்துவதும் முறைமையே. ''எவ்வழி நல்லவர் ஆடவர் அவ்வழி நல்லை வாழிய நிலனே'' என்னும் சான்றோர் மொழி எவ்வளவு உண்மையாயிருக்கிறது! மணிமண்டபக் குழுவினர்க்கும் மலர்க் குழுவினர்க்கும் குருகுலத்தின் வாழ்த்து! விழா இனிது நிகழ்க!

அன்புள்ள,
அழகரடிகள் *(இளவழகனர்)*

---

தமிழ்ப்பெரும் புலவர், கணியர், சங்கரநயினர் கோயில்
**டாக்டர் இ. மு. சுப்பிரமணியபிள்ளை** *14 - 9 - 1973*
அமைச்சர், சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம்

மகிபாலன் பட்டி, பண்டிதமணி, முதுபெரும் புலவர் மு. கதிரேசச் செட்டியாரவர்கள் ஈடும் எடுப்பும் இல்லாத தமிழ்ப் பெரும்புலவர். எடுத்துக்கொண்ட பொருளை மிகவும் தெளிவாக விளக்கிப் பேசுவதில் மிகவும் வல்லவர். பேசும் பொருள் களைப் பற்றிய விவரக் குறிப்புச் சுவடி எப்போதும் கையில் விளங்கும்.

இவர்களுக்கு ''முதுபெரும் புலவர்'' என்ற பட்டம் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தால் சென்னையில் நடைபெற்ற புலவர் மாநாட்டில் செப்புப் பட்டயத்துடன் வழங்கப்பெற்றது. பல அருமையான நூல்களுக்கு ஆசிரியராகிய இப்புலவர் பெருமான் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகத் திகழ்ந் தார்கள். இவர்கள் பெரும்புகழ் தமிழ் வழங்கும் உலகமெங்கும் சிறந்தோங்கி அழியாது என்றும் நிலைபெறுவதாக.

''கதிரேசன் என்றபெயர்க் கேற்பக் கனமும்
மதுரேசன் மாண்பருளும் பெற்று — மதிவலவர்
எல்லாரும் போற்ற இனிதுயர்ந் தோங்கிய
நல்லார் இவர்க்கிணையார் நாடு.

இ. மு. சுப்பிரமணிய பிள்ளை

**வி. ஐ. சுப்பிரமணியம்,** எம்.ஏ., பிஎச்.டி.
பேராசிரியர்
கேரளப் பல்கலைக் கழகம்

திருவனந்தபுரம்

## வாழ்த்து

பண்டிதமணி மு. கதிரேசச்செட்டியார் அவர்கள் கைதேர்ந்த இலக்கியத் திறனாய்வாளர். சைவத் திருமுறைகளில் ஆழமான புலமையுள்ளவர். சுவையான தமிழ் உரைநடையின் தந்தை. சிறந்த வட மொழிப் புலவர். மாணவர்களை ஊக்கு வித்து அவர்களின் நல்லொழுக்கத்தால் பெருமைப்பட்டவர்.

அவர் கூறிய சீவக சிந்தாமணி உரை முப்பது ஆண்டுகளுக்கப்புறம் என் மனதில் இன்னும் பதிந்து நிற்கிறது. மலர்ந்த முகத்துடன் கூறும் மேற்கோள்கள் இன்னும் நினைவில் நிற்கின்றது.

அவருக்கு உருவச் சிலையும் மணி மண்டபமும் காண முற்பட்ட உங்களைப் பாராட்டுகிறேன்.

**வி, ஐ. சுப்பிரமணியம்**

---

**தி. கி. நாகாம்பாள்** எம்.ஏ.
தமிழ்ப் பேராசிரியை
மகாராணி கல்லூரி

பெங்களூர்
15-9-1973

தமிழர் போற்றும் தவப்புதல்வர் முதுபெரும் புலவர் பண்டிதமணியார் அவர்களின் திருவுருவச் சிலைத் திறப்பு விழாவும், மணிமண்டபத் திறப்பு விழாவும், சிறப்பு மலர் வெளியீடும் அதிவிமரிசையாக மகிபாலன்பட்டியில் நடைபெறவிருப்பதறிய மிக மகிழ்கிறேன்.

அறிஞர் பெரியோர் பெருமையும், அவர்தம் நல்வாழ்வும், நவின்ற நற்கருத்துக்களும் நமது இளைய சமுதாயத்தினர் உணர்ந்து, நினைவு கூர்ந்து, போற்றிப் பாராட்டி நல்வழி நடக்க இதுபோன்ற விழாக்கள் வழிகாட்டிகளாக அமையும் என்பதில் ஐயமில்லை.

இது நாளில் இத்தகு நற்பணியை நன்றிக்கடனாக அமைத்துதவும் நல்லோர் பெரியார் அனைவர்க்கும் எனது நல்வாழ்த்துக்களும் பாராட்டுதலும் உரியன. விழா எல்லாச் சிறப்புடனும் நடைபெறவும், பண்டிதமணி அவர்களது நினைவு இளைய வரிடத்து நிலைபெறவும், அவர்தம் பரம்பரை பல்லாண்டு பயனுற்று வாழவும் எனது மனமார்ந்த நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இங்ஙனம்
அன்புள்ள அன்னார் மாணவி
**தி. கி. நாகாம்பாள்.**

பண்டிதமணியாரின் திருவுருவச் சிலை திறப்புவிழா

# வாழ்த்துப்பா

—திரு. கும. சுப்பிரமணியன், எம்.ஏ.

தங்கத் தமிழகமும் தண்டமிழும் வீறுடனே
தங்கப் புரந்தருளும் தக்க எழிற்குரிசில்
துங்கமிகு டாக்டர் துலங்கு கலைஞர்பிரான்
எங்கள்தமி ழகமுதல்வர் ஏற்றம் தவழுமரோ

சட்டக் கலையிற் சதுரன் நுழைபுலம்சேர்
பெட்டக(ம்)உற் றோர்க்(கு)உதவும் பெம்மானே — பெட்போ(டு)
அருந்தமிழ் நா(டு)ஏத்தும் அமைச்சன் இனிமை
தரும்குணங்கள் சேர்மா தவன்

கற்றோர்க்(கு) உயிரனையன் காருணிகன் டாக்டர்,கொடை
வெற்றிமிகு ராஜாசர் வீறுற்றோன் — மற்றிவனே
ஆண்டசெட்டி நாடாளும் அண்ணல்தமிழ்ப் பாவலரால்
காண்டகுமுத் தையவள்ளல் காண்

குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்தில் 28—1—1951 ஆம் நாள் தமிழ்த் திருநாளில், செட்டிநாட்டு அரசர் டாக்டர் ராஜா சர் முத்தையா செட்டியார் அவர்கள், பண்டிதமணி அவர்களுக்குப் பொன்னாடை போர்த்திப் பாராட்டிய ஞான்று, பண்டிமணி அவர்கள் செட்டிநாட்டு அரசர் அவர்களைப் பாராட்டி வாழ்த்தி வழங்கிய வாழ்த்துப்பா. இவ் வாழ்த்துப்பாவினை இம்மலருக்கு அளிப்பதில் நான் பெருமகிழ்வு கொள்கிறேன்.

பொன்னாடை போர்த்தும்கை பொற்பொதுவைக் கூப்பும்கை
எந்நாளும் கல்விதனக்(கு) ஈயும்கை — முன்னாகை
நாவலர்க்கும் பாவலர்க்கும் நாடி வழங்கும்கை
காவலனும் முத்தையன் கை.

# தமிழ் வளர்த்த செட்டிநாடு

மாண்புமிகு திரு. செ. மாதவன்,
தமிழ்நாடு தொழில் அமைச்சர்

தமிழ் வளர்த்த வரலாற்றில் செட்டிநாட்டுப் பகுதிக்குத் தனி இடமுண்டு. கடல் கடந்து தமிழ் வளர்த்த பெருமையும் உண்டு. திரைகடலோடியும் திரவியம் தேடு என்ற சொற்றொடரை உருவாக்கிய பெருமையும் செட்டிநாட்டுக்கு உண்டு. நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் பல்வேறு சிறப்புக்களைத் தமிழகத்திற்குப் பெற்றுத் தந்தவர்கள். வெளிநாடுகளில் வணிகம் வளர்த்தார்கள். அதோடு தமிழ் மொழி, பண்பாடு நிலைத்து வளர வெளிநாடுகளில் வித்திட்ட பெருமை நகரத்தார் பெருமக்களுக்கு உண்டு. இத்தகைய பெருமைகளைப் பெற்ற நகரத்தார் குடியில் தமிழறிஞர்கள், தமிழ் வளர்த்த சான்றோர்கள் பலர் தோன்றி வாழ்ந்தனர். செட்டிநாட்டு அரசர் பரம்பரையினர் தமிழ் உலகத்திற்குத் தந்த பெருஞ்செல்வம் அண்ணாமலை பல்கலைக் கழகம். தமிழ்ப் பேரறிஞர்கள், பெரும்புலவர்கள் தோன்றி வளர்ந்து தமிழ் வளர்த்த பல்கலைக் கழகம். அந்தத் தமிழறிஞர்களில் சிறப்பு பெற்ற ஒருவர் பண்டிதமணி கதிரேசஞ் செட்டியார் ஆவார்கள்.

செட்டிநாட்டுப் பகுதியில் மகிபாலன்பட்டியில் வாழ்ந்த பேரறிஞர் பண்டிதமணி அவர்களின் புலமையைப் போற்றாதார் இல்லை. அவருடைய இலக்கியப் படைப்புகளை மாணவப் பருவத்தில் படித்து இன்புறும் வாய்ப்புப் பெற்றிருந்தேன். செல்வம் சேர்க்கும் செட்டிநாட்டில் அறிவுச்செல்வம் சேர்த்த பெருமை அவருக்கு உண்டு. தமிழ் மொழி ஈந்திருக்கும் கருத்துக் கருவூலங்களையும் அறிவுப்பெட்டகங்களையும் கற்றறிந்த செந்தமிழ்ச் செல்வராக விளங்கினார்.

தமிழ்மொழிப் பற்று மிகுந்த தமிழறிஞர்களிடம் தமிழ் இனப்பற்றும் சேர்ந்து காண்பது அரிதாகும். பண்டிதமணி அவர்கள் இனப்பற்று மிக்கவராக விளங்கினார் என்பதை, அண்மையில் 'செந்தமிழ்ச் செல்வி' இதழில் வெளிவந்த குறிப்பு உணர்த்தியது. 1973 - ஆம் ஆண்டு மே இதழில், பண்டிதமணி அவர்கள் இலங்கை சென்று, யாழ்ப்பாணத்தில் 1933 - ஆம் ஆண்டு நடந்த ஆரிய திராவிட மொழி வளர்ச்சி சங்கத்தின் பதினோராவது ஆண்டு நிறைவு விழாவில் தலைமை ஏற்று உரையாற்றியுள்ளார். அவர் தனது உரையில்,

> "தென்னிந்தியாவிலுள்ள பிராமணர் ஒரு வகுப்பாராகவே இருந்து தமிழைத் தாழ்த்தியடக்கியும், சமஸ்கிருதத்தை ஆதரித்துயர்த்தியும் வருகின்றனர் எனவும், சென்னை, அண்ணாமலை என்னும் இரு பல்கலைக் கழகங்களிலும் பிராமணர் வலுத்த கட்சியா யிருந்து அத்துணை பலமாகத் தமிழுக்குத் தடை செய்து வருவதால் தமிழர்கள் தங்கள் தாய்மொழியின் நிலையினை உயர்த்துதற்கு ஒன்றுமே செய்துகொள்ள முடியாதவராகின்றனர் எனவும் பேசியுள்ளார்.

தமிழினப் பற்றேடு தமிழ் விரோதிகளைச்சாடி, தமிழ் முழக்கம் செய்தபோது கூடியிருந்த் மக்கள் வெள்ளம் கையொலி எழுப்பி மகிழ்ச்சி ஆரவாரம் செய்த குறிப்புகளையும் படித்தேன். தமிழ், சமஸ்கிருதம் இருமொழிகளிலும் புலமையுடையவர் பண்டிதமணி அவர்கள். சமயப்பற்று மிக்கவர். வடமொழி நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்தவர். இத்தகைய பாரம்பர்யம் பெற்ற பண்டிதமணி அவர்கள் இனப்பற்று மிக்கவராய், தமிழைச் சாடும் கூட்டத்தினரை மக்களிடையே நிறுத்தும் உள்ள உறுதியுள்ளவராய்க் காட்சி அளித்துள்ளார். தமிழ்ப் புலமை பெற்ற தமிழினத் தலைவர்களுக்குச் செய்யப்பட்ட அநீதிகள் பற்றிய குறிப்புகளும் 'செந்தமிழ்ச் செல்வியில்' வெளியிட்டிருந்தார்கள்.

நம்முடைய பகுதி-என்னுடைய தொகுதி-மகிபாலன்பட்டி சிற்றூரில் தோன்றிய தமிழ்ப் பெரும்புலவர் பண்டிதமணி அவர்களின் மொழிப்பற்றும் இனப்பற்றும் என்னை மெய்சிலிர்க்க வைத்தன. செட்டிநாட்டுத் தமிழறிஞர் பேராசிரியர் மெ. சுந்தரம் அவர்களிடத்தில் எனது உணர்வுகளைப் பரிமாறிக்கொண்டேன். அதன் விளைவு, பண்டிதமணி அவர்களுக்கு நினைவுச் சின்னம் எழுப்ப முடிவு செய்தோம். தமிழ் காத்து வளர்த்த செட்டிநாட்டு அரசர் திரு. முத்தையா செட்டியார் அவர்கள் ஆசி அளித்தார்கள். செட்டிநாட்டுத் தமிழ்ப் பெரியார்களின் ஆதரவோடு பண்டிதமணி அவர்களின் திருவுருவம் எழுப்பப்படுகின்றது.

* * *

சிறந்த நூலுரைகளை ஆக்கிப் புலமையரங்கேறினர்க்குத் தகுதியான பட்டங்களும் பரிசுகளும் வழங்கி அவரைப் பெருமைப் படுத்தல் வேண்டும். தமிழினியல்பை நன்குணராது ஆரவார நீர்மையராய்ப் போலி நூலுரைகளை வெளிப்படுத்தித் தமிழகத்திற்கும் தமிழ் மொழிக்கும் இழுக்குண்டாக்கும் போலிப் புலவர்களை அறிந்து அறிவுறுத்து, அவரை நல்லியற்புலவராக்க முயல வேண்டும். உண்மைத் தமிழறிஞரை ஒடுங்கியிருக்கவிடாது சிறப்பிடனளித்து உவகையுறுத்தல் வேண்டும். இயல் வரம்புடைய நம் மொழிக்கண் அவ்வரம்பிகந்து வெளிப்படும் புலத்துறைக்கொல்லாப் போலி நூலுரைகள், செவ்விதின் ஆக்கப்பட்ட சீரிய நூல்களுக்குக் களைகளாக நெருங்கிப் படர்ந்து தீங்கு புரிகின்றனவதாலின், அக்களைகட்டல் சொல்லேருழவராகிய தமிழ்ப்புலவர் கடனாகும். அக்களை களையப்பட்டாலன்றி நம் செந்தமிழ்ப் பைங்கூழ் வளர்தற்கு இடமின்றாகும். தீஞ்சுவை மிக்க திருவருட் கனியை நமக்கு உதவத் தோன்றிய செழுந்தமிழ்ப் பைங்கூழைப் பல்லாற்றானும் போற்றிக் காத்தாலன்றோ அந்நற்பயனை நன்கு பெற முடியும்.

உரைநடைக் கோவை (இரண்டாம் பகுதி)
**பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார்**
*(பக்கம் 56-57)*
*(25-4-1941)* மகிபாலன்பட்டி

# சபை தந்த பண்டிதமணி

பழ. சிதம்பரம் செட்டியார், தலைவர், சன்மார்க்க சபை, மேலைச்சிவபுரி.

நீல வானிற்கொரு கோல விளக்காய் அணி செய்து திகழும் செஞ்ஞாயிற்றினை நாம் எண்ணுந் தொறும், வெங்கதிர் விரித்திருளோட்டும் அஞ் ஞாயிற்றின் ஒளி வெயிலும் உடன் தோன்று மாறு போலத் தமிழ் கூறும் நல்லுலகிற்கணியாக விளங்கிய பண்டிதமணி அவர்களைப்பற்றி எண்ணுந்தொறும், அவர்களோடு நெருங்கிய தொடர்புடைய மேலைச்சிவபுரிச் சன்மார்க்க சபையும் அறிஞர் மனக்கண்முன் காட்சியளித்தல் இயல்பு.

I

பண்டிதமணியவர்கள் இருபதாம் நூற்றுண்டில் தோன்றிய தமிழ்த்தாயின் தவப்புதல்வர்களுள் தலைசிறந்தவராவார்கள். "யாதும் ஊரே யாவரும் கேளிர்'' என்பது முதலான ஒள்ளிய தெள்ளிய உண்மைக் கருத்துக்களைத் தீந்தமிழில் வடித்து, உலகிற்குத் தந்து, வான்புகழ் பெற்ற பாண்டி மண்டலத்துப் பூங்குன்ற நகரம், பன்னூறு ஆண்டுகட்குப் பின்னர் கி.பி. 1881-இல் கணியன் பூங்குன்றனுரையொப்ப, ஈடும் எடுப்புமில்லாப் பெரும்புலமை நலஞ்சான்ற பண்டிதமணி மு. கதிரேசனர் அவர்களை ஈன்று, தமிழுலகிற்குத் தந்து, தன் தொல்புகழைப் புதுக்கிக் கொண்டது. இப்பூங்குன்ற நகரம் இக்காலத்தில் மகிபாலன்பட்டி என வழங்கப் பெறுகிறது.

கதிரேசனர் ஏறத்தாழ தமது ஏழாம் வயதில் உள்ளூர்த் திண்ணைப்பள்ளியிற் சேர்ந்து கல்வி கற்ருர். நுட்பமாகவும், விரைவாகவும் உணர்தல், உணர்ந்தவற்றை மறவாமை ஆகிய அறிவின் மாண்பு இவரிடத்தில் இயல்பாகவே வாய்ந் திருந்தது. எழுமைக்கும் ஏமாப்புடைய கல்வி முன்னைத்தொடர்பால் இன்சுவைப் பண்டம்போல் இவருக்கு இனித்தது. எண்ணறிவும் எழுத்தறிவு மாகிய ஊற்றுக்கண்கள் திறந்துகொண்டன. ஏழு திங்களிலேயே இவரது தொடக்கக் கல்வி நிறைவுற்றது. இவர் ஆசிரியரிடம் நேர்முக மாணவராக அமர்ந்து தமிழ் கற்றது இவ்வளவே. ஆயினும், கற்ற பாடங்களை எண்ணியெண்ணி இன்புற்ருர். பண்டைத் தொடர்புடைய கல்வி காந்தம் போல் இவருள்ளத்தைத் தன்பால் ஈர்த்தது. மேன்மேலும் கற்க வேண்டும் என்ற ஆர்வம் பொங்கியெழுந்தது.

அக்காலத்தில் அவ்வூரிலும் சுற்றுப்புறங் களிலும் மேற்கல்வி கற்பிக்கும் கல்வி நிலையமோ, தனிப்பட்ட ஆசிரியரோ இருக்கவில்லை. எண்ணியதை எண்ணியவாறே முடிக்கும் வினைத் திட்பம் இளமை முதலே இவரிடம் இருந்ததால் இஃதருமையென நினைத்து இவர் அயர்ந்துவிட வில்லை. தமது வழிபடு கடவுளாகிய கணேசப் பெருமானை வழிபட்டு, ஊக்கத்துடன் மேல் கற்க வேண்டிய நூல்களைப்பற்றி யறிந்து, அக்காலத் தில் தமக்குக் கிடைத்த நிகண்டுகள், நீதி நூல் கள், அந்தாதிகள், பிள்ளைத்தமிழ் நூல்கள் ஆகிய சிற்றிலக்கியங்களையும், கம்பராமாயணம், திருத் தொண்டர் புராணம் ஆகிய பேரிலக்கிய நூல் களையும் தாமாகவே நன்கு மனப்பாடஞ் செய்தல், சிந்தித்தல், ஐயுற்ற பொருளை அறிந்தார்பாற் கேட்டுத் தெளிதல், மேலே கற்க வேண்டிய நூல் களைப்பற்றி அறிதல் ஆகிய முறைகளை மேற் கொண்டார். இவ்வாறு வரன்முறையாகக் கற்ற தனல் நூற்பொருள்கள் இவருக்கு எளிதில் புலப்படுவனவாயின. குல மரபுப்படி வணிகத் தொழிலின் பொருட்டு ஈழநாடு சென்றிருந்த காலத்தும் இம்முறையை இவர் போற்றி யொழுகி வருவாராயினர்.

இவரது பதினன்காம் வயதில் இவரது தந்தை யார் இறைவனடி சேர்ந்தார். கதிரேசனர் ஈழ நாட்டிலிருந்து மீண்டு வந்து குடும்பத்தலைமை யினை ஏற்ருர். இறைவன் இவரை வணிகத் துறையிலிருந்து தடுத்தாட்கொண்டு, தமிழ்ப் பணியிலும் சைவப் பணியிலும் ஈடுபடுத்தத் திருவுளம் கொண்டான் போலும். இவரது குழவிப் பருவத்தே தோன்றி இவரைவருத்திய இளம்

பிள்ளை வாத நோய் மீண்டும் தலையெடுத்தது. இவருடைய இடக்காலும் இடக்கையும் ஆற்ற லிழந்தன. மனத்திட்பம் வாய்ந்த கதிரேசனார் இவ்விடுக்கணைக் கண்டு அலமந்து போனாரில்லை. உலையா முயற்சியே களைகணாகக்கொண்டு, ஒரு முகமாகத் தமது தமிழ்ப் புலமை வேட்கையின் தலைநிற்பாராயினார். முருகி முதிர்ந்த அவ்வேட்கை யால், நீர் வேட்கை மிக்கோன் அஃது இருக்கும் இடந்தேடிச் செல்வது போலப் புலவர் இருக்கும் இடந்தேடிச் சென்று, தமது முறைப்படி தாமே படித்தல், மனப்பாடஞ் செய்தல் முதலியவற்றை மேற்கொண்டார். நாளிதழ் வாயிலாகத் தம் உலகியல் அறிவைப் பெற்று, அவ்வப்போது புதிது புதிதாக வெளிவந்த சிந்தாமணி, சிலப்பதி காரம் முதலிய காவியங்களையும், நன்னூல் முதலிய இலக்கண நூல்களையும் கற்று, அணி நலம் பொழியும் சுவைப்பாக்கள் இயற்றும் திறம் பெற்றுத் திகழ்வாராயினார். தாமாகவே நூல் களைப் படித்துக் கற்றதனால் கற்குந்தோறும் இவரது நுண்ணறிவிற்குப் பற்பல இலக்கிய நயங்கள் தோன்றலாயின.

முல்லைக்கொடிக்குத் தேரீந்த அருளாளனும் கொடைப்புகழ் சிறந்தோனுமாகிய பாரி வள்ளலின் பறம்புமலைச் சாரலில் உள்ள மேலைச் சிவபுரி என்னும் நகரின்கண், வ. பழ. சா. என்ற பெருமைசால் குடும்பத்தில், அக்காலத்தில் பழநியப்ப செட்டியார் என்ற உயர்குணச் செம்மல் தண்ணிலவெறிக்கும் நிறைமதி போலச் சிறந்து விளங்கினார். உலகியல் அறிந்த பேரறிவாளராய், காட்சிக்கெளியராய்க் கடுஞ்சொல்லரல்லராய், தூய சிந்தையராய்த் திகழ்ந்த அவர்பால் அற உணர்வும், கடவுட்கொள்கையும் கொடையுள்ள மும் மேம்பட்டு விளங்கின. கற்றுவல்ல புலவரும் இசைவாணரும் அவரது அருமை பெருமைகளை உணர்ந்து, அவர்பால் வந்து, தமது புலமை நலந் தோன்றப் பாடி பரிசில் பெற விரும்பி, அவரை நாடி வருவராயினர். அவரும் தம்மை நாடி வந்த புலவர்தம் கலை இலக்கிய நலங்களைக் கேட்டு, உவகையுற்று, அவர்தம் மனம் உவப்பப் பாராட்டி உபசரித்துப் பரிசில் தந்து, இன்புறுத்தி அனுப்புவார். உவர்க்கடலன்ன பெருஞ்செல்வர் கட்கிடையே கிணற்றூற்றுப் போன்ற வள்ளல் பழநியப்பரின் செல்வம், கற்றோர்க்கும் மற்றோர்க் கும் பயன் விளைத்து வந்தது. அவ்வள்ளலின் குடும்பப்புலவராக நெடுவை இராமசாமி ஐயங்காரும், தேவார இசைவாணராகத் திரு ஞானசம்பந்த முதலியாரும் இருந்து, அவரை மகிழ்வித்து வந்தனர்.

கதிரேசனார் மேலைச்சிவபுரியில் உள்ள தமது தமக்கையார் இல்லத்திற்கு இளமை தொட்டே அடுத்தடுத்து வருவது வழக்கம். அவ்வாறு வருந் தோறும் வருந்தோறும், புலவர்கள் சூழ வீற்றிருக் கும் வள்ளல் பழநியப்பரைக் கண்டு உரையாடி மகிழ்வார். புலவர்கள் கூறும் இலக்கிய நயங் களைச் செவி மடுப்பார். புதியனவாய்த் தாங்கற்ற இலக்கியங்களையும், சைவ சமயக் கருத்துக் களையும் கூறி மகிழ்விப்பார். பழநியப்பர் கதிரேசனாரின் நுண்ணறிவையும் முயற்சியையும் கண்டு மகிழ்வார்; இலக்கிய நயத்தைப் பாராட்டு வார். ஊக்கம் ஊட்டுவார். "சான்றோர் சான்றோர் பாலராகுப" என்ற கருத்துப்படி, இவ்விருவரும் சிறந்த கெழுதகை நண்பராயினர். உடன்பிறந்தா ரொத்த உணர்வு இருவருள்ளத்தும் ஓங்கிற்று. ஒப்புரவாளராகிய பழநியப்பர் உள்ளத்தில் கதிரேசனார்க்கு ஒல்லும் வகையெல்லாம் உதவி செய்ய வேண்டும் என்ற எண்ணம் உருவாகியது. தம் கோயிற் பங்காளியான கதிரேசனார்க்குப் பழநியப்பர், மலாய் நாட்டில் ஈப்போ நகரில் உள்ள தம் கடையில் பங்கு வைத்துக் கொடுத்து, வணிகப் பங்காளியாகவும் ஆக்கிக்கொண்டார். தடைப்பட்டிருந்த கதிரேசனாரின் திருமணம் பழநியப்பரின் முயற்சியாலும் உதவியாலும் 1912-ஆம் ஆண்டில் இனிது நிகழ்ந்தது.

ஓரமயம், கதிரேசனார் தம் உடற்பிணி மருத்துவத்தின் பொருட்டுப் பொன்னமராவதி நண்பர் டாக்டர் வேணுகோபால் நாயுடு மருத்துவ மனைக்குச் சென்றகாலை, எதிர்பாராத வகையில், மகாவித்துவான் சோழவந்தானூர் அரசஞ் சண்முகனாரின் அறிமுகம் இவருக்கு ஏற்பட்டது. சண்முகனார் டாக்டர் வாயிலாக வள்ளல் பழநியப்பரைப் பற்றிக் கேள்வியுற்று, வள்ளலைக் காண்பதற்காக வந்து, மருத்துவ மனையில் தங்கி யிருந்தார். அரசஞ்சண்முகனார் மாபெருங் கல்வியாளர். "இலக்கணக்கடல்" என்று புலவ ரெல்லாம் போற்றும் பெருஞ்சிறப்புடையவர். சண்முகனாரும் கதிரேசனாரும் அளவளாவி, நவில் தொறும் நூல் நயம் ஆர்ந்தனர். சண்முகனார், கதிரேசனாரின் கூர்த்த மதியையும், சீர்த்த முயற்சி யையும், சிறந்த கல்வியையும் வியந்து பாராட்டி மகிழ்ந்தார். கற்றாரிருவரும் ஒருவரையொருவர் காமுற்றனர். கருத்தொன்றிய நண்பராயினர். கதிரேசனார் சண்முகனாரைப் பழநியப்பருக்கு அறிமுகப்படுத்தி இனிய நண்பராக்கினார். அடுத் தடுத்துத் தம் இல்லத்திற்குப் பல முறை அழைத்தார். சங்க இலக்கியம், தொல்காப்பியம் முதலியவற்றைப் படித்துச் சிந்தித்து, அவர்பால் ஐயங்களைக் கேட்டறிந்து தெளிவுற்றார். இப் பயிற்சியால் கதிரேசனார் சண்முகனாரைத் தம் ஆசானாக மதித்தார். ஓரமயம், சண்முகனார் பிறர்பால் வாங்கியிருந்த பணக்கடனைத் தீர்த்தற்

பொருட்டுத் தாமும் தக்க தொகை தந்து, தக்காரிடம் நன்கொடையும் திரட்டித் தந்துள்ளார்.

சண்முகனார் வாயிலாகக் கதிரேசனுர்க்கு மு. ரா. கந்தசாமிக் கவிராயர், இரா. இராகவ ஐயங்கார், நாகை வேதாசலம் பிள்ளை முதலிய பெரும் புலவர்கள் தொடர்பும், மதுரைத் தமிழ்ச் சங்கத் தொடர்பும் உண்டாயின. மதுரைத்தமிழ்ச் சங்கத்திலும், நாகைச் சைவ சித்தாந்தக் கூட்டத்திலும் சொற்பொழிவாற்ற வாய்ப்புண்டாயிற்று. நாகையில் திருப்பாதிரிப்புலியூர் ஞானியாரடிகளின் ஆற்றொழுக்கான சொற்பொழிவைக் கேட்டது முதல், தாமும் அவ்வாறே பேச விரும்பும் பொருள்களை முறைப்படுத்திக்கொண்டு, நிரந்து இனிது பேச விரும்பினர். கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க்கேளாரும்வேட்ப மொழியும் சொற்பயிற்சியை மேற்கொண்டார். கதிரேசனுர் காரைக்குடியில் சொற்பொழிவாற்றிய போழ்து, சைவப் பெரியார் காரைக்குடி சொக்கலிங்க ஐயா அவர்கள், இவரது இலக்கிய இலக்கணப் புலமையைப் பாராட்டிச் சைவ சித்தாந்த நூல்களிலும், சைவத்திருமுறைகளிலும் முறையான பயிற்சி பெறத் தூண்டினர். கதிரேசனுரும் இரண்டாண்டுகள் அடுத்தடுத்து அவரையணுகிப் பழகி, அத்துறையில் முறையான சிறந்த பயிற்சியைப் பெற்றுர். தாமின்புறக் கற்ற கல்வியினைத் தமது சொற்பொழிவுகள் வாயிலாக உலகின்புறுவதையுணர்ந்த இவர், மேலும் மேலும் கற்றலை விரும்பினர். இளங்கோ, கம்பர் முதலிய காவியப்புலவர்தம் புலமை இன்பத்தினை உணர்ந்ததைப் போலவே, வடமொழிக் காவியப்புலவர்களாகிய காளிதாசன், பாசன் முதலியோரின் இலக்கியங்களின் இன்பத்தினை நுகரவும், சைவ ஆகமங்களின் நுட்பங்களையுணரவும் எண்ணிப் பெருவேட்கையுற்றுர். வடமொழி வித்துவானுன தருவை நாராயண சாத்திரியாருக்கு ஐந்தாண்டுகள் மாத ஊதியம் கொடுத்து, முறையாகப் பயின்று, வடமொழியிலும் சிறந்த இலக்கிய இலக்கண அறிவினைப் பெற்றுப் புலமை எய்தினர். இவ்வாறு இருமொழிப் புலமையும் சைவ நூற்புலமையும் கைவரப்பெற்று விளங்கிய கதிரேசனுர்க்கு ஒரு முறை கடிதம் எழுதிய போது அரசன் சண்முகனுர் இவரை, மகாவித்துவான் கதிரேசச் செட்டியார் என்று குறிப்பிட்டதுண்டு. இதுகாறும், மகிபாலன் பட்டியிற்பிறந்த கதிரேசனுர் பெரும்புலவரான வாற்றை இம்முதற்பகுதியில் அறிந்தோம்.

## II

இவ்வாறு கல்விகேள்விகளிற்சிறந்து விளங்கிய கதிரேசனுர், அக்காலத்தில் செட்டிமார்நாட்டு இளைஞர்கள் சிறந்த கல்வியறிவு பெற்றிராமையைக் கண்டு மனம் வருந்தினர். அந்நிலைக்கு இரக்கப்பட்டார். அக்குறைகளை எவ்வாறேனும் போக்க வேண்டும் என எண்ணங்கொண்டார் ஆற்றலுடையார் ஆற்றலறிந்து போற்றிப் பயன் கொள்ளுதலில் வல்ல இவர், வள்ளல் பழநியப்பருடன் அளவளாவுங் காலங்களில், செட்டிமார் நாட்டு இளைஞர்கள் சிறந்த கல்வியறிவில்லாதிருப்பது பற்றியும், ஒருசிலர் கற்போரும் ஆங்கில மொழியிலும், ஆங்கில நாட்டுப் பழக்க வழக்கங்களிலும் மோகங்கொண்டலைவது பற்றியும், தாய்மொழியாகிய தமிழும், சைவ நெறியும் ஆதரிப்பாரின்றி அவலநிலைக்குள்ளாவது பற்றியும் எடுத்துக் கூறுவார். பண்டைப் பாண்டி வேந்தர்கள் சங்கங்கள் வாயிலாகவே தமிழ் மொழியையும், தமிழ்ப் பண்பாட்டையும் தமிழ்ப் புலவர்களையும் ஆதரித்து வந்ததைச் சுட்டிக் காட்டுவார். தாம் கூறுவதற்கு எடுத்துக் காட்டாகப் பாண்டித்துரைத் தேவர் மதுரையில் துவக்கிய சங்கம் பற்றியும், நாகையில் துவங்கப் பட்டுள்ள சங்கம் பற்றியும் நவில்வார். அரசியல் கருத்துக்கள், சமூகச் சீர்திருத்தங்கள் முதலிய யாவும் சங்கங்கள் வாயிலாகப் பெருநன்மை பெறும் என்பதை விளக்குவார்.

இவற்றையெல்லாம் கண்டும் கேட்டும் சிந்தித்துத் தெளிந்த வள்ளல் பழநியப்பர், "சைவமும் தமிழும் தழைத்தினிதோங்க" மேலைச் சிவபுரியின்கண் சங்கம் ஒன்று நிறுவ உறுதி பூண்டார். அரசன்சண்முகனுர்,மு. ரா. கந்தசாமிக் கவிராயர் ஆகியோர் அவரது ஆர்வத்தை ஊக்குவித்தனர். மனத் தூய்மையும் வினைத்திட்பமும் உடைய வள்ளல் பழநியப்பச் செட்டியார், அவர்தம் இளவல் அண்ணமலையார், கதிரேசனுர் மற்றும் பல பெருமக்களை உறுப்பினராகக் கொண்ட சன்மார்க்க சபை, சௌமிய ஆண்டு, சித்திரைத்திங்கள் 31-ஆம் நாள் (13-5-1909) திருநாவுக்கரசர் திருநாளன்று தோன்றியது. விழாத்தலைவர் பெரும்புலவர் சோழவந்தானூர் அரசன் சண்முகனுரவர்கள் "சன்மார்க்க சபை வாழ்க! தமிழணங்கு தழைத்து வாழ்க!" என வாழ்த்திச் சபையைத் தொடங்கி வைத்தார். சன்மார்க்க சபையின் நோக்கங்கள் வரையறுக்கப் பட்டன. வள்ளல் பழநியப்பர் பெருந்தொகை நன்கொடையாக வழங்கினர். மற்றும் பல பெருமக்களும் தக்க நன்கொடை வழங்குவாராயினர். சபைக்காக நிரந்தர நிதி திரட்டி வைக்கப்பெற்றது. சபைக்காகத் தனிக்கட்டிடம் புதிதாகச் சிறந்த முறையில் கட்டப்பெற்றது.

கல்வி வளர்ச்சிக்காகச் சிறுவர் பள்ளியும், தமிழ் வளர்ச்சிக்காகக் கணேசர் செந்தமிழ்க் கல்லூரி, நூல்நிலையம் ஆகியனவும், உலகியல் அறிவு வளர்ச்சிக்காக நாளிதழ் வாசக சாலையும் தொடங்கப் பெற்றன. சமூகச் சீர்திருத்தம், சமய வளர்ச்சி ஆகியவற்றுக்காகச் சபை துண்டுப் பிரசுரங்கள் அவ்வப்போது வெளியிட்டது. மாதச் சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பெற்றன. இவை யெல்லாவற்றுக்கும் மேலாக, ஆண்டுதோறும் இரண்டு நாட்கள் கொண்டாடப்பெறும் ஆண்டு விழாக்களில், தலைசிறந்த புலவர்களின் அரிய சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பெற்றன. இப் பணிகள் தவிர, தக்க புலவர்கட்குப் பட்டம் வழங்குதல், சிறந்த நூல்களை வெளியிடுதல் ஆகிய பணிகளையும் சபை புரிவதாயிற்று; "நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடனே" என்ற வேந்தர் பணியைச் சபை மேற்கொண்டு 64 ஆண்டுகளாக இனிது ஆற்றிவருகின்றது. இப் பணிகளால் செட்டிமார் நாட்டில் நல்ல முன்னேற்றம் உண்டாயிற்று. அன்ன சத்திரம் கட்டுதல் முதலிய அறப்பணிகளில் தலைநின்ற பெருஞ் செல்வர்கள் கல்விப்பணியில் ஆர்வங் கொண்டனர். அவர்கள் கல்விக்கூடம் அமைத் தலிலும், சங்கங்கள் நிறுவி சமூகப்பணி செய் வதிலும் முனைப்புக்கொண்டனர். செட்டிமார் நாட்டிலும், தமிழ்நாட்டின் வேறு பல இடங் களிலும் சங்கங்களும் மன்றங்களும் பற்பல தோன்றிப் பணி செய்வனவாயின. நாடு அடிமை யுற்றுக் கிடந்த காலத்தில் தோன்றி, முழுதும் தனது செலவிலேயே இப்பணிகளை ஆற்றி வந்த சபை, நாடு உரிமை பெற்றுக் குடியாட்சி மலர்ந்துள்ள இக்காலத்தின் அரசு தரும் உதவி நலங்களையும் பெற்றுக் கல்விப்பணி யினை மிகவும் விரிவாக்கி ஆற்றி வருகின்றது. கணேசர் செந்தமிழ்க் கல்லூரி சென்னைப் பல்கலைக் கழகத்துடன் இணைக்கப் பெற்றுத் தனித் தமிழ்ப்புலவர் வகுப்புக்களை நடத்தி வருகின்றது. இக்கல்லூரியில் தேர்ச்சி பெற்ற ஆயிரத்துக்கு மேற்பட்ட மாணவர், தமிழ் நாடெங்கணும் கல்லூரிகளிலும் உயர்நிலைப் பள்ளிகளிலும் தமிழாசிரியராகித் தமிழ் முழக்கம் செய்கின்றனர். இக்கல்லூரி மாணவர் பலர் மாநிலத்தில் முதன்மையாகத் தேர்ச்சி பெற்று, 1000 ரூபாய் பரிசு பெற்றுள்ளனர். கல்லூரி வகுப்புகளுக்கான புதுக்கட்டிடங்களும், தனித் தனியே மாணவ மாணவியர் இல்லங்களும், சபை யன்பர்களின் நன்கொடையாலும், சபைப் பொது நிதியிலிருந்தும் கட்டப்பெற்றன. சபை இன்னும் நீடுழி காலம் பணி புரிவதற்கேற்ற ஆற்றலுடனும் பொலிவுடனும் திகழ்கின்றது. **மேலைச்சிவபுரிக் கண் கதிரேசனாரவர்களின் நினைவுச் சின்னமாய், தமிழ் கற்பாரைக் கூவியழைக்கும் கலங்கரை விளக்கமாய்ச் சன்மார்க்க சபை விளங்கி வரு கின்றது.** இவ்விரண்டாம் பகுதியில் இதுகாறும், பெரும் புலவரும் சீர்திருத்தப் பாங்குடையவரு மாகிய கதிரேசனார், அத்தகு மேதகை பழநியப்பர் கூட்டுறவால் சன்மார்க்க சபையினை உருவாக்கித் தமிழ் உலகிற்குப் பணிபுரியத் தந்தவற்றை உணர்ந்தோம்.

## III

இதனை யிதனாலிவன்முடிக்கும் என்றாய்ந்து எதனையும் இனிது முடிக்கும் சன்மார்க்க சபையார், சபையின் அறிவியல் பணித்துறையில் கதிரேசனார் வழிநின்று, நிதித்துறை, செயல் துறைகளைத் தாம் போற்றிச் சபையினை வளர்த்து வருவாராயினர். ஆண்டு தோறும் சபை கொண்டாடும் ஆண்டு விழாத்தலைவர் சொற் பொழிவாளர்களைத் தேர்ந்தெடுத்தலும், அவர் திறமறிந்து பாராட்டுதலும், அவரவர்க்குரிய பரிசிலை மதிப்பிடுதலும் கதிரேசனாரின் சிறப்புப் பணியாயின. சன்மார்க்க சபை விழாக்களில் தலைவராகவும், சொற்பொழிவாளராகவும் கலந்து கொள்ளாத தமிழ்ப் பெரும் புலவர் எவருமே யில்லை எனலாம். இக்காரணத்தால் புலவருலகில் கதிரேசனார் என்றால் சன்மார்க்க சபையும், சன் மார்க்க சபையென்றால் கதிரேசனாரும் நினைவுக்கு வருதல் இயல்பாயிற்று.

சபையின் ஆண்டு விழாக்கள் வீசு தென்றல் சால் இளவேனிற்காலத்தில், சித்திரைத்திங்களில், திருநாவுக்கரசர் திருநாளையொட்டித் திறந்த வெளியில் அமைக்கப்பெற்ற அணிதிகழ் காவணத்தில், புலவர் நாவில் பிறந்த சொல் புதி துண்ணும் விழாவாக இரண்டு நாட்கள் கொண்டாடப்பெறும். தமிழ்த்துறை, சமயத் துறைகளின் எல்லைகண்ட சான்றோர்கள் தலைமை தாங்குவர். இத்துறைகளில் ஆராய்ச்சித் திறஞ் சான்ற பெரும்புலவர்கள் எண்சுவை செறிந்த இனிய சொற்பொழிவாற்றுவர். செட்டிமார் நாட்டுப் பெருமக்களும் தொலை தூரங்களில் உள்ள அறிஞர், புலவர் பெருமக்களும் திரண்டு, ஆயிரக் கணக்கில் குழுமி சபை பொழியும் ஞான மாமழையினைப் பருகி இன்புறுவர். கதிரேசனார் சபையின் அறிவுத் துறைத் தலைவராக விழாத் தலைவருக்கு அடுத்து வீற்றிருந்து, தமது இருமொழிப் புலமை ததும்பும் ஆராய்ச்சிச் சொற் பொழிவினை விழா இறுதியில் வழங்குவர். சொற்

பொழிவாளரின் திறனுய்ந்து நலம் பாராட்டுவர். குற்றம் இருப்பின், நகைச்சுவை தோன்ற அவற்றை எடுத்துக் கூறித் திருந்தச் செய்வர். ஆண்டு விழாப் பேரவை, மாங்குடி மருதன் தலைவனுகப் புலவர் குழுமிப் பொருளுரை யாற்றும் சங்கப்பேரவை போலப் பொலிவுற்றுத் திகழும். இவ்வாறு, சன்மார்க்க சபையின் திரு விழாக்கள் தமிழ்த்தாயின் திருவிழாவாகச் சைவ நெறியின்பெருவிழாவாக நடைபெறும். இவற்றல் கதிரேசனர்பாலும், சன்மார்க்க சபையின்பாலும் புலவர்களும் பொது மக்களும் பெருமதிப்பும் பேரன்பும் கொண்டனர். கதிரேசனர் புகழும் சன் மார்க்க சபையின் புகழும் இணைந்து செட்டிமார் நாட்டிலும், புலவர் உலகிலும் பரவத் தொடங்கின.

ஆண்டு விழாவிற் கலந்துகொண்ட சான்றேர் களும் புலவர் பெருமக்களும், விழா முடிந்த பின்னும் இரண்டொரு நாள் தங்கிச் சபையிற் கூடியிருந்து, அவரவர் ஆராய்ந்து புதிதாகக் கண்ட ஆராய்ச்சி நுட்பங்கள் பற்றிக் கலந்துரையாடுவர். அப்போது சன்மார்க்க சபை, தவலரும் தொல் கேள்விச் சான்றேர் கூடியிருந்து புணர் கூட்டுண்ணும் புலவர் பேரவையாகத் திகழும். நூல்களில் இலைமறைகாய் போல் ஆங்காங்கே புலப்படாதொளிந்திருந்த நுட்பங்கள் இனிது புலப்படும். புலமைச் செப்பமும் திட்பமும் எய்திப் பழுத்த தமிழ்ப் புலமையாய்ச் சிறக்கும். ஐம்புலன் விருந்தாம் அமரருலக இன்பத்தினும் மேலான, நிலையானதோர் பேரின்பமாக இந்நுண் புலவிருந்தைப் புலவருலகம் போற்றி நுகர்ந் தின்புற்று மகிழ்ந்தது.

இவ்விழாக்களால் நாடு பயன் பெற்றது புலவர்கள் பாராட்டும் பரிசிலும் பெற்றனர். கதிரேசனர்க்கும் பெரும்பயன் விளைந்தது. அவர் தம் கல்விகேள்வியறிவுகள், களையெடுத்து உரமிட்ட பயிர் போல வளமுற்றன. உணர விரித் துரைக்கும் திறன் ஓங்கிற்று. அவர்தம் சிறப்பு முறையாகிய நூல் நயத்துறை திட்பமுற்றது. தமிழ் நூல்களிலும், சைவ நூல்களிலும் அவருக்குத் தெரியாததோர் பொருளில்லை என்ற உயர்நிலை உருவாயிற்று. செட்டிமார் நாட்டிலும், தமிழ்கூறும் நல்லுலகிலும் உள்ள சங்கங்களும், மன்றங்களும் அவரது சொற்பொழிவினைக் கேட்க விரும்பி, அவரை அழைத்துப்பாராட்டிஇன்புற்றன.

தொல்காப்பியம் கூறும் வழி நூல் வகைகளுள் பிற மொழி நூல்களைத் தமிழ் நெறிப்படி மொழி பெயர்ப்புச் செய்தலும் ஒன்று. சன்மார்க்க சபை தனது நூல் வெளியீட்டுப் பணியில், கதிரேசன ரின் இருமொழிப் புலமையைப் பயன்படுத்திப் பல நூல்களை வெளியிட எண்ணியது. கதிரேசனர்க் குத் துணையாகத் திருக்கோகர்ணம் வடமொழி வித்துவான் T. N. இராமச்சந்திர சாத்திரியாரை மாதச் சம்பளங்கொடுத்து நியமித்தது. சுலோசனை முதலிய சிறு நூல்களும், சுக்கிர நீதி, மிருச்சகடிகம் ஆகிய பெருநூல்களும் மொழி பெயர்த்து வெளியிடப்பெற்றன. பெரிய பல்கலைக் கழகம் செய்யவேண்டிய இப்பணியைச் சன்மார்க்க சபை செய்தது. தமிழுக்குத் தனிப் பொருள் நூலும் இனியதொரு நாடக நூலும் கிடைத்தன.

சுக்கிர நீதி என்பது, அறம் பொருள் இன்பம் என்பவற்றுள் பொருளைப் பற்றி மட்டும் உணர்த் தும் நூலாகும். மிருச்ச கடிகம் என்பது சிறந்த நாடக நூல். அது மண்ணியல் சிறு தேர் என்ற பெயரில் மொழிபெயர்க்கப் பெற்றுள்ளது. இம் மொழிபெயர்ப்புக்களால் கதிரேசனரின் இரு மொழிப் புலமையும், மொழிபெயர்ப்புத் திறனும் ஒளி வீசி உலகிற்குத் தெரிவனவாயின. மூல நூலின் கருத்தும் கட்டுக்கோப்பும் கெடாமல் சுவை குன்றுமல் ஒரு மொழிக் கருத்தை வேறெரு மொழியில் பெயர்த்தல் அரிய செயலாகும். அவ்வரிய செயலை எளிதிற்செய்து முடித்த கதிரேசனரின் பெருமையைக் கண்டு வியந்து, தமிழுலகும் வடமொழியுலகும் இவரைப் பெரிதும் பாராட்டின. அப்பாராட்டுக்களே பிற்காலத்தில் "மகாமகோபாத்தியாய" என்ற வடமொழிப் பட்டம் இவர் பெறக் காரணமாயிற்று.

பெரும்புலமையுடன் குடத்து விளக்குப் போல மகிபாலன்பட்டியிலிருந்த கதிரேசனரைத் தமிழுலகும் வடமொழியுலகும், சைவவுலகும் பாராட்ட, இருமொழி நயம் சான்ற செஞ்சொல் வேந்தராய், நயவுரையாளராய், நூலாசிரியராய்க் கவிவல்லாராய்க் கற்றேர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையாளராய்ப் பட்டை தீட்டிப் பொன்னிற் பதித்த வைர மணி போல் அறிவொளி வீசி வீறு பெற்றுத் திகழும் கதிரேசனரால் உருவாக்கிய சன்மார்க்க சபை, தனது பதினெரும் ஆண்டு விழாவில், 27-8-25-இல் மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே. சாமிநாத ஐயரவர்கள் தலைமையில் இருமொழி வாழும் இயைந்த **பண்டிதமணி** என்ற பட்டத்தைச் சூட்டிப் பாராட்டி "எண் திசையும் சென்று வருக ஏற்றமுற்று வென்று வருக. வாகை சூடுக" என்று வாழ்த்திச் சிறப்பித்தது. வித்துவான் கதிரேசனர், பண்டிதமணி கதிரேசன் ஆனர். பண்டிதமணியாரின் புகழும் எண் திசை யிலும், தமிழ் நாடெங்கணும், ஈழ நாடு முதலிய நாடுகளிலும் பரவியது. தமிழ் கூறும் நல்லுலகில் பண்டிதமணியார் தலைமை தாங்கிச் சொற்பொழி வாற்றுத சங்கங்களோ, மன்றங்களோ, தமிழ்

மாகாடு, சைவ மாகாடுகளோ இல்லை. ஈழ நாட்டுச் சங்கங்களும் பண்டிதமணியாரை அழைத்துத் தலைமை தாங்கச் செய்து, அவர் சொற்பொழிவைக் கேட்டுப் பாராட்டி மகிழ்ந்தன. பண்டிதமணி யவர்கள், தமது சொற்பொழிவுகளையும் தலைமை யுரையினையும், கேட்போர் தரத்துக்கேற்ப அவர் மனங்கொள்ளுமாறு அமைத்துக்கொள்வார். அம்முறை அவருக்குப் பெருவெற்றியை அளித்தது. கரந்தைத் தமிழ்ச்சங்க விழாவில் இவர் தலைமையுரையினைக் கேட்ட அறிஞர் பெருமக்கள், வானோர் அரும்பெறலமிழ்தை ஆர்ந்தவர் போல, ஆராவின்பத்தில் திளைத்தனர். பண்டிதமணியார் சென்றவிடமெல்லாம், சன்மார்க்க சபையின் புகழ் பரவி ஓங்கியது.

பண்டிதமணியார் செட்டிநாட்டு அரசர் விரும்பிய வண்ணம் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறையில் விரிவுரையாளராக வும், தமிழ்ப் பேராசிரியராகவும், ஆய்வுத்துறைத் தலைவராகவும் பணியாற்றிச் சிறப்பித்தார். புலவர் மாணவர்க்கும் கலைத்துறை உயர்வகுப்பு மாணவ மாணவியர்க்கும் தமிழ் கற்பிக்கும் வாய்ப்பினைப் பெற்று, மாணவ மாணவியர் இவர் பாடந்தொடங்கியது முதல் முடிக்கும் வரை, மகுடியிசை கேட்ட நாகம் போலத் தம் வயம் இழந்து, அவர் வயமாகிப் பாடம் கேட்டனர். அக்காலம் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் பொற்காலமாகும். ஆய்வுத்துறைத் தலைவராக இருந்தபொழுது, கௌடிலியம் என்ற பொருள் நூலை மொழிபெயர்த்துத் தந்தார். சென்னைப் பல்கலைக் கழகத்திலும், பிற கழகங்களிலும் பல குழுக்களில் உறுப்பினராகப் பணி புரிந்தார்.

இவர் இயற்றிய மேலைச்சிவபுரி விநாயகர் பதிற்றுப்பத்தந்தாதி, எழுதிய கட்டுரைகள், உரைநடை நூல்கள் ஆகியவை கற்பார்க்குக் கழி பேரின்பம் பயப்பனவாகும். இவர் திருவாசகத் தின் திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம், திருவெம்பாவை ஆகியவற்றிற்கு எழுதியுள்ள கதிர்மணி விளக்கப் பேருரை, திருவாசகத்தின் அருமை பெருமைகளையுணர்த்திச் சைவ சமயப் பேருண்மைகளை விளக்கிக் கற்போர் உள்ளத்தைக் கனிவிக்க வல்லதாகும்.

இவ்வாறு தமது திருத்தக்க ஒட்பத் திறனால் புலமைப் பொருளினை இயற்றலும், ஈட்டலும், காத்தலும், காத்தவற்றை வகுத்து வழங்கலு மாகிய வேந்துநெறியை மேற்கொண்டு உண்மைப் புலவரை ஆதரித்தும், போலிப் புலவர் செருக் கடக்கியும், தமிழ்வளம் பெருக்கிப் புலமைச் செங்கோல் நடத்தினர். கவிச்சக்கரவர்த்தி யென்பது போலக் கல்விச்சக்கரவர்த்தியாய் விளங்கினர். பண்டிதமணியார் தாம் பிறந்து மொழி பயின்ற காலந்தொட்டுச் சிறந்து, புகழ் ஏணி ஏறித் தமிழுலக ஞாயிறாய் விளங்கி, இறுதிக் காலம் வரைச் சன்மார்க்க சபையின் தந்தை வள்ளல் பழநியப்பராலும், பின்னர்ச் சன்மார்க்க சபையாலும் தாம் மேம்பாடு அடைந்த நன்றியினை எண்ணி மனம் நெகிழ்வார். சன்மார்க்க சபை, தனது வளர்பணிக்கும் புகழுக்கும் உறுதுணை யாய் விளங்கிய பண்டிதமணியார்க்கு நன்றி யறிதலாக 7-7-40 இல் உருவப்படம் வைத்தபோது அப்படத்திறப்பு விழாவில் பண்டிதமணியார், 'என் சிறு தொண்டுக்கு உருவம் அமைப்பது சபைக்கு என்மீதுள்ள அன்பைக் காட்டுகிறது. எனக்கு இவ்வளவு சிறப்புச்செய்த அளவுக்கு யான் சங்கத்துக்குத் தொண்டு செய்ததாக என் நினைவுக்கு வரவில்லை. யான் படித்தது எங்கே எங்கே என்று பல அன்பர்கள் என்னைக் கேட்டார்கள். இங்கேதான். யான்தான் இச்சங்கத் தின் முதல் மாணாக்கன். சன்மார்க்க சபையினால் தான் எனக்கு மேன்மை ஏற்பட்டது'' என்று மனமுருகிக் கூறினர். இம்மூன்றும் பகுதியில் இதுகாறும் கூறியவாற்றால் சன்மார்க்க சபை பண்டிதமணியை உருவாக்கி உலகிற்குத் தந்த வாற்றை இனிது தெரிந்தோம்.

இவ்வாறு பண்டிதமணியார் சன்மார்க்க சபையை உருவாக்கித் தந்ததும், சன்மார்க்க சபை பண்டிதமணியை உருவாக்கித் தந்ததும், பண்டிதமணியும் சன்மார்க்க சபையும் நாட்டிற்கும் மொழிக்கும் சமயத்துக்கும் நற்றொண்டு செய்ததும். ஆகியவற்றை எண்ணிப் பாராட்டும் சைவ அன்பர்கள், ''சிவம் சத்திதன்னை யீன்றும், சத்திதான் சிவத்தையீன்றும் உவந்து இருவரும் புணர்ந்து உலகுயிர் அனைத்தும் ஈன்றும்'' என வரும் சிவஞானசித்தியாரின் கருத்தொடு ஒப்பிட்டுக் கூறியின்புறுவார்கள்.

பண்டிதமணியாரின் ஆக்கத்திற்கு உறுதுணை யாயிருந்து, அவரை உருவாக்கிய சன்மார்க்க சபையின் பேருதவியை நினைந்து, அவர்தம் மக்கள் தமது நன்றியறிதலாகப் பண்டிதமணியா ரவர்கள் நூல்களைச் சன்மார்க்க சபை வெளியிட உரிமை தந்துள்ளார்கள்.

வாழ்க பண்டிதமணியின் புகழ்! வளர்க சன்மார்க்க சபை !!

# தமிழ்நெறிக் காவலர்

தவத்திரு குன்றக்குடி அடிகளார், எம்.எல்.சி.

சங்க கால இலக்கியத்தில் புலமையாலும், புரக்கும் தன்மையாலும் புகழ் பெற்றது பறம்பு நாடு. பறம்பு மலை வட்டாரம் முழுதும் ஒரு தமிழ்ச் சூழலாகவே அமைந்திருந்தது. சங்க இலக்கியத்தில் முத்தனைய சிந்தனைகளைத் தந்த கபிலன் முதல் கணியன் பூங்குன்றன் ஈறாக உயர் செந்நாப் புலவர் பலர் வாழ்ந்த நாடு, பறம்பு நாடேயாம். "யாதும் ஊரே! யாவரும் கேளிர்!"— இஃது இன்றைய சிந்தனையல்ல. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றிய மூத்த சிந்தனை; கணியன் பூங்குன்றன் தந்த வாழ்வியலறம்! இந்தப் பெருமகனர் வாழ்ந்த மண் இன்று, மகிபாலன்பட்டி என்று வழங்கும் என்பர். இந்த ஊர் உள்ள நாட்டுக்குப் பூங்குன்ற நாடு என்று இன்றும் பெயர் விளங்குகிறது.

பழைய வரலாற்றுச் சிறப்பை நினைவூட்டும் வகையில் பூங்குன்ற நாட்டுக்குக் கணியன் பூங் குன்றன் வழித் தோன்றலாகக் கிடைத்த மணி, பண்டிதமணி! ஆம்! பண்டிதமணி பைந்தமிழ்ப் புலவரேறு. சித்தத்தைச் சிவன்பாலே வைத்தவர். திருவாசகத்தில் தோய்ந்த திருநிறை நெஞ்சினர். வடநூற் புலமையும் தண்டமிழ் நூற்புலமையும் ஒருசேரப் பெற்று உயர்ந்த புலவர் மாமணி. ஆற்றொழுக்கான பேச்சு; கருத்து வளம் மிக்க எழுத்து நடை; தெளிந்த திறனாய்வு—இவை பண்டிதமணியின் அடையாளங்கள்! பண்டிதமணி நுண்ணறிவினர். திருவள்ளுவர், 'நுழைபுலம்' என்று காட்டிய இலக்கணத்திற்கு இலக்கிய மாகப் பண்டிதமணி திகழ்ந்தார் என்பதைத் திருவாசகம்—திருச்சதகம் கதிர்மணி விளக்கம் படித்தால் உய்த்துணரலாம்.

பண்டிதமணி வாழ்ந்த காலத்திலும் பிரகத்தன் தலைமுறை ஒய்ந்துவிடவில்லை. ஆரியம் அன்னைத் தமிழினும் உயர்ந்தது என்ற கருத்தும், அன்னைத் தமிழுக்கு அதுவே முதன்மொழி என்ற கருத்தும் ஓயாது உரைக்கப்பெற்று வந்தது. இந்தச் சூழ் நிலையில் பண்டிதமணி அவர்களுடைய பணி, அன்னைத் தமிழுக்கு அரணாக அமைந்தது. வட நூற் புலமையும் பெற்றிருந்ததால் அன்னைத் தமிழ் மொழியின் நிறைகளையும் வடமொழியின் குறைகளையும் விளக்கிப் பண்டிதமணி எழுதிய கட்டுரைகள் கால காலத்திற்கும் நிற்க வல்லன.

பண்டிதமணி அவர்களின் செந்தமிழ்ப் புலமை யும் சிவநெறிச்சார்பும் தமிழக வரலாற்றில் நிலையான இடம் பெற்றவை. பழந்தமிழக வரலாற்றைப் புதுப்பிக்கும் பெருமையுடைய டாக்டர் கலைஞர் அவர்களின் தலைமையில் அமைந்துள்ள தமிழக அரசின் காலத்தில் பண்டிதமணி அவர்களுக்குச் சிலையெடுப்பது பாராட்டுதலுக்குரிய பணி. பண்டிதமணி அவர் கள் வழியில் பைந்தமிழ் மொழியைப் பேணு வோமாக! தமிழ் நெறியைக் காப்போமாக! தமிழர் என்ற இனநலம் காப்போமாக! வாழ்க பண்டிதமணியின் புகழ்!

---

**சைவர்களாகிய நாமெல்லாம் நம் சமயக்கடவுளாகிய சிவபிரானை உண்மை அன்போடு வழிபடுதல் வேண்டும். அங்ஙனம் வழிபடுங்கால் இதர தெய்வங்களைப் பழித்தல் கூடாது. நம் தெய்வத்தைப் போற்றுவோமாக.**

"உரைநடைக் கோவை"

(முதற் பகுதி)

பண்டிதமணி **மு. கதிரேசச் செட்டியார்**

(25-4-1941) மகிபாலன்பட்டி

# கதிரேசனாரின் கருத்துக் குவியல்

ஒரு மொழியிற் செவ்வனம் பயின்று சுவைநிலை கண்டுணர்வார்க்கு, அதன் தனிநிலையிற் போலப் பிறமொழிக் கலப்பில் அத்துணை இன்பம் உண்டாகாதென்பது உண்மை அனுபவமுடையார் எல்லோர்க்கும் ஒத்ததாகும். இதனால் வடசொற்களை நேர்ந்தவாறு தமிழிற் புகுத்தல் முறையன்றென்பது தெளிவாம். ஒரு சில வடசொற் கலப்பு உண்மை பற்றித் தமிழ்மொழியை வடமொழியினின்றும் தோன்றிய தென்றல் பொருந்தாததொன்றும்.

—தமிழ் மொழியின் சிறப்பு—
**உரைநடைக் கோவை (இரண்டாம் பகுதி).**
**பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார்.**
பக்கம் 7-8.
*(1941)* —மகிபாலன்பட்டி

* * *

தமிழ்த்துறையில் ஒரு சிறிதும் பயிலாத சிலர், தம் பதவி மேம்பாட்டால் ஒரோவமயம் இன்னோரன்ன அவைக்களங்களில் தலைவராய் வீற்றிருக்கும் பேறு பெறுங்கால், அவர் கூறும் உபதேசம் எத்துணைப் பயனுடையதாகுமென்பதை நீங்கள் அறிவீர்கள். அவரை உயர் பதவிக்குக் கொண்டுவந்த மொழிப்பயிற்சியில் அவர் செலவிட்ட காலத்தையும் முயற்சியையும் கூறுபடுத்துக் கால் அல்லது அரைக்காற் கூறு தமிழுக்கு உபயோகப்படுத்தியிருப்பாராயின், அவர் உபதேசம் கொள்ளற் பாலதாகும். அங்ஙனமன்றிப் "பண்டிதர் நடை கடினமாதலிற் பயனுடையதன்று" என்றின்னோரன்ன உபதேசங்களைச் செய்வரேல், அவற்றை எவ்வாறு ஏற்றுக் கொள்ளலாம்?"

—தமிழும் தமிழ்ப்பணியும்—
**உரைநடைக் கோவை (இரண்டாம் பகுதி)**
**பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார்.**
பக்கம். 17.
*(25-4-1941)* மகிபாலன்பட்டி.

* * *

மதிவலி மிக்க முதுபுலவனிடத்தினின்றுந் தோன்றிய பாடல் நங்கைக்குத் திட்பநுட்பம், தெளிவு, விளக்கம், இனிமை முதலிய பண்புகளமைந்த சொற்பொருட் குழுவே அழகிய உடலும், சுவைநலந் துறுமும் தொனிப்பொருளே உயிருமாம். இந் நங்கைக்கு உவமை முதலிய அணிகளே அணிகலன்களாம். அழகுக்கு அழகு செய்தல் போல இவ்வணிகள் சேர்க்கப்படினும், இப்பாடன் மெல்லியற்பாவை நல்லாளின் இயற்கை வனப்பு மிக்க நல்லுடலைச் சார்ந்து உவமை முதலிய அணிகளே சிறந்த அழகு பெற்றுத் திகழ்வனவாம்.

இங்ஙனம் இயற்கை நலம் மிக்குச் செயற்கை நலனையுமேற்றுத் திகழும் இத்தகைய பாடல் நங்கையைக்கூடி நுகர்தற்குரிய இளநலஞ் சான்ற மணமகனியல்பை இயம்பவும் வேண்டுங்கொல்! அன்னான் இலக்கிய இலக்கண நூலறிவானும் மதி நுட்பத்தானுஞ் சிறந்த மலர்ந்து மணப்பருவம் வாய்க்கப்பெற்றுக் கட்டழகு வாய்ந்த பாடல் நங்கையைக் காண்டலிற் காதல் மிக்குடையவனும் அப்பேறு குறித்துத் தவம் புரிந்த தனிப்பெருஞ் செல்வனுதல் வேண்டும். வேட்கை முயற்சியும் தவப்பயனும் ஆகூழ் வலியும் ஒருங்கு கைவரப்பெற்றாலன்றி, அப்பாடல் நங்கையின் பரிசுணர்தல் அரிதாகும்.

**உரைநடைக் கோவை (இரண்டாம் பகுதி)**
**பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார்**
பக்கம் *44—45.*
*25-4-1941* — மகிபாலன்பட்டி.

# பல்கலைச்செல்வர் பண்டிதமணியார்

டாக்டர் மெ. சுந்தரம், எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,
தலைமைத் தமிழ்ப் பேராசிரியர் & தமிழ்த்துறைத் தலைவர்,
மாநிலக் கல்லூரி, சென்னை-5

தமிழன்னை ஈன்றெடுத்த தவமைந்தர்களுள் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரும் ஒருவர். இவ் இருபதாம் நூற்றுண்டில் தம் பழுத்த தமிழ்ப் புலமையால் தமிழ் மொழியைப் பல்லாற்ருனும் வளர்த்த பெருமை அவருக்கு உண்டு. சிலர் சில துறையில் மட்டுமே வல்லவர்களாய் விளங்குவர். பல்வேறு ஆற்றல்களும் ஒருங்கே பொருந்திய கூட்டுப் புலமையை நாம் பண்டிதமணியிடம் காணலாம். பல பட்டைகள் திட்டப்பட்ட வைரக்கல்லைப் போல் அவர்தம் புலமையும் திறனும் ஒளிவிட்டன. கருவிலே திருவுடைய அம் மேதையின் பலதரப்பட்ட திறனையும் ஓரளவு பகுத்தும் வகுத்தும் காட்டுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## I. உரைநடை கைவந்த வல்லாளர் :

இருபதாம் நூற்றுண்டினை ஓர் உரைநடைக் காலம் (Age of Prose) எனலாம். பாட்டின் செல்வாக்கு மெல்ல மெல்ல அருகி,எல்லாம் உரை நடையே என்று ஆகிவிட்ட நிலையை இன்றை நாளில் காண்கிருேம். எனவே, தமிழின் இன்றைய வளர்ச்சியும் மலர்ச்சியும் உரைநடையாலேயே அமைகின்றன என்பது வெளிப்படை.

தமிழ் உரைநடைக்கு வலிவும் பொலிவும் ஊட்டிய தமிழ்ப்பெரும் புலவர்களில் பண்டிதமணிக்குத் தக்கதோர் இடமுண்டு. அவரை 'உரைநடை கைவந்த வல்லாளர்' என்று உரைப்பது பொருந்தும். எடுத்துக் காட்டாக, கீழ்வரும் பகுதியைக் காண்போம் :

"கண்ணப்பர் ஆறு நாட்கள் இரவு பகல் உணவையும் உறக்கத்தையும் அறவே ஒழித்தார். அருட்குறியாகிய சிவலிங்கத்தைச் சிவபெருமானின் வேருகக் கருதினரல்லர். இரவெல்லாம் வேடராலும் விலங்குகளாலும் ஊறுபாடு நேரா வண்ணம் பாதுகாத்தலிலும், பகலெல்லாம் இறைவனுக்கு உணவு தேடிக் கொணர்தலிலும் இவர் கருத்துச் சென்றது. தாய், தந்தை, சுற்றம், நட்பு முதலிய பிறப்புத் தொடர்புகளை அறவே மறந்தனர். யாவர் எது செய்யினும் எது பேசினும் இவர்க்கு இறையருள் நாட்டமேயன்றிப் பிறிதொன்றில்லை. கரணமெல்லாம் பசுத்துவம் நீங்கிப் பதி கரணமாகத் திகழ்ந்தமையால் இவர் செயலனைத்தும் சிவச் செயலாயின." [1]

பண்டிதமணி எதையும் தெளிவாகவும், திட்ப நுட்பத்தோடும் செலச்சொல்லும் ஆற்றல் பெற்றவர் என்பதை இப்பகுதி காட்டுகின்றதல்லவா? நிரல்பட மொழிதல், நவின்ருேர்க்கினிமை, நன்மொழி பயத்தல் என்றெல்லாம் தொல்லாசிரியர்கள் கூறும் பல்வகை இலக்கணங்களும் இவர்தம் மொழிநடையில், பொருந்திவரக் காணலாம். சிலர், பண்டிதமணியின் நடை கரடு முரடானது என்பர். அது உண்மையன்று. பண்டிதமணியின் சொற்கள் சற்றே கடுமையானவை போல் தோன்றினும், அவரது வாக்கிய அமைப்புகள் மயக்கத்திற்கே இடமில்லாத தெளிவோடு அமைந்திருக்கும். எளிமை என்ற பெயரில் செறிவற்ற வெள்ளை நடையில் எழுதுவதைப் பண்டிதமணி ஒருபோதும் விரும்பினரல்லர்.

"உரைநடைக் கோவை" என்ற நூல் அவரது உரைநடைத் திறத்தை உலகுக்கு எடுத்துரைக்க வல்லது.

## II. நாவீறு படைத்த பாவலர்:

பண்டிதமணி உரைநடைத்திறம் கைவரப் பெற்றவர் என்பது எந்த அளவு உண்மையோ, அதே அளவு அவர், நாவீறு படைத்த பாவலர் என்பதும் உண்மையாகும்.

பண்டிதமணி கவி பாடுவதைத் தம் தொழிலாகக் கொண்டவர் அல்லர். ஆனல், உள்ளம் குளிர்ந்த போதெல்லாம் உவந்து உவந்து பாடும் ஒண்மையர். அவர் எழுதிய வாழ்த்துப் பாடல்களும், சாற்றுக் கவிகளும் மிகப்பலவாகும். ஆசிரியம், வெண்பா, கட்டளைக் கலித்துறை, விருத்தம் முதலிய பல்

1. உரைநடைக் கோவை, முதற்பகுதி (1941), பக்கம் 175-176

வேறு யாப்புகளிலும் விரைந்து பாடும் ஆற்றல் பண்டிதமணியிடம் இருந்தது. அவர் பாடும் அகவற் பாக்கள் சங்க இலக்கியப் பாக்களைப் போன்றே திட்பநுட்பம் துறுமியனவாய் விளங்கின.

"காலமும் கருவியும் கண்ணிய இடனும்
நூலோர் முறையின் நுண்ணிதின் தேர்ந்து
தொடங்குமெக் கருமமும் மடங்க லின்றிச்
செவ்விதின் முடிக்கும் எவ்வமில் திறலினன்;
நாடுநன் னலம்பெற நாடிமற் றதற்குக்
கல்வியும் அறிவும் கவின்பெற வளர்த்தலே
ஒல்லுவ தெனக்கண்டு ஓங்குதன் பெயரால்
நல்லிய லறிஞர் நவின்றுபா ராட்ட
... ... ...
பல்கலைக் கழகம் பாங்குற நிறுவியோன்"

என வரூஉம் பாடல் வரிகள் செட்டிநாட்டரசரை வாழ்த்திப் பாடியனவாகும். இப்பாடலில் சொல் வளமும், இழுமென் ஓசையும், ஆற்றொழுக்கான நடையும் சங்கச் சான்றோர்களின் பாட்டையே நமக்கு நினைவூட்டுகின்றன.

கட்டளைக் கலித்துறை போன்ற பாடல்கள் பாடுதற்கு அரியதென்பர் புலவோர். கதிரேசனார் கையிலோ கட்டளைக் கலித்துறை புத்தழகு பெற்றது. சான்றாகப் பின்வரும் பாடலைக் காண்க:

"கண்ணார் மணியிற் பிற்போ
ரெனும்பொருட் கார்பொழிந்த
தண்ணார் நிதிநீர்ச் செறிப்பிற்
கலைப்பயிர் தான்வளர்க்கும்
அண்ணா மலைப்பல் கலைக்கழ
கப்பே ரணிநிலையம்
விண்ணார் புகழொடு நாளுநா
ளோங்கி விளங்குகவே!"

இவர்தம் பாடல்களைப் பார்க்கும்போது டாக்டர் ச. சோ. பாரதியார் ஓரிடத்தில் கூறிய கூற்றே நம் நினைவுக்கு வருகிறது. "சொல்லைத் தொடுக்கும் கல்லாப் புலவர்தம் பொல்லாப் புலமை போலாது கற்றுக் கனிந்த நாவன்மை படைத்தவரே இவர்" என்பது அவர் கூற்று. 2

**III. சிறந்த திறனாய்வாளர்:**

பாட்டின் அழகையும், பொருளையும் நுண்ணிதின் உணர வல்லவர்கள் திறனாய்வாளர்களே. படைக்கும் புலவனைவிட அதன் நயத்தை நுனித்தறியும் திறனாய்வாளர்களே ஒருவகையில் மேம்பட்டவர்கள் எனலாம்

பண்டிதமணி பாட்டின்பத்திலே மூழ்கி மூழ்கித் திளைப்பவர்; தாமின்புறுவது உலகு இன்புற வேண்டும் என்று நினைப்பவர். காவியச்சோலையுள் நுழைந்து, கவித்தேனை உண்டு தேக்கெறிபவர். இத்தகு ஆற்றல் பெற்றவராக இருந்ததால்தான் அவர் சிறந்த திறனாய்வாளராகவும் திகழ்ந்தார். பாட்டின் திறத்தையும், பாநலன் நுகரும் திறனாய்வாளனின் இலக்கணத்தையும் பின்வரும் பண்டிதமணியின் கூற்று நன்கு எடுத்துக் காட்டுகிறது:

"மதிவலி மிக்க முதுபுலவனிடத்தினின்றுந் தோன்றிய பாடல் நங்கைக்குத் திட்பநுட்பம், தெளிவு, விளக்கம், இனிமை முதலிய பண்புகளமைந்த சொற்பொருட்குழுவே அழகிய உடலும், சுவைநலந் துறுமும் தொனிப் பொருளே உயிருமாம். இந்நங்கைக்கு உவமை முதலிய அணிகளே அணிகலன்களாம். அழகுக்கு அழகு செய்தல் போல் இவ்வணிகள் சேர்க்கப்படினும் இப்பாடன் மெல்லியற்பாவை நல்லாளின் இயற்கை வனப்பு மிக்க நல்லுடலைச் சார்ந்து, உவமை முதலிய அணிகளே சிறந்த அழகு பெற்றுத் திகழ்வனவாம். இங்ஙனம் இயற்கை நலம் மிக்குச் செயற்கை நலனையும் ஏற்றுத் திகழும் இத்தகைய பாடல் நங்கையைக் கூடி நுகர்தற்குரிய இளநலஞ்சான்ற மணமகனியல்பை இயம்பவும் வேண்டுங்கொல்? அன்னான் இலக்கிய இலக்கண நூலறிவானும் மதிநுட்பத்தானும் சிறந்து மலர்ந்து மணப் பருவம் வாய்க்கப்பெற்றுக் கட்டழகு வாய்ந்த பாடல் நங்கையைக் காண்டலிற் காதல் மிக்குடையனாய் அப்பேறு குறித்துத் தவம் புரிந்த தனிப்பெருஞ் செல்வனாதல் வேண்டும். வேட்கை முயற்சியும், தவப்பயனாகும் ஆகூழ் வலியும் ஒருங்கு கைவரப் பெற்றாலன்றி, அப்பாடல் நங்கையின் பரிசுணர்தல் அரிதாகும். 3

பண்டிதமணி, திறனாய்வாளனுக்கு உரியதாகக் கூறும் அத்தனை பண்புகளும் அவர்மாட்டே அமைந்திருந்தன. எனவேதான், தம்மை நாடி வரும் ஆர்வலர்கள் அனைவரையும் பாட்டின்பத்தில் மூழ்கும்படி அவரால் செய்ய முடிந்தது. பண்டிதமணியின் திறனாய்வுப் புலமை பற்றிப் பேராசிரியர் தெ. பொ. மீ. கூறியிருக்கும் ஒரு கருத்து இங்குச் சிந்திக்கத்தக்கது.

"அரிஸ்டாட்டில் என்ற கிரேக்க ஆராய்ச்சியாளர், நம்முடைய மனம் 'கொந்தளிப்படங்கி, விருப்பு வெறுப்பற்று, அழுக்கெல்லாம் கழுவப் பட்டுத் தூயதாய் அமைதியோடு விளங்குவது பாட்டினால் எனக் குறித்துள்ளார். பாட்டில்

2. மேற்கோள்—"சோம. லே"; பண்டிதமணி *(1971)* பக்கம் 217.
3. 'உரைநடைக் கோவை'—இரண்டாம் பகுதி *(1940)*, பக்கம் 44-45.

தம்மை மறந்து மனம் ஒருமுகப்பட்டுச் சுவையைத் துய்த்து அமைதி பெறுவாரைக் கடவுட் காட்சி கைவரப்பெற்ற மெய்யுணர்வாளரோடு ஒப்பவைத்து எண்ணுகின்றது வடமொழி அணி நூல். அத்தகைய உணர்வின் வல்லவரே நம் பண்டிதமணியவர்கள். பாட்டில் வரும் சொற்களைச் சுவையுலகாக மாற்றி வைக்கும் ரசமணியாவார் இவர். இவர் பேச்சைக் கேட்கும்போது கேட்போரும் ஒருமித்து, அவரோடு பாட்டிற் சமாதி கூடிச் சாந்தி என்று புகழப்பெறும் மன அமைதியை அடைந்து வருவது கண்கூடு. அந்த வகையில் இவர் ஒரு மகரிஷி; ஒரு ஆசாரிய பீடம்.'' [4]

பண்டிதமணி மகரிஷியாக, ஒரு ஆசாரிய பீடமாகத் தமிழ்க் கவிதை உலகில் விளங்கினார் என்பது உண்மையே ஆகும்.

**IV நல்ல உரையாசிரியர்:**

இந்த நூற்றாண்டின் தொடக்க காலத்தில் வாழ்ந்த தமிழ்ப்பெருஞ் சான்றோர்கள் அனைவருமே மிகச்சிறந்த உரையாசிரியர்களாக விளங்கினர். மறைமலையடிகள், திரு. வி. க., ச. சோ. பாரதியார், இராகவையங்கார் போன்றோர் தம் திறனெல்லாம் புலப்படப் பழைய நூல்கள் சிலவற்றிற்கு உரையெழுதிப் போந்தனர். பண்டை இலக்கியப் பயிற்சியும், இலக்கணப் புலமையும் இல்லாதோர் உரையெழுதப் புகுவது, அரங்கின்றி வட்டாடுவது போலாகும். அதுவும், திருவாசகம் போன்ற சமய நூல்களுக்கு உரை யெழுதுவோர் மேற்கூறிய இரு திறனோடு மட்டு மன்றிச் சமய சாத்திரங்களிலும் வல்லவராய் இருத்தல் வேண்டும். பண்டிதமணி இவ்வாற்றலெல்லாம் ஒருங்கே நிரம்பப் பெற்றவராய் விளங்கினர்.

திருவாசகத்தில் உள்ள திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம் ஆகிய இரு பகுதிகளுக்கும் 'கதிர்மணி விளக்கம்' என்ற பெயரில் பண்டிதமணி ஓர் அழகிய உரை விளக்கம் எழுதியுள்ளார். இவ்வுரை பரிமேலழகரின் திருக்குறளுரை, நம் பிள்ளையின் ஈடு முப்பத்தாறாயிரப்படி முதலிய பண்டை உரை நூல்களோடு ஒப்பவைத்து எண்ணுதற்குரியதாகும். கண்ணழித்துக் கருத்துரைத்துப் பொழிப்புத் தந்து, நுட்பம் கூறி, ஆழ அகலமாய் உரை விரிக்கும் பண்டிதமணியாரின் உரைத்திறம் வியந்து போற்றுதற்குரியதாகும்.

ஏனை யாவரு மெய்திட லுற்றமற்
றின்னதென் றறியாத
**தேனை, ஆனெயைக் கரும்பினின் தேறலைச்**
சிவனைஎன் சிவலோகக்
கோனை மானன நோக்கிதன் கூறனைக்
குறுகிலேன் நெடுங்காலம்
ஊனை யானிருந் தோம்புகின் றேன்கெடு
வேனுயிர் ஒயாதே

என்ற திருவாசகப்பாட்டிற்கு உரையெழுதும் போது 'தேனை, ஆனெயைக், கரும்பினின் தேறலை' என்ற வரிக்கு அவர்தரும் விளக்கம் சுவையுடையது. இந்த வைப்பு முறைக்கு (தேனை முதலாவதாகவும், நெய்யை இரண்டாவதாகவும், கருப்புக்கட்டியை இறுதியாகவும் அமைத்துள்ளமை) அவர் தரும் விளக்கம் இது :

"ஆண்டவன் தன் இயல்பை முதலில் எளிமையில் காட்டி, ஈர்த்துப் படிப்படியாக அருமை நிலையை உணர்த்தி ஆட்கொண்டதைப் புலப்படுத்துவாராய், "தேனை ஆனெயை" எனத் தொடங்கி, முறையே கூறுவாராயினர். தேனைப் பெற்றவுடன், அடுதல் முதலிய செயற்படுத்தாமல் இனிமை தோன்ற எளிதில் உண்ணலாம். "ஆனெயை" என்றமையால் பசுவினிடத்தினின்றும் நெய் பெற வேண்டுமானால், பாலை அடுதற் செயற்படுத்துத் தயிராக்கிப் பெறல் வேண்டும். கரும்பின் இன்தேறல் என்புழி, தேறல் ஆகுபெயராய்க் கட்டியை உணர்த்தும். கரும்பின் தேறல் பெற வேண்டுமானால், கரும்பை ஆலையில் இட்டுத் தெளிந்து சாறு எடுத்து, அடுதற் செயலாற் கட்டியாக்கிப் பெற வேண்டும். ஈண்டுக் கூறிய தேன், நெய், கருப்புக்கட்டி—இம்மூன்றும் இனிமைச் சுவையில் ஒன்றுபட்டிருந்தாலும், முன்னதை நோக்கப் பின்னது அரிதிற்பெறத் தக்கதாக இருத்தல் அறியத்தக்கது. தேனை என அடைமொழி இன்றியும், ஆனெயை, கரும்பின் இன்தேறலை என மற்றைய இரண்டிற்கும் அடைமொழி புணர்த்தும்படி கூறியது, தேன் ஆக்கும் செயல், ஈக்களுக்கு அன்றியும் மக்களுக்கு இன்றென்பதும், நெய்யும் கருப்புக்கட்டியும் ஆக்கும் செயல் மக்களுக்குரியன என்பதும் புலப்படுத்தற்கென்க." [5]

மேற்கண்ட உரைப்பகுதி பண்டிதமணியின் பகுதிநிலைச் சிந்தனையையும், தொகுநிலைச் சிந்தனை

4. பண்டிதமணி அறுபதாம் ஆண்டு நிறைவு விழா மலர், பக்கம் 12. (1942)
5. கதிர்மணி விளக்கம். பக்கம் 44.

யையும் (analytic and synthetic) ஒருங்கே வெளிப்படுத்தக் காண்கிறோம். சுருங்கச் சொன்னால், இருபதாம் நூற்றாண்டில தோன்றிய உரையாசிரியர்களின் வரிசையில் பண்டிதமணிக்குத் தலையாய இடமுண்டு எனலாம்.

### V. மொழிபெயர்ப்பாளர் :

மொழிபெயர்த்தல் என்பது அரிய கலை. பல் கலைத் திறனும், பன்மொழிப் புலமையும் இல்லாதோர் இத்துறையில் வெற்றி பெறல் முடியாது.

பண்டிதமணி வடமொழி, தமிழ் ஆகிய இரு மொழியினும் கற்றுத் துறைபோயவர். வேதம், ஆகமம் முதலிய எண்ணிறந்த பல்வேறு அறிவு நூற் பெருக்கங்களையுடைய வடமொழியும் தமிழ் மொழியும் ஆகிய இருபெரு மொழிக்கும் இலக்கண முடிபுகள் பல ஒன்றி வரலானும், தமிழ் மொழிக்கு இலக்கணம் வகுத்த புலனழுக்கற்ற அறிவுடையோர் பலர் வடமொழி வல்லாராய் அம் மொழி மரபு பலவற்றை எடுத்தாண்டமையாலும் தமிழிலக்கணப் புலமை நிரப்புதற்கு வடமொழி யறிவும் வேண்டற்பாலதாகிறது. இவ்வுண்மை யறிந்த பண்டிதமணி இருமொழியையும் அழுத்த முறக்கற்றார். அதன் பயனாகச் சுக்கிர நீதி, மிருச்சகடிகம், கௌடலியம் முதலிய நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்தார்.

"மிருச்சகடிகம்" வடமொழியில் எழுதப்பட்ட ஓர் அரிய நாடக நூல். பண்டிதமணி "மண்ணியல் சிறுதேர்" என்ற பெயரில் இதனை மொழி பெயர்த்தார். இந்நூலுக்கு ஆராய்ச்சி மதிப்புரை எழுதிய ச. சோ. பாரதியார் இம்மொழி பெயர்ப்பின் சிறப்பைப் பலபடியாகப் பாராட்டியுள்ளார். பின்வரும் கூற்றைக் காண்க.

"வடமொழி பயிலாத எம்மனோரால் முதனூலோ டொத்து நோக்க இம் **'மண்ணியல் சிறுதேர்'** எத்துணைச் சிறப்புரிமை கோள்வதென்று அளந்து அறுதியிடற்கில்லை எனினும், பலரால் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டுள்ள மிருச்சகடிக நாடகங்களைப் படித்த நான், ஈண்டுத் துணிந்து கூறற்குரிய தொன்று உளது. ஆங்கிலத்தைத் தாய்மொழி யாகக்கொண்ட பாவலரொருவரின் மொழி பெயர்ப்பையும், வடமொழிக்கு விசேடவுரிமை பாராட்டும் பார்ப்பன வித்தகர் ஒருவர் மொழி பெயர்ப்பையும் ஆங்கிலத்தில் நான் படித்துளேன். அவற்றைப் படிக்குங்கால் இயலமை விற் சிறப்ப வினை நயம் ஓரார் வருந்தி யாத்த திருந்தாச் சிற்றில் போல, இயல்போ டெழில் சிவணாது மொழிபெயர்ப்பாளரின் முயற்சி யளவையே அவை விளங்கி நிற்கக் கண்டேன். நம் பண்டிதமணி ஆரியம் போல் தமிழும், தமிழே போல் ஆரியமும் விரும்பிப் பயின்ற வித்தகர் என்பது இம்மண்ணியல் சிறு தேரைப் படிப்பவர்க்கு விசதமாகும்." 6

நாவலர் பாரதியாரே பண்டிதமணியின் மொழி பெயர்ப்பாற்றலை இங்ஙனம் விதந்தோதினர் எனில், வேறு கூறுதற்கு என்னுளது ?

இந்நாடக ஆக்கத்தின் மற்றொரு சிறப்பு என்ன வென்றால், அழகும் உணர்ச்சியும் உடைய பல பகுதிகள் பாட்டாகவே எழுதப்பட்டிருப்பதுதான். உரைநடையை மொழிபெயர்ப்பது எளிது. பாட்டைப் பாட்டாகவே மொழிபெயர்ப்பது அரிதினும் அரிது. நம் பண்டிதமணி இத்துறை யிலும் மாபெரும் வெற்றி பெற்றுள்ளார்.

சாருதத்தன் கூற்றாக வரும் ஒரு பாடலைக் காண்போம்.

காமமிகு மங்கைகதுப் பெனவெளுத்துத்
தாரகையின் கணங்கள் சூழத்
தாமமிகு சந்திரன்கோப் பெருந்தெருவின்
தனிவிளக்காய்ச் சார்ந்தான் அன்னான்
சேமமிகு வெள்ளியதண் கதிர்க்கற்றை
நீர்வடிந்த சேற்றின் கண்ணே
ஏமமிகும் பாலொழுக்கின் இருட்குழாத்து
இடைவிழ்ந்து இலகு மாலோ!"

இப்பாடலைப் படிக்கும்போது திருத்தக்கதேவர், கம்பர், பரஞ்சோதியார் முதலிய பெரும்புலவர் களின் பாடல்களைப் படிப்பது போன்ற உணர்வே நம்முள் மேலிடுகிறதல்லவா?

தமிழில் நாடக இலக்கியங்கள் குறைவு இத்துறை வளர வேண்டுமானால் வடமொழி, ஆங்கிலம் போன்ற பிற மொழி நாடக இலக்கியங் களைத் தமிழர்கள் அறியுமாறு செய்வதே கடனாகும். இவ்வுண்மை அறிந்தே, தமிழ் நாடக இலக்கியம் வளர வேண்டும் என்னும் பெருநோக் கத்தோடு பண்டிதமணி மிருச்சகடிகத்தை மொழி பெயர்த்தார்.

பண்டிதமணி செய்த இத்தொண்டு தமிழர் களால் என்றென்றும் நன்றியோடு பாராட்டத் தக்கது; தமிழ் உள்ள அளவும் நிலைத்திருப்பது.

### VI. சொற்பொழிவாளர் :

'நாகலன் என்னும் நலனுடைமை' எல்லா நலத்துள்ளும் சிறந்தது என்று கூறுவார்

---

6. மண்ணியல் சிறுதேர் *(1933)*→ பக்கம், 41. *(ச. சோ. முன்னுரை)*

திருவள்ளுவர். கேட்டார்ப் பிணிக்கும் தகைய வாய்க் கேளாரும் வேட்ப மொழியும் திறன் எல்லார்க்கும் வாய்ப்பதன்று. பண்டிதமணியோ, இந்நலத்தையும் கருவிலே வாய்த்த திருவாகப் பெற்றிருந்தார்.

கதிரேசனர் எங்கே இருப்பினும் அங்கே தமிழ்க் கதிரும் சைவக்கதிரும் ஒளிவெள்ளம் வீசி நிற்கும். புலவர் பலர் விண்மீன் போல் சூழ்ந்திருப்பத் தாம் சித்திரைத் திங்களே போல் ஒட்பமும் தட்பமும் ஒருங்கே பொருந்த வீற்றிருப்பார். பண்டிதமணி தலைமை தாங்காத கழகமே இத் தமிழ் நாட்டில் இல்லை எனலாம். சொற்பொழிவு நிகழ்த்துங்கால் பண்டிதமணியவர்களுடைய ஆன்ற புலமையும் அவையறிந்துரைக்கும் திறமையும் வெளிப்படும். பிறர் கூற்றை மறுத்துரைக்கும் அமையம் நேர்ந்த போதெல்லாம் அவர் கடுஞ்சொல் கூறியதே இல்லை. குறிப்பாகவும், நகைச் சுவையோடும் சதுரப்பாட்டோடும்தான் எடுத்துக் காட்டினர். அவர் அவையில் பேசுங்காலத்து அருங்கலை விநோதராகவே திகழ்ந்தார்.

மேடைப் பேச்சு என்னும் கலையில் காலஞ்சென்ற திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் அடிகளும், அறிஞர் அண்ணாவுமே இவரோடு ஒப்புரைக்கத் தக்கவர்கள். மேடைதோறும் நாக்கடிப்பாக வாய்ப்பறையறைந்து தமிழின் பெருமையை உலகறியச் செய்தவர் நம் பண்டிதமணியே ஆவர்.

**நல்லாசிரியர் :**

பண்டிதமணி மாணவர்களுக்குப் பாடம் சொல்லுவதில் வல்லவர். தொல்காப்பியம், அகநானூறு முதலிய எல்லா இலக்கண இலக்கியங்களையும், திருமந்திரம் முதலிய சமய நூல்களையும் ஐயந்திரிபறக் கற்றிருந்த பண்டிதமணி மாணக்கர்க்கு மிக மிக இனிமையாகப் பாடம் சொல்லி வந்தார். உரைக்கப்படும் பொருளை உள்ளத்தே அமைத்து, விரையாமலும், வெகுளாமலும், விரும்பி முகம் மலர்ந்து, கொள்வோன் குறிப்பறிந்து கற்பிக்கும் இவரது ஆற்றலை அந்தக் காலத்தில் பாராட்டாதார் யாருமே இல்லை. இவரிடம் கல்வி கற்றுப் பெரும்புலமை எய்திய மாணக்கர்கள் பலராவர். திருப்பதி கீழ்நாட்டுக் கலையாராய்ச்சிப் பகுதிச் சொற்பொழிவாளராக விளங்கிய பெருந்திருவாளர், தி. பொ. பழனியப்ப பிள்ளை அவர்கள் பண்டிதமணியின் மாணவரேயாவர். சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் வாயிலாகச் சங்க நூல்கள் பலவற்றிற்கு உரை எழுதி வெளியிட்ட உரை வேந்தர், பெருமழைப் புலவர், பொ. வே. சோமசுந்தரனரும் பண்டிதமணியிடம் பாடம் கேட்டவரேயாவர். 'அவரவர் எச்சத்தாற் காணப்படும்' என்பதற்கிணங்க, மாணவர்களைப் பார்த்தாலே அவர்தம் ஆசிரியரின் மாண்பு எளிதிற் புலனாகும். தனக்குப் பின் புலமை நலம் சான்ற மாணவர் பேரணியைப் படைத்துச் சென்றவர் நம் பண்டிதமணியார்.

**உரையும் பாட்டும் உடையோர் :**

உலகத்தில் பிறப்போர் பலர்; பிறந்தோர் அனைவருமே புகழ்வாழ்வு வாழ்கின்றவர் அல்லர். ஒருசிலரே உள்ளத்தால் பொய்யாதொழுகி உலகத்தார் நெஞ்சில் வாழ்கிறார்கள். இத்தகு உரையும் பாட்டும் உடையோராய்—புலவர்களால் பாடப்பெறும் புகழ் உடையவராய்—வாழ்கின்றவர்கள் ஒருசிலரே.

நம் பண்டிதமணியோ புலவர்களால் பாடப்பட்ட பெருமைக்குரியவர்; பாட்டுடைத் தலைவராய் விளங்கியவர். இவரைப் பாடி மகிழாத தமிழ்ப் புலவர்களே இல்லையெனலாம். இவரைப் பற்றிப் பாடப்பட்ட பாக்களைத் தொகுத்தாலே அது ஒரு புதுத் தொகைநூலாய்த் திகழும். வெள்ளக்கால் ப. சுப்பிரமணிய முதலியார், டாக்டர், கனகசாயர், நாவலர் பாரதியார், புலவரேறு, வரத நஞ்சைய பிள்ளை செந்தமிழ்க் காவலர் டாக்டர் அ. சிதம்பரநாதனர், கரந்தைக் கவியரசு ரா. வேங்கடாசலம் பிள்ளை, பெருஞ்சொல் விளக்கனர் அ. மு. சரவண முதலியார், சேனவரையத்தின் ஆழங் கண்ட பூவராகம் பிள்ளை, "செந்தமிழ்"ப் பத்திராதிபர் இராமானுஜ ஐயங்கார், பாலகவி வயிநாகரம் வே. இராமநாதச் செட்டியார் ஆகிய பெருமக்கள் பலர் இவரை மனமார, நாவாரப் பாட்டால் பாடி மகிழ்ந்துள்ளனர். இவ்வாறு பண்டிதமணியவர்கள் புலவர்கள் போற்றும் புலவராய், அறிஞர்கள் போற்றும் அறிஞராய், மேதைகள் போற்றும் மேதை நாயகமாய் விளங்கினர்.

எனவே, இதுகாறும் கூறியவாற்றல், பண்டிதமணி என்ற பெரும்பேராசானின் பல்வேறுபட்ட திறனையும் ஒருவாறு கண்டோம். தம் உழைப்பாலும், உரையாலும் தமிழ்நாட்டிற்கும், தமிழ் மொழிக்கும் ஒப்பற்ற தொண்டாற்றிய இப்பெரும் புலவர் தமிழர் அனைவராலும் நன்றியோடு நினைக்கத்தக்கவர்.

பண்டிதமணியின் புகழ் ஞாயிறும், திங்களும், தமிழும் உள்ளவரை என்றென்றும் வாழும். நாம் நம் நன்றிக்கடனின் சாட்சிப்பொருளாக, அவருக்கு நிலைத்த நினைவுச் சின்னம் ஒன்றை உடனடியாக நிறுவுதல் வேண்டும். அப்பெருமகனின் திருவுருவம் தமிழ்நாட்டின் தலைநகரத்தில்—தக்கதோர் இடத்தில் இடம் பெறல் வேண்டும். தமிழுலகம் இதுபற்றிச் சிந்திக்குமாக!

# பண்டிதமணியாரின் தமிழ்க் கொள்கைகள்

**டாக்டர் வ. சுப. மாணிக்கம்,**
தமிழ்ப் பேராசிரியர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

நாமே நம் தாயை மறந்திருப்போமாயின்
நமக்கு நினைவுறுத்துவார் யார்'' —பண்டிதமணி

என் ஆசிரியப்பெருமகன் பண்டிதமணியவர்கள், இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த தமிழ்ப் பெரும்புலவர்களுள் ஒரு முதுபெரும் புலவர் ஆவார். அவர் தமிழ் வளர்ச்சிக்கு அரை நூற்றாண்டுக் காலம் ஆற்றிய தொண்டு முறைகள் அவருக்கே உரியவை. தம் ஊனக்கால் பாராது, இளமை முதல் விழுத்தண்டு ஊன்றிப் பட்டி,பட்டினம்எல்லாம் சென்று,வானம் பொய்ப்பினும் தமிழ் பொய்யா இலக்கியமாரி பொழிந்தவர். வடமொழிப் புலமை செவ்வானம் பெற்றிருந்தும், கலப்புத் தமிழின்றித் தம் சமயக் கட்டுரைகளைக்கூட இயல்பான தமிழில் எழுதி உரைநடை வளப்படுத்தியவர். பிற்காலக் காப்பிய நூல்களில் பெரும்பயிற்சி பெற்றிருந்தும் சங்கத் தமிழே தமிழெனப் போற்றியவர். சைவப் பற்றும் 'தமிழ்ப்பற்றும் குறைவற நிரம்பியிருந்தும் ஏனை மதங்களையும் மொழிகளையும் பொது நோக்காகப் போற்றியவர். யாது இழப்பு எதிர்ப்பு நேரினும், தமிழுக்கு, அதுவும் மரபான நல்ல தமிழுக்குப் பதவித் தமிழனே இழிவு கூறினும், எவ்வளவு பெரிய மேடைகளிலும் கண்ணெதிரே இடித்துரைத்து முழங்கியவர். வித்தகம் பேசிக் கொன்னே காலங்கழிக்கும் உலகோர் நடுவண் வாழ்ந்திருந்தும்,அயல்மொழிப் பெருநூல்களை மொழிபெயர்த்துத் தமிழாரப்பணி செய்தவர். புலவரெலாம் தமிழிலக்கியங்களைச் சக்கையெனச் சவட்டிக்கொண்டிருந்த நிலையில் இன்கரும்பென இலக்கியச் சாறு பிழிந்து, சுவை ததும்பத் தமிழமுதை உலகம் உண்ணச் செய்தவர். அதனால் **தமிழ் நயத் தந்தை** என்ற முதற் புகழாரத்துக்கு உரியவர்.

**''பள்ளிப்படிப்பறியான் பைந்தமிழும் ஆரியமும்**
**தெள்ளிச் சுவைதேரும் செந்நாவான்''**

என்று பாராட்டினர் கவிமணி.

பண்டிதமணி வடமொழியிலும் தமிழே போன்ற புலமையினர் என்பது நாடறிந்த செய்தி. மண்ணியல் சிறுதேர், சுக்கிர நீதி, பொருள் நூல் என்பவை அவர்தம் வடமொழிபெயர்ப்பு நூல்கள். அதனால் இந்திய அரசு மகாமகோபாத்தியாய என்ற கல்விப்பட்டத்தை அவர்க்கு வழங்கிற்று. தமிழுக்கும் வடமொழிக்கும் ஒருசார் வழிவழி கடும்பகையும் உண்டு என்பதனை வரலாறு காட்டும். இவை இன்றும் நிலவி வருகின்றன. தமிழர்களில் தமிழே கற்றவர்கள் உணர்ச்சியும், வடமொழியே கற்றவர்கள் உணர்ச்சியும், இருமொழியும் நிகராகவோ கூடுதல் குறைவாகவோ கற்றவர்கள் உணர்ச்சியும் பலதிறப்படுகின்றன. இந்நிலையில் இருமொழிப்புலமை வாய்ந்த பண்டிதமணியாரின் மொழிக்கோட்பாடுகளை அவர் வழியினர் அறிந்துகொள்வது நல்லது.

பண்டிதமணி வடமொழிக்கு முதன்மை கொடுப்பவர் என்ற தவறான கருத்து ஒரு காலம் நிலவிற்று. கரந்தைத் தமிழ்ச்சங்கத்தின் ஒரு விழாவில், மறைமலையடிகட்கும் பண்டிதமணிக்கும் தூயதமிழ் பற்றி ஒரு சொற்போர் நடந்தது எனவும், தொன்மைத் தமிழ் நூல்களில் வடசொற் கலப்பு ஒன்றுகூட இல்லை என்று அடிகளார் ஒவ்வொரு சங்க நூலாகச் சொல்லிக் கொண்டிருந்தபோது, முன்னிருந்த மணியார் சில வடசொற்கள் உள என்று குறுக்கிட்டுக் கூறி வந்தனர் எனவும், அதனால் உணர்ச்சி பொங்கிய அடிகளார் பழந்தொல்காப்பியத்திலுமா வட சொல் உண்டு என்று வினவியபோது, "குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க்கொடை'' என்று (குஞ்சரம்- யானை) வந்திருப்பதைப் பண்டிதமணி எடுத்துக் காட்டினர் எனவும் நடந்த ஒரு நிகழ்ச்சியை அறிகின்றோம். இச்சொற்பூசலினால் பண்டிதமணி வடமொழிச் சாய்வினர் என்பது பெறப்படுதல் யாங்ஙனம்? பழந்தமிழ்ப் பனுவல்களில் யாதும் வடசொற் கலப்பு இல்லை என்பது அடிகளாரின் கருத்து. சிறிய அளவிலேனும் உண்டு என்பது பண்டிதமணியாரின் கருத்து. இச்சொற்பிணக்கை வரலாற்று மொழியாராய்ச்சியாகக் கருதிக்கொள்ள வேண்டும். அவ்வளவே. தூய தமிழ் வேண்டுமா வேண்டாமா என்ற முடி

வுக்கும் இந்நிகழ்வுக்கும் தொடர்பில்லை. இது பற்றிப் பண்டிதமணியிடம் மகிபாலன்பட்டியில் நான் உரையாடியபோது, அப்பெருமகன் என்னிடம் கூறியது: "நான் தூய செந்தமிழுக்கு என்றும் ஆதரவானவன். மறைமலையடிகள் தம் உரை நடை நூல்களில் முதலில் மிகுதியாக வடசொற் கலந்து எழுதியவர். தூய தமிழ்க்கொள்கை யைக் கடைப்பிடித்த பின் செந்தமிழுக்கு மாறி யவர். நான் அப்படியில்லை. தொடக்க முதலே என் கட்டுரைகளை நல்ல தமிழில் எழுதிக்கொண்டு வருகிறேன். முதலிலிருந்து எனக்குத் தூய தமிழ்க்கொள்கையே. என் கட்டுரைகளை நீ பார்த்திருப்பாய். இடைக்காலத்தில் இக்கொள் கைக்கு நான் வந்தவனில்லை." இவ்வாறு காரணம்பட, அழுத்தம் பெற மொழிந்தனர். இவ்வுண்மைக்கு அவர்தம் எழுத்துக்களே கட்டளைக்கல். ஓர் எடுத்துக்காட்டு:

"புலவர்களைப் பாதுகாத்து அவர் செந்நாவாற் பாராட்டப்படுதலினும் செல்வர் பெறும் பேறு வேறு யாதுளது? காலத்தாற் கவரப்பட்ட செல்வருட் புகழுடம்பு கொண்டு இன்னும் நம்மோடு அளவளாவி இன்புறுவார், புலவர் பாடும் புகழ் படைத்தாரன்றே! கற்றவர்க்கு ஈத்துவக்கும் பேறில்லாதார், செல்வம் படைத்தும் ஒளியும் புகழும் இலராய் விலங் கோடு ஒப்ப உண்டு களித்துத் துஞ்சும் இயல்பினரேயாவர். ஆதலாற் செல்வர்களே! புலவரைப் போற்றுதல் நும்மைப் போற்று தலாகும். ஆதலின், தமிழ் நலம் கருதி இன்னோரன்ன துறையில் இறங்குமின்கள்! செல்வம் படைத்த ஞான்றே புலவர் பக்கலி ருக்க விழைமின்கள்! பற்பலவாற்றானும் செல வழிக்கப்படும் நும் பொருட்கூறுகளுள் ஒன்று புலவர்க்கெனச் செய்மின்கள்! அவிச் சுவையினும் இனிய கவிச்சுவையை நுகர மின்கள்! நும் பூதவுடல் வன்மையுற்றிருக்கும் ஞான்றே புகழுடலின் ஆக்கத்திற்கு வேண்டு வன புரிமின்கள்! அழிதன் மாலையதாகிய செல்வத்தைக் கொண்டு அழியாப்புகழை வளர்த்தற்குரிய நெறியைப் பற்றுமின்கள்!" (உரைநடைக் கோவை-இலக்கியம்)

அயல்மொழி கற்றல் தமிழர்க்குப் புதியதன்று. அதற்காக வேற்றுமொழிக் கிளவிகளைத் தன் தாய்மொழியில் கலப்பது நல்ல மொழிக்கொள் கையாகுமா? இடைக்காலத் தமிழர்கூட இத் தவற்றினை மிகுதியும் செய்துவிடவில்லை. இக் காலத் தமிழரிடைத்தான் மொழிப்பரத்தமை அள விறந்து காணப்படுகின்றது. இதற்குக் காரணம், ஒருமொழியிலே நினைந்துச் சொல்லி எழுதத் தெரியாக் குறைபாடேயாகும். எழுதத் தெரிந்த சிலரும் கலப்புத் தமிழாக எழுதி வருவதற்குக் காரணம், கலப்பு, பரந்த மனத்துக்கு அடையாளம் என்று மயங்கியிருப்பது. தாம் கற்ற பல மொழி களிற் காணப்படும் கருத்துக்களையன்றோ தமிழிற் குக் கொண்டுவர வேண்டும்? அது தமிழ் வளர்ச்சி. உரிய சொல் இருக்கவும், ஆக்கிக் கோடற்கு இடமிருப்பவும் அயற்கிளவிகளை இடை மடுத்தல் தமிழைக் கடைமடுத்தலாகும். பிற மொழி கற்றோர் தமிழை எழுதவேண்டிய முறைக் குக் கம்பரைப்போல் பண்டிதமணியும் ஒருவழி காட்டி. தமிழ் நயத் தந்தையாம் பண்டிதமணி பிற சொற் கலந்த ஒரு செய்யுள் நயங்குறைந்தது என்று கருதுகிறார்:—

"சுவையுடைமை அவ்வம்மொழிகளில் தனித்த நிலையிற் காணப்படுதல்போற் கலப்பிற் காணப்படுதல் அரிது. ஒரு மொழியிற் செவ்வனம் பயின்று சுவை நிலை கண்டுணர்வார்க்கு அதன் தனிநிலையிற் போலப் பிறமொழிக் கலப்பில் அத்துணை இன்பம் உண்டாகாது."

தமிழ், வடமொழியிலிருந்து பிறந்தது எனவும், வடமொழியின்றித் தமிழ் இயங்க முடியாது எனவும் பிதற்றுவார் கொள்கையெல்லாம் பண்டிதமணிக்கு வெறுப்பானவை. "நம் தமிழ் மொழியாதும் குறைவுடையதன்று. இதுமற்றொரு மொழியினின்றும் தோன்றியதென்றுதல், பிறி தொன்றன் சார்பின்றி நடைபெறாது என்றுதல் கூறுவார், உண்மையாராய்ச்சி இலராவர். ஒருசில வடசொற் கலப்பு உண்மை பற்றித் தமிழ்மொழி யை வடமொழியினின்றும் தோன்றியதென்றல் பொருந்தாத ஒன்றாகும்" என்று கழறியுரைக்கும் பண்டிதமணியார் எழுத்து, தமிழர்தம் நெஞ்சக் கல்லில் பொறிக்க வேண்டிய எழுத்தாகும்.

ஏன் வரவர மிகுதியாக வடமொழி தமிழிற் கலந்தது என்று ஆராயத் தொடங்குகின்றார், வட மொழிப் பயிற்சிமிக்கும் நற்றமிழில் எழுதும் பண்டிதமணியார். சங்க காலத்தில் மிகச்சில சொற்களே தமிழிற் புகுந்தன. அதற்கே தொல் காப்பியர் ஒலி வரம்பு காட்டினர். வடகிளவிகள் விரமாமுனிவர்போலத் தமிழுருவெய்தி வழங்கின. நாளடைவில் புலவர்களுக்குத் தனித் தமிழ்ச்சொற்களைத் தெரிந்து வழங்கும் ஆற்றல் இல்லை. ஒருசிலர்க்குத் தெரிந்திருந்தாலும், வட சொற் கலப்பு செவிக்கு இன்பமென அவர்கள் மயங்கிக் கிடந்தனர். தனித்தமிழிற் சுவை காணும் புலமை குறைந்தது. அத்தகைய புலவர்

அருஞர். வடமொழியாளர்தம் மனம் உவப்ப அவர்களை உவகைப்படுத்த வேண்டித் தமிழிற் பாட்டும் உரையும் எழுதும் புது மோகம் எங்கும் பரந்தோடியது. அதனல், வடசொற்கள் அப்படி அப்படியே, அவ்வவ்வொலிப்படியே வரம்பின்றித் தமிழிற் படிந்தன என்பது, வடசொற் கலப்பு வரலாற்றுக்குப் பண்டிதமணி கூறும் காரணங்கள் ஆகும். இக்காரணங்கள் இன்றும் உளவே; மேலும் தடிக்கின்றனவே; அயற்சொற்கள் என்னும் விதைகள் விழுந்து விழுந்து தமிழ்க் கோபுரங்கள் என்னுமோ என்று நாம் அஞ்சுகின்றேம். வட சொற்களை சேர்ந்தவாறு தமிழிற் புகுத்தல் முறை யன்று என்பதும், கலப்பு எளிய நடையாகாது என்பதும்பண்டிதமணியின் மொழித்துணிபு.

என் தமிழ் வளர்ச்சிக்குச் செல்வர்கள் நன் கொடை செய்ய முன்வந்திலர் எனவும் ஆராயத் தொடங்குகின்ருர், சன்மார்க்க சபையை நிறுவி வளர்த்த பண்டிதமணியார். பல்லாண்டுகளாக வடமொழி வேத சாத்திரப் பாடசாலைகட்கும், வட மொழிக் கல்லூரிகளுக்கும், சில்லாண்டுகளாக ஆங்கிலக் கல்லூரிகட்கும் ஏராளமான பொருளைச் சில செல்வர்கள் செலவிடுகின்றனரே; இப் பொருட்செலவுத் தொகையில் ஒரு சிறு பகுதி கொண்டு நம் அருமைத் தமிழ்த்தெய்வத்திற்குத் திருக்கோயில் அமைக்கக்கூடாதா? தமிழ்த்தெய் வத்தை வழிபடும் மாணக்கர்களுக்குப் பெருஞ் சோற்றில்லங்கள் அமைக்கலாகாதா? இங்ஙனம் செய்யாமைக்கு ஒரு காரணம், வடமொழியாளர் செல்வாக்கு இச்செல்வர்களிடை மிகுதிப்பட் டிருப்பது என்று பண்டிதமணியார் வெளிப்படை யாகக் கூறியிருக்கும் துணிவு அவர்தம் ஆழ்ந்த தமிழன்புக்கு ஒரு சான்று. இச்செல்வர்பால் சென்று, தமிழ்மொழி வளர்ச்சிக்குச் செலவு செய்யுங்கள் என்று தமிழறிஞர்கள் சொல்லப் புகுந்தால், அவ்வறிஞர்தம் சொல் ஏறவில்லையே என்று பண்டிதமணி கதிரேசனர் மனம் வெதும்பி மானத்தோடு சொல்வது நினையத்தகும். அவர் சொல்லிய காரணங்கள் குறைவதற்கும் ஒழிவதற் கும் மாருகப் புது வண்ணப்போர்வையில் வளர வல்லவோ காண்கின்றேம்? குற்றம் குணமாக வல்லவோ காட்சியளிக்கவும் பாராட்டப்படவும் காண்கின்றேம்? சில தமிழர்தம் மனத்தில் உண்மையொளிஏறினல் அல்லதுஏற்றினல் அல்லது, கலப்புத் தமிழுக்கு மடிவில்லை, உண்மைத் தமிழுக்கு விடிவில்லை.

கம்பரின் பெருங்காப்பியத்தில் பண்டிதமணி யார்க்குத் தனி ஈடுபாடு உண்டு. அக்காப்பியச் சோலையில் செவி நுகர் கனிகள் காம்புதோறும் உள என்பது அவர்தம் கருத்து. இராமாயணத்தில் அவர்க்கு இருந்த ஈடுபாடு, ஒரு காலத்துச் சில பகுதியாரிடமிருந்து எதிர்ப்பை வாங்கித் தந்தது. வடமொழிப்பற்றினர், ஆரிய நாகரிகவேட்கையினர் என்ற ஏச்சும் கிடைத்தது பிறர் குற்றங்களை இடித்துக் காட்டி, அதனல் எதிர்ப்பில் வளர்ந்த பண்டிதமணி என்னும் அரிமா, 'என் உடல் காரண மாக மற்போருக்கு அஞ்சுகிறேன்; ஆனல் எச் சொற்போருக்கும் அஞ்சேன்' என்று முழங்கிற்று. ஒரு மொழியில் தூய சொற்களால் எழுதப்பட்ட செய்யுட்களே சுவை பயப்பன என்ற பண்டித மணியின் இலக்கியக்கோட்பாட்டை முன்னர் எடுத் துக்காட்டினேன். சங்க இலக்கியம் தூய தமி ழால் ஆனது ஆதலின், அதன்கண் அவர்க்கிருந்த தனிப்பற்றுக்கு எல்லையுண்டோ?

"சங்க இலக்கியங்களுள் ஒருசிலவற்றைத் தெளிவாகப் பொருளுணர்ந்து படித்து அடிக்கடி பழகி வருவோமாயின், இந்நடையும் நமக்கு எளிமையாக அமையும். எதுகை மோனை நிமித் தம் வறிதே அடைமொழிகளைப் புணர்த்துப் பொருட்சுருக்கமும் சொற்பெருக்கமும் அமைய யாக்கப்படும் பிற்காலத்தவர் பாடல்கள் நுண்ணறிவுடையார்க்கு இன்பஞ்செய்வன வாகா. ஒரு சிறு சொல்லேனும் வறிதே விர வாமல் உய்த்துணருந்தோறும், "நவில்தொறும் நூல் நயம்போலும்" என்னும் முதுமொழிக் கிணங்க இன்பஞ்செய்வன சங்கப் பாடல்களே."

இம்மேற்கோளால் சங்க நூல்களில் பண்டித மணியார்க்கு இருந்த தனியன்பு வெளிப்படை யாரொருவர் சங்க நூற் பற்றுடையவராக இருக் கின்ருரோ, அவரே நல்ல தமிழ்ப்பற்றினர் என்பது என் துணிபு.

அரசர் அண்ணுமலையார் தமிழிசைப் பேரியக்கம் தொடங்கியபோது உறுதுணையாக இருந்த தலைவர் களுள் பண்டிதமணியும் ஒருவர். இசைப்பாடல் களும் இசை நூல்களும் வெளிவரத் துணை செய் தவர். தமிழிசையின் தொன்மையினையும் தனித் தன்மையினையும் பல மேடைகளில் எடுத்துக் காட்டி நிறுவியர். இசைக்குரிய பாடல்கள் எம் மொழியில் இருக்க வேண்டும் என்ற வினு பொருளற்றது என்பது கதிரேசனரின் கருத்து. மக்கட்குரிய நாட்டு மொழியிலே இருப்பதுதான் இயல்பு என்று அறிவுறுத்தும் பண்டிதமணி, தாம் ஒன்று வினவுகின்ருர். இசை கேட்கும் மக்களிற் பலர் தம் தாய்மொழிப் பாடற்கருத்துக்களையே உணரும் நிலையில்லாதிருக்கும்போது, சிறிதும் பொருள் விளங்காத வேற்று மொழிப் பாடல்கள் என்ன பயன் விளைக்கும்? ஓர் இசையரங்கிற்குச்

சென்றிருந்த பண்டிதமணி, தமிழ்ப்பாடல்களில் ஏதேனும் ஒன்று பாடலாகாதா என்று வேண்டிய போது, இசையரங்கை நடத்திய பெருமகனுர் இவரை, அரங்கு மரபு அறியாதவராகக் கருதினு ராம். விளங்காத பாடல்களையெல்லாம் முதலில் நெடுநேரம் பாடிவிட்டு, அவர்கள் சோர்ந்த நிலையில், விளங்கும் சில தமிழ்ப்பாடல்களை ஏதோதானே என்று பாடி முடிப்பதே கேவலமான அரங்கு மரபு என்று பண்டிதமணி, இசையின்பம் என்ற கட்டுரைக் கண் நகைபடக் கூறியுள்ளார்.

**"இன்ப வுணர்ச்சி இனிய தமிழிசைக்கே**
**என்பது உணர்மின் இருநிலத்தீர்"**

என்பது பண்டிமதணியின் ஆணை.

மேற்காட்டியவற்றிலிருந்து பண்டிதமணியின் அசையா அதிராத் தூய தமிழ்க் கொள்கையும், தமிழுக்கே தன் அன்பினை முழுதும் வைத்த தனிப் பற்றும், சங்கத் தமிழுக்கே ஏற்றம் கொடுத்த தனி நேர்மையும் எல்லாம் பெறப்படும். பண்டிதமணி யின் மொழிக்கொள்கையை அறுதியிட்டுக் கூறப் புகின், தமிழ்ப்பற்றினர், வடமொழி மதிப்பினர் என்று முடிக்கலாம். பற்று என்பது, மொழியா யினும் சமயமாயினும் ஓரிடத்துத்தான் இருக்க முடியும் என்பதும், மற்றை மொழிகளையும் மற்றைச் சமயங்களையும் பொதுப் பார்வையாக மதிக்க வேண்டும் என்பதும் அவர்தம் நூலில் நாம் காணத்தகும் முடிபு. இதனல், பண்டிதமணி பிறர் போல் வடமொழி வெறுப்பினர் அல்லர் என்பது தெளியலாம். வடமொழியிலிருந்து புதிய செய்தி களையும், நாடகம், அரசியல் போன்ற புதிய துறை நூல்களையும் தமிழுக்கு வழங்கிய வடமொழி வள்ளல் அவர். காதற்கடிதங்கள் என்ற இலக் கியக் கட்டுரையும், ஞானத்தின் திருவுரு என்ற சமயக் கட்டுரையும், திருவாசகக் கதிர்மணி விளக் கமும் அவர்தம் வடமொழியறிவால் புதுப்பொலிவு பெற்றுள்ளன. மண்ணியல் சிறுதேர் என்ற அழகியதொடர், பண்டிதமணி தமிழ்த்தெய்வத்துக் குப் படைத்தளித்த புதுக் காணிக்கை. பிற மொழி கற்ற தமிழர்க்குப் பண்டிதமணி காட்டிய எழுத்து நெறிகள் பலப்பல. மணிமிடை பவளம் அவர் நெறியன்று. தமிழ்க்கட்டுரைக்கிடையே வட மொழிச் செய்யுள் மேற்கோளாகக் காட்ட வேண் டின், அதனைத் தமிழ்ச் செய்யுளாகத் தாமே ஆக்கித் தருவது அவர்தம் எழுத்து நெறிகளில் ஒன்று. துசியந்தனுக்குச் சகுந்தலை நங்கை வரைந்த வட மொழி காதற்கடிதத்தை,

**"நின்னுடைய உள்ள நிலையறியேன் நின்பாலே**
**மன்னுடைய வேட்கை மலிவுற்ற-என்னுறுப்பைக்**
**காமன் இரவும் பகலும் கனற்றுகின்ருன்**
**ஏம அருளில்லா இவன்."**

என்று வெண்பாவாகப் படைத்த நெறி பின்பற்று தற்கு உரியது.

பிற நாட்டுச் சாத்திரங்கள் நல்லதமிழில் பெயர்த் துத் தமிழை வளப்படுத்த வேண்டும் என்பது பண்டிதமணியின் அறவுரை. வடமொழியில் உள்ள அளவை நூல்கள், சுவையாராய்ச்சி நூல் கள், பொருணூல்கள், அறிவு நூல்கள் தமிழிற்கு வருதல் வேண்டும் எனவும், இதனைச் செய்தற்கு வடமொழியொடு தமிழ் பயின்ருர் பலர் வேண்டும் எனவும், வடமொழி மூல நூல்களை உள்ளவாறு மொழிபெயர்த்துக் கொண்டபின் அவற்றின் நலம் தீங்குகளை ஆராய வேண்டும் எனவும் அவர் எடுத் துரைப்பர். பண்டிதமணியின் பின்வருங் கருத்து அவர்தம் நல்லுளத்துக்கு ஒரு கரி.

"எத்துணையோ ஆயிரங் காவத தூரங்களுக்கு அப்பாலுள்ள ஆங்கில தேயத்தார் தம் மொழி களில் இவ்வரிய வேதாகம உபநிடதங்களைப் பொருட்படுத்தி மொழிபெயர்த்துப் பலவகைச் சிறந்த ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன் வெளிப் படுத்தியிருக்கின்றனர். **தொன்றுதொட்டு ஒற்றுமையோடு வழங்கப்பட்டு வரும் நம் தமிழ் மொழியில்** இதுகாறும் அவை வெளிவராமை ஒரு குறையேயாம். தெளிவான தமிழ் உரை நடையிற் பல்வகை ஆராய்ச்சிக் குறிப்புகளுடன் அவை வெளிவரல் வேண்டும்."

'தொன்றுதொட்டு ஒற்றுமையோடு வழங்கப் பட்டு வரும் நம் தமிழ் மொழியில்' என்ற தொட ரிலிருந்து, வடமொழிக்கும் தமிழ்மொழிக்கும் உள்ள உறவைப் பண்டிதமணி எப்படி மதிக்கிருர் என்பது வெளிப்படை. தமிழில் இயல்பான பற்றுடைய பண்டிதமணியார்க்குப் பாரத மொழிகளில் ஒரு பெருமதிப்பு உண்டு. "நம் பரதகண்டத்து மொழி களை எல்லாம் நிலை பிறழாது என்றும் திருந்திய முறைபிற்றிகழ்தல், மூல நூல்கள் எல்லாம் செய் யுள்களால் ஆக்கப்பட்டமையானேயாம்" என்று இப்புலவர் பெருமகன் வடித்தெடுத்த கருத்து மொழிவளர்ச்சியுடையார்தம் சிந்தனைக்கு உரியது. தமிழ்ப்பற்றும், தமிழ் வளர்ச்சிக்கென அயல்மொழி உறவும், தூய தமிழ்ச்சொற்களால் ஆய உரைநடையும், தூய மொழிபெயர்ப்பும், செல்வர் தம் செல்வம் தமிழுக்குப் பயன்பட வேண்டும் என்ற அறிவுரையும் மொழி பற்றிய பண்டிதமணியங்கள் ஆகும்.

"நமக்குரிய நாட்டுமொழியைப் புறக்கணித்து வேற்று மொழியில் எத்துணை மேற்சென்ருலும் மொழியறிவாற்பெறும் பயன் முற்றும் பெற்ற தாக மாட்டாது. இங்கிலையில் நாம் இன்றியமை யாது பயில வேண்டுவது நமக்குரிய தமிழ் மொழியேயாகும்."

—**பண்டிதமணியம்**

# தலைசிறந்த உரையாசிரியர்

திரு. க. வெள்ளைவாரணனார்,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

தண்ணார் தமிழளிக்கும் செந்தமிழ்ப் பாண்டி நாட்டிலே "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என உலக மக்கள் அனைவரையும் ஒரு குடும்பத்தவராக எண்ணி, யாவரிடத்தும் அன்புரிமையுடன் இனிமையாகப் பழகும் உலக ஒருமைப்பாட்டுணர்வினை அறிவுறுத்திய புலவர் பெருமான் கணியன் பூங்குன்றனார் தோன்றிய பெருமை வாய்ந்தது பூங்குன்ற நாடாகும். புலமை வளம் சுரக்கும் பூங்குன்ற நாட்டின் தலைநகராகிய மகிபாலன் பட்டியிலே, புகழ் வாய்ந்த பூம்புகார் வணிகர் மரபில் தோன்றிச் செந்தமிழ் வளர்த்த பெரும் பேராசிரியர் மகாமகோபாத்தியாய முதுபெரும் புலவர் பண்டிதமணி மு. கதிரேசச்செட்டியார் என்பதனைத் தமிழறிஞர் நன்குணர்வர். சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியிலே தோன்றி, இவ்விருபதாம் நூற்றாண்டில் புகழுடன் வாழ்ந்து, ஐம்பதாண்டுகளுக்கு மேலாகத் தமிழ்ப்பணி புரிந்த புலமைச்செல்வர் பண்டிதமணியவர்கள், செந்தமிழும் வடமொழியும் ஆகிய இருமொழிப் புலமையும் ஒருங்கு வாய்ந்து, தமிழ் மொழிக்கு ஆக்கமாகும் வகையில் சிறந்த பல நூல்களை இயற்றியுள்ளார்கள். தமிழிலும் வடமொழியிலும் உள்ள சிறந்த காப்பியங்களை இடைவிடாது பயின்று, அவற்றின் சுவை நலங்களைத் தாமே துய்த்து மகிழ்ந்தும், கற்றோர் பலர் கூடிய பேரவைகளிலே அச்சுவை நலங்களை இனிமையும் தெளிவும் பொருந்த எடுத்துக்கூறிப் பிறரை மகிழ்வித்தும், தமிழ்நாடெங்குஞ் சென்று தமது நாநலத்தால் தமிழ்ப்பயிர் வளரப் புலமை நீர் பாய்ச்சிப் போற்றி வளர்த்தார்கள்.

மேலைச்சிவபுரிச் சன்மார்க்க சபையினைத் தக்கவர்களைக்கொண்டு நிறுவி, அச்சபையின் வாயிலாகத் தமிழகத்தில் வாழ்ந்த பெரும்புலவர் பலரையும் நாட்டு மக்களுக்கு அறிமுகப்படுத்தித் தமிழுக்கு ஆக்கமாகும் பணிகள் பல தொடர்ந்து நிகழ ஊக்கம் நல்கிய உரவோர் பண்டிதமணியவர்களேயாவர். செந்தமிழும் சிவநெறியும் வளரப் புலமைப்பணி புரிதலையே தமது வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்ட பண்டிதமணியவர்கள், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற் பேராசிரியராக அமர்ந்து, மாணாக்கர் பலர்க்குச் சிறந்த நூல்களைப் பாடஞ்சொல்லியும், ஆராய்ச்சித் துறையின் தலைவராக இருந்து வடமொழியிலுள்ள கௌடலியம் என்னும் பொருள் நூலைத் தூய செந்தமிழ் நடையில் மொழிபெயர்த்தும், உள்ளத்தையுருக்கும் அருள் நூலாகிய திருவாசகத்தில் திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம், திருவெம்பாவை ஆகிய பகுதிகளுக்குச் சிறந்த முறையில் உரை வரைந்தும், வடமொழியிலுள்ள சுக்கிர நீதியென்னும் பொருள் நூலையும் மிருச்சகடிகம் என்னும் நாடகத்தையும் நல்ல தமிழ் நடையில் மொழிபெயர்த்தும், கற்றோர் அறிவினைக் கிளர்ந்தெழச்செய்யும் நுண்பொருட் கட்டுரைகள் பல வரைந்தும், செந்தமிழ்ப் பாடல்கள் இயற்றியும் தமிழ்த்தாய்க்கு அரும்பணிகள் பல புரிந்துள்ளார்கள். நூலாசிரியர், போதகாசிரியர், உரையாசிரியர், நாவலர், பாவலர் எனப் போற்றும் வண்ணம் பண்டிதமணியவர்களது தமிழ்ப்பணி பல துறைகளிலும் பாராட்டுந் திறத்தினதாய்த் திகழ்கின்றது. அறிவினுற் சிவனேயாகிய மணிவாசகப்பெருமான் அருளிச்செய்த திருவாசகப் பகுதிகளுக்கு இவர்கள் எழுதிய கதிர்மணி விளக்கம் என்னும் உரையினைக் கற்போர், சிறந்த தமிழ் நூல்களுக்குத் திட்பநுட்பம் செறிய உரை வரைந்த தலைசிறந்த உரையாசிரியர் வரிசையில் இவர்களையும் ஒருவராகக் குறித்துப் போற்றுவர் என்பது உறுதி.

நூலாசிரியர் கருதிய நுண்பொருள்களைத் தம் மதிநுட்பத்தால் உய்த்துணர்ந்து, அவற்றை யாவரும் தெளிவாக உணர்ந்து மகிழ்தல்

வேண்டும் என்னும் உயர்ந்த நோக்கத்துடன் நூலாசிரியர் வாய்மொழியை அடியொற்றித் தம் உரைத்திறத்தால் நூல் நுதல் நுண்பொருள்களை விரித்து, விளக்கவல்ல புலமைச் செல்வர்களே உரையாசிரியர் எனச் சிறப்பித்துப் போற்றத் தக்கவராவர். இவ்வகையில், தொல்காப்பியம், திருக்குறள், சிலப்பதிகாரம் முதலிய செந்தமிழ்த் தொன்னூல்களுக்கு உரைவரைந்த இளம் பூரணர், பேராசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், அடியார்க்கு நல்லார், மணக்குடவர், பரிமேலழகர், சிவஞானமுனிவர் முதலிய பெருமக்கள் இங்குச் சிறப்பாகக் குறிக்கத் தக்க தலைசிறந்த உரையாசிரியர்களாவர். உலக வழக்கும் செய்யுள் வழக்கும் ஆக நாட்டிற்பயிலும் இருவகை மொழி நடையினையும் கூர்ந்து நோக்கி, இப் பெருமக்கள் இயற்றிய உரை நூல்கள், இவர்களுக்கு முன்னே சென்ற நூற்றாண்டுகளில் வளம் பெற வளர்ந்த தமிழ் மொழியின் பழுதிலாத் திறத்தையும், இவர்கள் வாழ்ந்த காலப்பகுதியாகிய நிகழ்காலத்தில் அமைந்த தமிழ் வளர்ச்சிக் கூறுகளையும், இவர்களுக்குப்பின் எதிர்காலத்தில் தமிழ் வளம் பெறுதற்குரிய வழிதுறைகளையும் இனிது புலப்படுத்தும் சிறப்புடைய உரை நூல்களாகத் திகழ்கின்றன. பெருவெள்ள முடையனவாய்த் தம்மிடத்திற் படிந்தவர்களை ஈர்த்துச் செல்லும் பேராறுகளை எதிர்த்து நீந்தி, அவற்றின் நீரோட்டத்தின் வன்மை இத்தகையதென உணர முற்படுவார் போல, இவ்வுரையாசிரியர்களும் தமக்குப் பன்னூறாண்டுகள் முற்பட்டு வாழ்ந்த சான்றோர் நூல்களின் சொல்நடை, பொருளமைதி ஆகிய மொழியின் ஓட்டத்தைக் காலச் சுழலில் அகப்படாது எதிர்சென்று ஆராய்ந்து உலகிற்கு உணர்த்தும் பணியினை இனிது நிறைவேற்றியுள்ளார்கள். இவர்கள் செய்த பணியினைத் தொடர்ந்து செய்த சிறப்பு பண்டிதமணி அவர்களுக்கு உரியதாகும்.

கவிஞர்களின் உள்ளக்குறிப்பறிந்து பாட்டின் பொருள் நயத்தினை விரித்துரைக்கும் புலமைத் திறம் பண்டிதமணியவர்கள்பால் இயல்பாகவே யமைந்து விளங்கியது. அவர்களது பேச்சிலும் உரையிலும் நவில்தொறும் நூல் நயங்காணும் புலமைத்திறம் வெளிப்பட்டு, யாவரையும் உவகையில் திளைக்கச் செய்த சிறப்பினை அவர்களது விரிவுரைகளைக் கேட்கும் வாய்ப்பினைப் பெற்ற அறிஞர் பலரும் நன்குணர்வர். தமிழில் உரை நடை இவ்வாறுதான் அமைய வேண்டும் என்னும் தெளிவான கொள்கையினை வகுத்துக்கொண்டு உரை எழுதிய பெருமை பண்டிதமணியவர்களுக்குரிய தனிச்சிறப்பாகும். ஒரு மொழியைச் செவ்விதிற் பயின்று அதன் சுவையினை நுகர்வார்க்கு, அம்மொழியின் தனித்த, கலப்பற்ற தூய மொழி நடையில் விளையும் இன்பம் போல, அம் மொழியிற் பிறமொழிச் சொற்களைக் கலக்குங்கால் அத்துணைப் பேரின்பம் விளையாது என்னும் உண்மையினை, வடமொழியும் தென்றமிழும் பயின்று பெற்ற தமது அநுபவத்தால் உணர்ந்து, தமிழின் தனித்தன்மையினைத் தமது உரைத் திறத்தாற் பேணி வளர்த்தலைப் பண்டிதமணியவர்கள் தமது முதற்கடமையாகக் கருதினார்கள். பிறமொழிச் சொற்களை வரம்பின்றிக் கலந்து இலக்கண வரம்பின்றி எழுதப்படுவதே எளிய நடை என்று இக்காலத்தில் ஒருசிலர் கூறி வருகிறார்கள். இவர்கள் கூறும் இவ்வெளிய நடை எழுதுதற்கு மொழியில் ஆழ்ந்த பயிற்சி வேண்டுவதில்லை. இலக்கணப் பிழையின்றி அரிதுணர் பொருளவாகிய திரிசொற்கள் மிகுதியும் இடம் பெறுமல் பலர்க்கும் பொருள் விளங்கும் இயற் சொற்களால் இயல்வதே எளிய தமிழ்நடையாம் என்பது, பண்டிதமணியவர்களின் உறுதியான கொள்கையாகும். தமிழிலுள்ள அருஞ்சொற்களை வழக்கிழந்து மறையவிடாது, அவற்றை உரிய இடங்களில் பொருளின் திட்பத்திற்கேற்றவாறு புலவர்கள் தமது உரைநடையில் நன்கு பயன்படுத்தி, உலக வழக்கில் நிலைபெறச் செய்தல் வேண்டும் என்பது, பண்டிதமணியவர்களின் பெருவேட்கையாகும். யார் யார், எவ்வெவ்வகை நூல்களில் ஆழ்ந்த பயிற்சியும் புலமையும் பெற்றுள்ளார்களோ அவர்களே அவ்வந்நூல்களுக்கு உரையெழுதுவார்களாயின் அவ்வுரை சிறந்து விளங்கும் என்பதும், ஒரு புலவன் கால நீட்டிப்பினைக் கருதாது நெடுங்காலம் முயன்று தன் வாழ்நாளில் ஒரு நூலுக்கு உண்மையுரையெழுதி நிறைவேற்றினலும் போதும் என்பதும் அவர்கள் கருத்தாகும். இவ்வுயர்ந்த நோக்கத்துடன் உரைகாணும் திறத்தில் சங்க நூல்களுக்கும், சிலப்பதிகாரம் முதலிய செந்தமிழ்க் காப்பியங்களுக்கும், திருவாசகம் முதலிய அருட்பனுவல்களுக்கும் தெளிவான உரை விளக்கம் எழுதும் ஆழ்ந்த பயிற்சியும் நுண்மாணுழைபுலமும் பண்டிதமணியவர்கள்பால் இயல்பாக அமைந்திருந்தன.

உலக வாழ்க்கையினைப் போலப் புலமை வாழ்க்கையினையும் இல்லறம், துறவறம் என இருதிறமாகப் பகுத்துரைத்தல் ஏற்புடையதே. மாந்தரது மனம் முதலிய அகக்கருவிகளும், மெய் முதலிய புறக்கருவிகளும் செம்மையான நெறியிற் செல்லுதற்குரிய அகமும்புறமுமாகிய உயர்ந்த நூலுணர்வில் திளைத்து மகிழ்தலைப் புலமைத்துறையில்

இல்லற வாழ்க்கையெனக் கொள்ளலாம். இங்ஙனம், உலகநூல் வழக்குப் பற்றிய நூற் பொருளில் திளைத்தலாகிய மனைவாழ்க்கையை நிகழ்த்திய புலமைச் செல்வர்கள் இறையருளால் மெய்யுணர்வு கைவரப்பெற்று, அது வாயிலாக அறிவன் நூலாகிய அருள் நூல்களை நன்கு பயின்று, திருவருளின்பத்தில் திளைத்துத் தம் உரைத்திறத்தால் ஏனையோரையும் அவ்வருள் நூல்களில் திளைத்தின்புறச் செய்தலே புலமைத் துறையின்பாற்பட்ட துறவற வாழ்க்கையாகும். பெரும்பேராசிரியர் பண்டிதமணியவர்கள் மேற் புலமைத்துறைக்குரியனவாகக் கூறப்பட்ட இரு வகை வாழ்க்கையினையும் முறையே மேற் கொண்டு வாழ்ந்து காட்டிய புலமைச் செல்வரா வர். இவ்வுண்மை சங்கச்செய்யுள்கள் சில வற்றுக்கும், சிலப்பதிகாரம் முதலிய பெருங்காப் பியச் செய்யுட்பகுதிகள் சிலவற்றுக்கும் இவர்கள் அவ்வப்பொழுது தமது நுண்ணுணர்வால் உய்த் துணர்ந்து கூறிய உரை நுட்பங்களாலும், செம் புலச் செல்வராகிய திருவாதவூரடிகள் அருளிச் செய்த திருவாசகப் பகுதிகளுக்கு இவர்கள் அரி தின் முயன்று எழுதிய கதிர்மணி விளக்க உரைப் பகுதிகளாலும் இனிது புலனும்.

தமிழ் மக்களின் புலமைக் கருவூலமாகத் திகழும் சங்கச் செய்யுள்களுக்கும் சிலப்பதிகாரம் முதலிய சிறந்த பெருங்காப்பியங்களுக்கும் உரை நுட்பங் கண்டுணர்த்துந் திறத்தில் பண்டிதமணியவர்கள் நிரம்பிய ஆற்றல் வாய்ந்தவர் என்பதனை, அவர் களிடத்திற் பாடங்கேட்கும் வாய்ப்பினைப்பெற்ற மாணவர்களும், அவர்தம் சொற்பொழிவுகளைக் கேட்டு மகிழும் வாய்ப்பினைப் பெற்ற அன்பர்களும் நன்குணர்வார்கள்.

சங்கச் செய்யுள்களின் பொருள் நலங்களைத் தெளிய விரித்துரைக்கும் உரைத்திறம் பண்டித மணியவர்கள்பால் இயல்பாக அமைந்திருந்தது என்பதனைக் குறுந்தொகை மாநாட்டுத் தலைமை யுரையால் இனிதுணரலாம். ''தாமரை புரையுங் காமர் சேவடி'' எனத்தொடங்கும் குறுந்தொகைக் கடவுள் வாழ்த்துப் பாடலுக்கு இவர்கள் உய்த் துணர்ந்து கூறிய உரைவிளக்கம், நவில்தொறும் நூல்நயங் கண்டுணர்த்தும் இவர்தம் உரை நுட்பத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ் கின்றது.

சிலப்பதிகாரம், மதுரைக்காண்டம், புறஞ்சேரி யிறுத்த காதையில், மதுரை நகரத்தில் தென்ற லுக்கு மணங்கூட்டும் நிலையில் அமைந்த பல்வேறு நறும்புகைகளைக் கூறும் இளங்கோவடிகள்,

> ''அட்டிற் புகையும் அகலங் காடி
> முட்டாக் கூவியர் மோதகப் புகையும்
> மைந்தரும் மகளிரும் மாடத் தெடுத்த
> அந்தீம் புகையும் ஆகுதிப் புகையும்
> பல்வேறு பூம்புகை அளைஇ......
> மதுரைத் தென்றல் வந்தது''

என்கின்றார். மதுரை நகர மக்கள் உணவு சமைக் கும் அடுக்களையில் எழுந்த தாளிப்புப் புகையும், பெரிய கடை வீதியில் அப்ப வாணிகர் மோதகம் முதலிய இனிய பண்டங்களை அமைக்குங்கால் உளவாம் புகையும், ஆடவரும் மகளிரும் தம் முடி களுக்கும் ஆடையணிகட்கும் ஊட்டிய அழகிய இனிய அகிற்புகையும், வேள்விச்சாலைதோறும் எழுந்த ஆகுதிப்புகையும் ஆகிய பல்வேறு புகை களோடும் கலந்து மதுரைத்தென்றல் மணங் கமழ்ந்து வந்தது என்பது இதன் பொருளாகும். இவ்வாறு மதுரை நகரத்தெழுந்த பல்வேறு புகை களையும் நால்வகையாக அடிகள் வகுத்துக் கூறிய தன் உட்பொருள் இதுவென நுண்ணிதின் ஆராய்ந்து விளக்குதல் நூல் நயங்கண்டுணர்த்தும் உரையாசிரியர்க்குரிய கடமைகளில் ஒன்றாகும்.

''மதுரை மாநகரில் வீடுகள்தோறும் அடுக்களை யில் எழுந்த தாளிப்புப் புகை அந்நகரமாந்தர் மனை வாழ்க்கையினை மகிழ்வுடன் நிகழ்த்தித் தம்பால் வந்த விருந்தினரை அன்புடன் வரவேற்று, இன்சுவையுணவளித்து விருந்தோம்புதலாகிய நல்லறச் செய்கையினையும், கடை வீதிகளில் அப்ப வாணிகராகிய கூவியர் விலைப்பொருட்டு அப்பம் சுடுங்கால் எழுந்த புகை, அந்நகர்வாழ்வார் யாவரும் உவக்கத்தொழில் செய்து பொருளீட்டும் செயல்முறைகளையும், காதல்மிக்க மைந்தரும் மகளிரும் மாடங்களில் எழுப்பிய அகிற்புகை அந் நகர்வாழ் மாந்தர்களின் இன்ப நுகர்ச்சியையும், வேள்விச்சாலையில் எழுந்த ஆகுதிப்புகை அந் நகரில் வாழ்வோரது வீடு பேற்று முயற்சியையும் அறிவுறுத்தும் நிலையில் அறம், பொருள், இன்பம், வீடு அடைதலாகிய மக்கள் வாழ்க்கையின் நாற் பொருட்பயன்களையும் முறையே உணர்த்தின'' என்பது பண்டிதமணியவர் கண்டுணர்த்திய உரை நயமாகும்.

சிலப்பதிகாரம், வஞ்சிக் காண்டம், குன்றக் குரவையில் உரைப்பாட்டு மடையாக அமைந்தது,

> ''குருவியோப்பியுங் கிளிகடிந்தும் குன்றத்
> துச் சென்றுவைகி
> அருவியாடியும் சுனைகுடைந்தும்''

எனவரும் தொடராகும். இது, சேர நாட்டு மலை வாழ் மகளிரின் தொழில்களையும் விளையாடல் களையும் குறிப்பதாகும். மலையில் வாழும் குற மகளிர் வளம் பொருந்திய குன்றங்களிற் சென்று தங்கியிருந்து புனங்காக்குந் தொழிலில் ஈடு பட்டிருக்கும் போது, அப்புனத்தில் தினைக்கதிர்

களைக் கொய்தற்குப் பறந்து வரும் குருவிகளை ஓட்டியும், கிளிகளைக் கடிந்து விலக்கியும், மலையருவியில் நீராடியும், ஆழமான சுனை நீருள் மூழ்கிக் குடைந்தும் விளையாடித் திரியும் இயல்பினை விளக்குவது மேற்காட்டிய உரைப்பாட்டின் தொடர். இதன்கண் 'குருவி ஓப்பியும்', 'கிளிகடிந்தும்' என்பவற்றின் சொற்பொருள் நயத்தினை விளக்க எண்ணிய பண்டிதமணியவர்கள், 'குருவியையும் கிளியையும் ஓப்பி' என்றோ, 'கடிந்து' என்றோ ஒரு வினைச்சொல்லாற் கூறாமல், 'குருவி ஓப்பியும் கிளி கடிந்தும்' என இரு வினைச்சொற்களாற் பிரித்துக் கூறியதன் நோக்கம் யாது எனச் சிந்தித்தார்கள். ஓப்புதல், கடிதல் என்னும் வினைச்சொற்கள் இரண்டும், குருவியும் கிளியும் தினைப்புனத்திற் புகாதவாறு அவற்றை விலக்குதல் என்னும் பொதுப்பொருண்மையில் ஆளப்படாமல்,மகளிர் தம் குரலால் மென்மையாக விலக்குதல், கவண், தட்டை முதலிய கருவி கொண்டு வன்மையாக விலக்குதல் என்னும் சிறப்புப் பொருண்மையில் முறையே ஆளப்பெற்றிருத்தல் வேண்டும் என ஆராய்ந்து தெளிந்தார்கள். தினைப் புனத்திற் படியும் குருவிகள், மகளிர் 'ஆயோ' என ஒலியெழுப்பி மெலிதாக ஓட்டிய நிலையிலேயே இடம் பெயர்ந்தோடும் இயல்பின. ஆதலால், 'குருவி ஓப்பியும்' என்றார். கிளிகளோ, அவ்வாறு மகளிர் 'ஆயோ' எனக் குரலெழுப்பி மெலிதாக ஓட்டிய நிலையிலும் அப்புனத்தை விட்டு நீங்காதனவாய் அவர்தம் மழலை மொழி கேட்கும் வேட்கையால் அச்சமின்றி அம்மகளிரை அணுகி நின்று நீங்காதனவாயின. ஆதலால், அக்கிளிகளை அவர்கள் கவண் முதலிய கருவி கொண்டு வலிந்து துரத்தவேண்டிய இன்றியமையாமையேற்பட்டது எனக் குறிப்பால் அறிவுறுத்தும் நிலையில், 'கிளி கடிந்தும்' என்றார். இங்ஙனம், ஓப்புதல், கடிதல் என்னும் இருவேறு வினைச்சொற்களால் இளங்கோவடிகள் உணர்த்தக் கருதிய பொருள் நுட்பத்தினைத் தெளிவாகப் புலப்படுத்தும் முறையில், சிலப்பதிகாரம், மனையறம்படுத்த காதையிலிருந்து பின்வரும் பகுதியைப் பண்டிதமணியவர்கள் எடுத்துக் காட்டி விளக்கினார்கள்.

> **''மாயிரும் பீலி மணிநிற மஞ்ஞைநின்**
> **சாயற்கு இடைந்து தண்கான் அடையவும்**
> **அன்னம் நன்னுதல் மென்னடைக்கு அழிந்து**
> **நன்னீர்ப் பொய்கை நளிமலர்ச் செறியவும்**
> **அளிய தாமே சிறுபசுங் கிளியே**
> **குழலும் யாழும் அமிழ்துங் குழைத்தநின்**
> **மழலைக் கிளவிக்கு வருந்தின வாகியும்**
> **மடநடை மாதுநின் மலர்க்கையின் நீங்காது**
> **உடனுறைவு மரீஇ ஒருவா ஆயின''**

என அவர்கள் எடுத்துக் காட்டிய பகுதி, கண்ணகியின் எழில் நலங்களைக் கோவலன் புனைந்து பாராட்டும் முறையில் அமைந்ததாகும். ''நல்ல நெற்றியையுடைய மாதே! பெரிய தோகையினையுடைய மயிலின் கூட்டம் நின்னுடைய மேனியின் மென்மைத் தன்மைக்குத் தோற்று நாணி இறிந்த காட்டிற்சென்று ஒடுங்கவும், அன்னப்பறவை நினது நடைக்குத் தோற்றுப் பொய்கையிலுள்ள தாமரை மலரிற்சென்று மறைந்துகொள்ளவும், பசுமை நிறம் வாய்ந்த கிளிகளோ, குழலிசையும் யாழிசையும் அமிழ்தமும் குழைத்து அமைத்தது போலும் நின் மழலை மொழிக்குத் தோற்றன வாயினும், நின்னை வழிபட்டு, நின் மொழிகளின் இனிமையைப் பயிலக் கருதி, நின் கையினின்றும் நீங்காதனவாய் நின்னோடு உடனுறைதலைக் கருதிப் பிரிந்து செல்லாதனவாயின'' என்பது மேற்காட்டிய தொடரின் பொருளாகும். மலைவாழ் மகளிர் கிளிமொழியினராதலின், அவர்கள் அதட்டி எழுப்பிய குரலொலியினைத் தம்மினமாகிய கிளிகளின் குரலெனக் கருதித் தினைப்புனத்திற் படியுங் கிளிகள் அச்சமின்றி அவர்களை அணுகிவந்தன வாதலின், அவற்றைக் கவண் முதலிய கருவியின் துணைகொண்டு கடிந்துவிலக்க வேண்டியதாயிற்று என்பது, மேற்காட்டிய இளங்கோவடிகள் வாய்மொழியால் இனிது புலனாதல் காணலாம். இத் தொடர்ப்பொருளை விரித்து விளக்கும் முறையில்,

> **''மையார் தடங்கண்ணாள் மடமொழியாள் புனங்காக்கச்**
> **செவ்வே திரிந்தாயோவெனப் போகா விடவிளிந்து**
> **கைபாவிய கவணால் மணிஎறிய இரிந் தோடிச்**
> **செவ்வாயின கிளிபாடிடும் சீபர்ப்பத மலையே''**

என வரும் சுந்தரர் தேவாரம், 'குருவிஓப்பியும் கிளிகடிந்தும்' என்னும் சிலப்பதிகாரத் தொடர்க்குப் பண்டிதமணியவர்கள் கூறிய உரை நுட்பத்திற்கு அரண் செய்யும் நிலையில் அமைந்துள்ளமை அறிந்து மகிழத்தகுவதாகும்.

இவ்வாறு, கவிஞர்களின் உள்ளக் குறிப்பறிந்து பொருள் நயத்தினை விரித்துரைத்துக் கற்போர் உள்ளத்தினைப் பாடற்பொருளில் ஒன்றித் திளைக்கச்செய்யும் தலைசிறந்த உரையாசிரியராகப் பண்டிதமணியவர்கள் விளங்கிய திறத்தினை யுணர்ந்து மகிழ்ந்த புலவர் பெருந்தகை கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையவர்கள்,

> **வாசகம் எல்லாம் மணிவா சகமாமோ**
> **காசெல்லாம் காணும்பொற் காசாமோ—**
> **பேசுலகில்**

மன்னும் உரையெல்லாம் மகிபால மாநகரான்

சொன்னவுரைக் கீடாமோ சொல்

என்ற பாடலால் வியந்து பாராட்டியுள்ளார்கள்.

தலைசிறந்த உரையாசிரியராகவும் நூலாசிரிய ராகவும் நாவலராகவும் பாவலராகவும் விளங்கிய பண்டிதமணியவர்கள பிறந்த பூங்குன்ற நாட்டின் திலகமாகிய மகிபாலன் பட்டியில், முற்காலத்தில் வாழ்ந்த கணியன் பூங்குன்றனாரையும், இக்காலத் தில் வாழ்ந்த புலமைச்செல்வர் பண்டிதமணி கதிரேசனாரையும் நினைவுகூர்ந்து, புலவர் பெரு மக்களைப் போற்றும் நிலையில் சிறப்புடைய மணி மண்டபம் அமைக்க முன்வந்த தமிழக அரசின் தமிழார்வமும் தமிழ்ப்பணியும் நாட்டு மக்கள் எல்லோராலும் நன்றியுடன் மதித்துப் பாராட்டத் தக்கனவாகும்.

———

★

ஒரு நாடு தனக்குரிய மொழியை ஆக்கமுற ஓம்பிப் பாதுகாத்தா லன்றித் தான் சிறந்த நிலை எய்துதல் அரிதாம். மொழி வளர்ச்சி கொண்டே அது வழங்கும் நாட்டின் நலத்தைபுணரலாம். எந்த நாடு தன் மொழிச் சுவையை உணர்தலிற் பின்னடைகின்றதோ, அது மற்றை யெல்லா வளங்களாலும் பிற்பட்டதாகும். ஆதலின் தமிழ்ச் செல்வர் களும் தமிழ்ப் புலவர்களும் விழிப்புடையராய் நின்று நம் உடைமையை விளக்கமுறப் பேணல் வேண்டும். நம் மொழி வளர்ச்சியில் நாம் செயற் பாலன பலவாகும்.

**உரைநடைக் கோவை** *(இரண்டாம் பகுதி)*
**பண்டிதமணி. மு. கதிரேசச் செட்டியார்.**
பக்கம். *55*
*(25-4-1941)* மகிபாலன் பட்டி.

# முதுபெரும் புலவர்

பேராசிரியர் லெ. ப. கரு. இராமநாதச் செட்டியார், சென்னை.

"யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்னும் தொடரினைக் குறிப்பிடாத சொற்பொழிவாளர் எவரும் இலர்; எழுத்தாளரும் இலர். கற்றவரும் மற்றவரும் இத்தொடரினைத் தமிழரின் மறை மொழியாகக் கருதுகின்றனர். இத்தொடர் அமைந்த செய்யுளை இயற்றிய புலவர், கணியன் பூங்குன்றனுர் என்பவர்; இவர், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர்; பூங்குன்றம் என்னும் ஊரினர்; இவ் ஊரே, இப்போது மகிபாலன்பட்டி எனப் பெயர் வழங்கப் பெறு கின்றது. இரண்டாயிரம் ஆண்டுக்கால வரலாற்றுச் சிறப்புப் பெற்ற இவ் ஊர், மீண்டும் வரலாற்றுப் புகழ் பெற்ற ஊராகத் திகழ்கின்றது. இச்சிறப்பிற்குக் காரணம், இவ் இருபதாம் நூற்றுண்டில் தலைசிறந்த தமிழறிஞராகத் திகழ்ந்த மகாமகோபாத்யாய, பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்கள், இவ் ஊரில் பிறந்தமையே ஆகும்.

பண்டிதமணி அவர்கள், இம்மகிபாலன்பட்டியில் முத்துக்கருப்பன் செட்டியார் அவர்களுக்கும், அவரது இல்லறத் துணைவியாரான சிவப்பி ஆச்சி அவர்களுக்கும் மகனாக '6-10-1881-இல் தோன்றினார்கள். உலகத்தில் வாழும் உயிர்கள் மகிழ ஞாயிறு கடலிலே தோன்றுகின்றது என்பதனை,

"'உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு"

என நக்கீரனுர் பாடியுள்ளார். அஞ்ஞாயிறே போலக் கதிரேசனுர் அவர்களும் அறிஞர்கள் மனம் மகிழப் பிறந்தார்கள்.

இவர்கள், தம் ஏழாம் ஆண்டில், அக்கால வழக்கத்திற்கு ஏற்பத் திண்ணைப் பள்ளிக்கூடத்திற்குச் சென்றுர்கள். ஏழு திங்கள் பயின்றுர்கள். ஆத்தி சூடி, உலக நீதி போன்ற சிறு நூல்களைக் கற்றுர்கள். அவற்றை மனப்பாடம் செய்து கொண்டார்கள். இந்நூல்கள் தரும் இன்பத்தினைத் துய்த்த இவர்கள், மேலும் பல நூல்களையும் கற்றல் வேண்டும் என எண்ணினுர்கள். அதற்கேற்ப, அப்போது தமக்குக் கிடைத்த திருத்தொண்டர் புராணம், கம்பராமாயணம் முதலிய நூல்களைக் கற்றுர்கள். முன்னைப் பிறப்பின் நற்பயனுல் அந்நூல்கள், முன்பே கற்கப்பெற்ற நூல்கள் போன்று இவர்களுக்குப் பொருள் விளக்கி நின்றன. ஆசிரியர் துணையின்றித் தாமே அவற்றைக் கற்றுர்கள்; கற்றதைப் பிறருக்கு எடுத்துச் சொல்லிக் களிபேருவகை கொண்டார்கள்.

திரைகடல் ஓடித் திரவியம் தேடுதல் நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் சிறப்புத் தொழிலாகும். அத்தொழிலில் பண்டிதமணி அவர்கள், தம் பதினெண்ரும் ஆண்டில் ஈடுபட்டார்கள்; அதனுல் இலங்கைக்குச்சென்றுர்கள். சென்றபின் மூன்று ஆண்டுகளில், இவர்களின் தந்தையார் விண்ணுலக வாழ்வினை அடைந்தார்கள். அதனுல் இவர்கள், தாய்நாட்டிற்கு வந்தார்கள், குடும்பப் பொறுப்பினை ஏற்றுக்கொண்டார்கள், அறிவுத்துறையில் நாட்டம் செலுத்தினுர்கள்; யாருடைய உதவியுமின்றித் தாமாகவே, மேலும் பல நூல்களைக் கற்றுர்கள். கருவிலேயே கல்வித் திருவினைப்பெற்ற இவர்கள், கல்வி முற்றக் கற்றவர்களும் பாராட்ட விளங்கினுர்கள். சோழவந்தான் அரசஞ் சண்முகனுருடன் நட்புக்கொண்டார்கள். அரசஞ் சண்முகனுர், பண்டிதமணி அவர்களின் கல்வியறிவிற்குப் பெருந்துணையாக இருந்தார்கள். இவ் இருவரது நட்பும் வளர்பிறை போல் வளர்ந்தது.

அந்நாளில் மதுரையில் வித்தியாபானு என்னும் பெயர் உடைய அச்சகம் ஒன்று இருந்தது. அவ் அச்சகத்தின் உரிமையாளரான மு. ரா. கந்தசாமிக் கவிராயர் என்பவர் சிறந்த புலவர். இப்புலவருடனும் பண்டிதமணி அவர்கள், அரசஞ் சண்முகனுரின் தொடர்பினுல் நண்பராயினுர்கள். இந்நட்பினுல், வித்தியா பானு என்னும் இதழில், இலக்கியக் கட்டுரைகள் பல எழுதினுர்கள். இவற்றைப் படித்த அறிஞர் பெருமக்கள், இவர்களை மிகவும் பாராட்டினர். அக்காலத்தில், புலமை நலம் சிறந்த வெள்ளக்கால் ப. சுப்பிரமணிய முதலியாரின் தொடர்பும் இவர்களுக்கு உண்டாயிற்று.

பண்டிதமணி அவர்களும் இவர்கள் காலத்தில் செட்டிமார் நாட்டில் செல்வாக்குப் பெற்றிருந்த

பிமகவி என்பவரும் நண்பர்களாக இருந்தனர். இடையே இருவருக்கும் கருத்து வேறுபாடு ஏற்பட்டது. அதனல் பிமகவிராயர், பண்டிதமணி அவர்களைப் பற்றிப் பல இடங்களில் குறைகூறத் தொடங்கினர். தம்மைப் பற்றிப் பிமகவிராயர் குறை கூறுவதனைப் பண்டிதமணி அவர்கள் அறிந்தார்கள். அதனல் பிமகவிராயர் இயற்றிய இளைச்சிவெற்பட்டித் தலபுராணம் என்னும் நூலிலும், அவர் நிகழ்த்திய சொற்பொழிவு களிலும் கண்ட குறைகளைத் தொகுத்து, வித்தியா பானுவில் கட்டுரைகளாக வெளியிட்டார்கள். இதனைக் கண்ணுற்ற பிமகவிராயர், வழக்கு மன்றத்தில் பண்டிதமணி அவர்களின்மீது மான நட்ட வழக்குத் தொடுத்தார்.

அப்போது மதுரையில் சிறந்த வழக்குரைஞ ராக நாவலர் ச. சோமசுந்தர பாரதியார் திகழ்ந் தார்; பண்டிதமணி அவர்கள், பாரதியாரையே தம் வழக்குரைஞராகத் தேர்ந்தெடுத்துக்கொண் டார்கள். இதன் வாயிலாகப் பண்டிதமணி அவர் களுக்கும் பாரதியாருக்கும் ஏற்பட்ட நட்பானது, பண்டிதமணி அவர்களின் இறுதிக் காலம் வரை- நாற்பதாண்டுக் காலம் இடையறாது நீடித்தது. இந் நட்பின் ஆழத்தினைப் பற்றி நாவலர் பாரதியார், 1941-இல் நடைபெற்ற பண்டிதமணி அவர்களது மணி விழாவில், "ஆங்கிலமன்றித் தமிழிற் பேசி அறியாத என்னைத் தாய்மொழியில் தமிழர் கூட்டத்தில் பேசவைத்து, அத்துறையில் ஊக்கித் தமக்கு இனியர் குழுவில் என்னையும் சேர்த்து அன்பு காட்டிப் பண்டிதமணி அவர்கள் அறிஞர் உலகில் எனக்கும் இடம் தந்தார்கள்' என்று குறிப்பிட்டார்கள்.

பின்னர் மறைமலையடிகள், ஞானியாரடிகள், மகாவித்துவான் ரா. இராகவையங்கார் முதலிய அறிஞர் பெருமக்களுடன் பண்டிதமணி அவர்கள் தொடர்பு கொண்டார்கள். சொற்பெருக்காற்றும் திறம் மிக்க பண்டிதமணி அவர்கள், சொற்பொழி விற்கு உரிய குறிப்புக்களை ஒழுங்குபடுத்தி எழுதி வைத்துக்கொண்டு, பின்னரே பேசத் தொடங்கு வார்கள். இவர்களது சொற்பொழிவில், நகைச் சுவை மிளிரும். தனித்து உரையாடும்போதும் இவர்கள் பேச்சில் அமையும் நகைச்சுவைகளை இன்று நினைத்தாலும் அவை மகிழ்ச்சி தரும்.

தமிழ் இலக்கியங்களைக் கற்றுச் சுவைத்த கதிரேசனர், வடமொழி இலக்கியங்களையும் அறிதல் வேண்டும் என விரும்பினர்கள். அதனல் வடமொழியில் வல்லுநராக விளங்கிய தருவை நாராயண சாஸ்திரியார் என்பவரிடம் ஐந்து ஆண்டுகள் வடமொழி பயின்றார்கள்; இருமொழிப் புலமையும் பெற்றார்கள். இவர்களின் வடமொழிப் புலமை கண்டு வியந்த இவர்களின் ஆசிரியரான தருவை நாராயண சாஸ்திரியார், இவர்களுக்கு மாணவரைப் போலப் பிற்காலத்தில் இருந்தார்.

மேலைச்சிவபுரியில் வ. பழ. சா. பழநியப்ப செட்டியார் அவர்கள், தமிழ்ப் புலவர்களிடத்தில் பேரன்புடையவராக விளங்கினர்கள். அவர்களது வண்மையினல், பண்டிதமணி அவர்கள் 13-1-1909 இல், மேலைச்சிவபுரியில், சன்மார்க்க சபையை நிறுவினர்கள். ஒவ்வோர் ஆண்டு விழா விலும் தக்க தமிழறிஞர்களை அழைத்துச் சொற் பெருக்காற்றுவித்துத் தமிழ் மணம் கமழச் செய்து அச்சபையினை வளர்த்து வந்தார்கள். அப்பணியினை அவர்களின் தலையாய மாணவ ராகிய டாக்டர் திரு. வ. சுப. மாணிக்கம் அவர்கள் தொடர்ந்து நடத்தி .வருதல் குறிப்பிடத்தக்கது. இச் சன்மார்க்க சபையினரே கதிரேசனருக்கு 1925இல், பண்டிதமணி என்னும் பட்டத்தினை வழங்கினர்கள். இச்சிறப்புப் பட்டமளிப்பு விழா விற்கு மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே சாமிநாதையர் அவர்கள் தலைமை தாங்கினர்கள். அப்போது மகாவித்துவான், ரா. இராகவை யங்கார் அவர்கள், பண்டிதமணி அவர்களின் புலமைத் திறனைப் புகழ்ந்து பாராட்டினர்கள். அவ்விழாவில் யானும் கலந்துகொண்டேன். அப்போது பண்டிதமணி அவர்கள் கூறிய நன்றி யுரை, இன்னும் என் காதுகளில் ஒலித்துக் கொண்டிருக்கின்றது.

பண்டிதமணி அவர்கள், நன்றி சொல்லும் போதும், வரவேற்புக் கூறும்போதும் மிகவும் பொருத்தமாகச் சொல்லும் பேராற்றல் படைத்த வர்கள். அதன் உச்ச நிலையினைப் பண்டிதமணிப் பட்டம் வழங்கப் பெற்றபோது, அறிஞர் உலகிற் குக் காட்டினர்கள். குழந்தை கையில் தாய், பொன்னலான கிண்ணத்தைக் கொடுக்கின்ருள். குழந்தையும் வாங்கிக்கொள்கின்றது. ஆனல், மீண்டும் அத் தாய் கேட்டாலும் அக்குழந்தை, அக்கிண்ணத்தினைக் கொடாது. கிண்ணமோ பொற்கிண்ணம். அதனல் அக்குழந்தையின் தாய், அப்பொற்கிண்ணத்தினைக் குழந்தை எவ் வாறு காப்பாற்றுகின்றது என்பதில் கண்ணும் கருத்துமாக இருத்தல் வேண்டும். இதனை மணிவாசகப் பெருமான், "மையிலங்கு" என்று தொடங்கும் திருச்சதகப்பாட்டில், "மழக்கை இலங்கு பொற்கிண்ணம்" என்று குறிப்பிட்டுள் ளார். திருவாசகத் தேனை மாந்தி மாந்தித் திளைத்த பண்டிதமணி அவர்கள், இத்தொடரின் சிறப்பினைத் தம் நன்றியுரையின் வாயிலாக நிறுவினர்கள். "எனக்குப் பண்டிதமணி பட்டம் கொடுத்தது, குழந்தையின் கையில் பொற் கிண்ணம் கொடுத்ததைப் போன்றது. குழந்தை பொற்கிண்ணத்தினைக் கேட்டால் தராது. அது

போல, நானும் இப்பட்டத்தினைத் திருப்பித்தர உடன்படேன். குழந்தை கிண்ணத்தினைக் காப்பாற்றுவதைத் தாய் எவ்வாறு பொறுப்புடன் பார்த்து வருவாளோ, அவ்வாறு, நான் இப்பட்டத்தினைக் காப்பாற்றுவதில் கண்ணும் கருத்துமாக இருந்து வரும் பொறுப்பு, அறிஞர் பெருமக்களாகிய தங்களைச் சேர்ந்தது'' என விளக்கினார்கள்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகம், தமிழறிஞர்கள் வாழும் பெருங்கழகமாக மிளிர்தல் வேண்டும் என்பது, இப் பல்கலைக் கழகத்தினை நிறுவிய பெருங்கொடை வள்ளல் செட்டி நாட்டரசர் டாக்டர் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களின் குறிக்கோள் ஆகும். இதனால், தக்க தமிழறிஞர்களாகத் திகழ்ந்தவர்களை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கு அரசர் அவர்கள், விரும்பி அழைத்தார்கள். தமிழ்ப்புலவர்களும் பழுமரம் தேடும் பறவைபோல, அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தினையே நாடினார்கள்.

இங்கிலையில், இருமொழிப் புலவராக விளங்கிய பண்டிதமணி அவர்களும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்குப் பயன்பட வேண்டும் என அண்ணாமலை அரசர் அவர்கள் எண்ணினார்கள். எண்ணம் நிறைவேறியது. 1934-இல் பண்டிதமணி அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திற்கு வந்து பணி ஏற்றார்கள். 1946 வரை தமிழ் விரிவுரையாளராகவும், தமிழ்ப் பேராசிரியராகவும், தமிழ் ஆராய்ச்சித்துறைத் தலைவராகவும் பணியாற்றினார்கள். இக்காலம், பண்டிதமணி அவர்களது வாழ்வின் பொற்காலம் என்று கூறலாம். பின்னர்ப் பண்டிதமணி அவர்கள், உடல் நலக் குறைவினால் பல்கலைக்கழகப் பணியிலிருந்து விலகிக் கொண்டார்கள். அவ்வாறு விலகும் போது, தமக்கு உடல் நலம் இன்மையால் பல்கலைக் கழகப் பணியிலிருந்து விலகிக்கொள்ள அனுமதி தருதல் வேண்டும் என அண்ணாமலை அரசர் அவர்களுக்கு எழுதினார்கள். அப்போது அரசர் அவர்கள், "தங்களின் கடிதம் கண்டேன். உடல் நலக் குறைவினால் தாங்கள் விலகுவதாகச் சொல்லும்போது என் செய்ய இயலும், தாங்கள் விலகிக்கொள்வதால், அண்ணாமலைப் பல்கலைக் கழக மணிகளில் ஒன்று பிரிந்துவிட்டதாகக் கருதுகின்றேன்'' என்னும் பொருள் அமைய மறுமொழி எழுதினார்கள். இதனால், அரசர் அவர்கள் கதிரேசனாரிடம் கொண்டிருந்த பெருமதிப்புப் புலனாகும்.

அப்போது நம் நாட்டினை ஆண்ட ஆங்கிலேய அரசினர், மொழிப்பணி செய்யும் அறிஞர்களுக்கு மகாமகோபாத்தியாய என்னும் பட்டம் கொடுத்துப் பாராட்டினர். அப்பட்டம், இருமொழிப்புலமையும் பெற்ற பண்டிதமணி அவர்களுக்கு வழங்கப் படாதிருந்தது. இதனைக் கண்ட செட்டிநாட்டரசர் (அப்போது குமாரராஜாவாக விளங்கிய) டாக்டர் ராஜா சர் முத்தையா செட்டியார் அவர்கள், அரசினரிடம் எடுத்துக் கூறிப் பண்டிதமணி அவர்களுக்கு 'மகாமகோபாத்தியாய' பட்டம் வழங்குமாறு செய்தார்கள். இப்பட்டம், 11-6-1942இல், பண்டிதமணி அவர்களுக்கு வழங்கப்பெற்றது. அறிஞர் பெருமக்களும், பொதுமக்களும் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தனர்.

சிறந்த அறிவும், உயர்ந்த பதவிகளும், மதிக்கத் தக்க பட்டங்களும் பெற்ற பண்டிதமணி அவர்கள், தம் 73 ஆம் ஆண்டில் (24-10-1953) விண்ணுலகு எய்தினார்கள்.

கற்றோர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையராகத் திகழ்ந்த கதிரேசனார் அவர்களுடன் இருந்து அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பணியாற்றுகின்ற பேற்றினைப் பெற்ற ஆசிரியர்கள் சிலருள் யானும் ஒருவன். அப்போதெல்லாம் இவர்களின் நுண்மாண் நுழைபுலத்தினைக் கண்டு வியந்திருக்கின்றேன். அரிய கருத்துக்களை யார் கூறினாலும் அக்கருத்தின் ஆழம் கண்டு பாராட்டுதல் இவர்களது இயல்பு. வகுப்பில் பாடம் நடத்தும் நேரம் நீங்கலாக எஞ்சிய நேரங்களில் இவர்களது இல்லத்திலும் தமிழ் ஆராய்ச்சி நடைபெறும். இவர்களைச் சூழ்ந்து புலவர்கள் எந்நேரமும் வீற்றிருப்பர். தொல்காப்பியச் சொல்லதிகாரச் சேனாவரையர் உரையினை, இவர்களது இல்லத்தில் இவர்களுடன் இருந்து புலவர் கந்தசாமியார், வித்துவான் மு. அருணாசலம் பிள்ளை முதலியோர் ஆராய்ந்த பொழுது யானும் கலந்துகொள்ளும் பேற்றினைப் பெற்றுள்ளேன். அக்காட்சி, பழங் காலத்தில் அறிஞர்கள் சங்கமிருந்து தமிழ் ஆராய்ந்த செய்தியினை நினைவூட்டத்தக்கது.

இவர்களின் சைவ சித்தாந்தப் புலமைத் திறத்தினை அறிதற்குத் திருவாசகத்தில் திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம், திருவெம்பாவை ஆகிய வற்றிற்கு இவர்கள் எழுதிய உரைகளே தக்க சான்றுகளாக மிளிர்கின்றன. இவ் உரையினைப் பாராட்டாத தமிழ் அறிஞர்கள் எவரும் இலர். இவர்கள்,சிறந்த மொழிபெயர்ப்பாசிரியரும்ஆவர். வடமொழியிலிருந்து பல நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார்கள். இவர்களது மொழிபெயர்ப்புத் திறனைக் குறிப்பிட்ட பெரும் புலவர் ரா. இராகவையங்கார், "பொருள் பெயர்த்திலன் மொழிபெயர்த்தனன் புலமையைப் புவி புகழ்தல் தக்கதே'' என்று பாராட்டியுள்ளார்.

இத்தகைய பெரும்புலவரான பண்டிதமணி அவர்கள் கலந்துகொள்ளாத தமிழ் விழாக்களும் தமிழ் மன்றங்களும் தமிழ் நாட்டில் இல்லை. இவர்கள் ஒரு முறை இலங்கைக்குச் சென்று, அங்கும் இவர்கள், தம் அறிவொளி பரப்பிப் பெரும்புகழ் பெற்றார்கள். இவர்களின் புகழ், தமிழ் உள்ளளவும் நின்று நிலவும்.

# பண்டிதமணியவர்களின் தமிழாக்கம்

**மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர்,**
திருக்குறள் ஆராய்ச்சி
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

**தா**யைப் போற்றுதல் தனயன் கடமை. தமிழுக்கு எல்லா வகையிலும் ஆக்கம் தேட வேண்டியது தமிழன் கடமை. ஆக்கப் பணிகள் ஆயிரம் ஆயிரமாக உள்ளன. புதிய கருத்துக்கள் செறிந்த புதுமைக் காப்பியங்கள் அமைக்கலாம். விடு பூக்களைப் போன்ற கருத்து மணஞ்செறிந்த தனிப்பாடல்கள் பாடலாம். விழிப்பையும்-எழுச்சியையும்-சமுதாயச் சீர்திருத்தங்களையும் மையமாகக்கொண்ட கதை, கட்டுரைகள் எழுதலாம். பழைய நூல்களுக்கு, மரபு பிறழாத புதிய உலகமும் விரும்பக்கூடிய உரைகள், எழுதலாம். திறனாய்வுகள் செய்யலாம். தமிழ் நூல்களை இக்காலப் பிற நாட்டு நல்லறிஞர் நூல்களோடு ஒப்பிட்டுச் சிறந்தன போற்றிச் சிந்தனையைப் பெருக்கலாம். இன்று வளர்ந்துள்ள பிற மொழிச் சாத்திரங்களின் அறிவைத் துணைக்கொண்டு தமிழர் கண்ட உயிரியல் - மர இயல்-மருந்தியல்-வேதியியல்-மனஇயல் நுணுக்கங்களைப் புலப்படுத்தலாம். நம் முன்னோர்களால் நன்கு பயிலப் பெற்றதும், நாம் மறந்து கைவிட்டதுமான யோக நூல், வான நூல்-இவற்றின் துணைக்கொண்டு நமக்கும் கோள்களுக்கும் பிற அண்டங்களுக்கும் உள்ள தொடர்பால் விளையும் ஆக்குதல்-தாக்குதல்களைப் பற்றி ஆய்ந்து, பழைய முறைகளோடு இணைத்தெண்ணிப் புதுமை கண்டுபிடிக்கலாம். பொறியியற் புது நூல்கள் படைக்கலாம்.

இதுவரை நம் முன்னோர்கள் வழங்கிய தமிழ்ச் சொற்கள் தேய்ந்து உருமாறிப் போனவைகளைத் தொகுத்து, அவை பழைய இலக்கியங்களில் எங்ஙனம் பாதுகாக்கப் பெற்றன என்பதை விளங்க எழுதலாம். இன்று கிடைக்கும் செந்தமிழிலக்கியங்களில் உள்ள எல்லாச் சொற்களையும் அவற்றின் ஆட்சியுருவங் குலையாமல் தொகுத்து, அவ்வந் நூல்களில் என்ன பொருளில் வந்துள்ளன என்பதை வரையறுக்கலாம். இன்ன கவிஞன், இன்ன சொல்லைப் புதுவதாகப் புனைந்திருக்கிறான் என்பதை வரையறுத்து, அவற்றின் பொருத்துமாற்றை யாராயலாம். இதற்கு மேலாக, இன்னின்ன பழந்தமிழ்ச் சொற்களை வெருட்டி விட்டு, இன்னின்ன பிறமொழிச் சொற்கள் தமிழ் நாட்டிற் குடிபுகுந்துள்ளன என்பதைப் பற்றிய விரிவான ஆய்வு அமைக்கலாம்.

இவையனைத்தையும்விடக் கருத்து வளர்ச்சிக்காகப் பிற மொழியின்கண் உள்ள சாத்திரங்கள், இலக்கியங்கள், இவற்றை மொழி பெயர்த்துத் தமிழுக்குக் கொணரலாம். இதுதான் சிறந்த தொண்டு எனப் பாரதியாரும், "பிற நாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியிற் பெயர்த்தல் வேண்டும்",என்றனர். ஆகவே,மொழி பெயர்ப்புத் தொண்டே தமிழுக்கு உடனடியாகச் செய்ய வேண்டிய இன்றியமையாத தொண்டு என்று எண்ணி, நமது நூற்றாண்டிலே நன்றாகச் செய்து தமிழாக்கம் பேணியவர்கள், நாடு போற்றும் பேராசிரியப் பெருந்தகையாகிய பண்டிதமணியவர்கள்.

இவர்களுக்கு முன்னும் கச்சியப்பர், கம்பர் முதலானோர் செய்திருக்கிறார்கள். ஆனால், அவை இதிகாசங்களாகப் புராணங்களாகஅமைந்தன. நம்முடைய இன்றைய தேவை பொருளாதாரம்-அரசியல்-விஞ்ஞானங்கள் போன்ற தத்துவம் பற்றிய நூல்களும்,சித்திரம், சிற்பம்,கட்டிடக்கலை போன்ற கலை நூல்களும், இசை, பரதர், நாடகம் போன்ற நுண்கலை நூல்களும் தமிழாக்கம் பெற்றுத் தமிழன் அறிவை நிரப்ப வேண்டியவை என்பதை நன்குணர்ந்து, இளமையிலேயே நாடகங்களையும் பொருணூல்களையும் மொழிபெயர்க்கத் தொடங்கியவர்கள் நம் பண்டிதமணியவர்கள்.

தனிமரந் தோப்பாகாது ; ஒரு மொழிப் புலமை நிரம்பிய பேரறிவாகாது. ஒரு நூலை ஆழமாகப் பயின்றாலும் சீர்தூக்கிப் பார்க்கப் பல மொழிகளிலுள்ள பல நூலறிவு இன்றியமையாதது என்பதை நன்கு தெரிந்தவர்கள். அதனால் அவர்கள் தமிழ்மொழிப் புலமை மிகப்பெற்றிருந்தும், இணைத்து எண்ணவும், கருத்துக் கருவூலங்களைக் குவிக்கவும் - பெருக்கவும் வடமொழியையும் பயின்றார்கள். அதனால், அங்குள்ள அணியிலக்கணங்கள்,நாடகங்கள்,காப்பியங்கள்,பொருணூல்கள், நீதிநூல்கள் - இவற்றைத் தமிழில் ஆக்கித் தமிழுக்கு ஆக்கந் தேடித் தந்தார்கள். அதன் விளைவாக எழுந்த அவர்களுடைய முதன்முயற்சி சுக்கிர நீதி.

மொழிபெயர்ப்புக்கலை மிக நுண்ணிது; பெரிது முயன்று அரிதில் முடிக்கக் கூடியது. மொழிபெயர்ப்பென்பது, மூல நூலிலுள்ள கருத்தைச்

சொல்லுக்குச்சொல் மாற்றித் தம் மொழியில் படைக்கும் பயனற்ற செயலன்று. வேற்று மொழியிலுள்ள கருத்தை,அதன் உயிரோட்டமும் கருத்தாழமும் சொல்லுந்திறனும் மாருமல், தம் மொழியின் கலாசாரத்திற்கு ஏற்பச் சிறிது திருத்தியமைக்கும் சீரிய செயலாம்.* மொழி பெயர்ப்பைப் படிக்கின்றவன் எந்த வகையிலும் மொழிபெயர்ப்பு என்பதை அறிந்துகொள்ள இயலாதவாறு, இம்மொழி நூலேயென்று கருதும் வண்ணம் ஆக்குதல். இக்கலையில் நமது பண்டித மணியவர்கள் மிகச்சிறந்தவர்கள். இவர்களுடைய முதற் படைப்பாகிய சுக்கிர நீதி சிறந்ததோர் அரசியல் நூல். ஈழை நாட்டுச் சிறந்த அரசியல் அறிஞரால் எழுதப்பெற்ற நூல்.

**இந்நூலை ஏன் மொழிபெயர்க்கக் கருதினார்கள் ?**

*(1)* **"ஊறொரால் உற்றபின் ஒல்காமை இவ்விரண்டின்**

**ஆறென்பர் ஆய்ந்தவர் கோள்"**

என்ற குறளுக்கு உரை எழுத வந்த பரிமேலழகர் வினைத்திட்பம் என்ற அதிகாரத்திற்கு முன் வினைத்தூய்மை என்ற அதிகாரத்தையும் உடன் கூறியதற்குக் காரணமாக, "தேவர்க்கும் அசுரர்க்கும் அமைச்சுப் பூண்ட வியாழ வெள்ளிகளது துணிபு தொகுத்துப் பின் நீதி நூலுடையார் கூறியவாறு கூறுகின்றார்" என்றனர். ஆகவே, வள்ளுவர் வியாழ வெள்ளிகளது நூலைத் தொகுத்துக் கூறிய நீதிநூல் உடையாரைப் போல இவருந் தொகுத்தார் எனக் கூறுதலால், அரசியல் நீதியுரைக்கும் வள்ளுவப்பகுதி பாருகஸ்பதியமும், சுக்கிர நீதியும் ஆகிய நூலறிவுகொண்டு ஆக்கப்பெற்றது என்ற கருத்து நாட்டிற்பரவலாக விரவியது. சுக்கிர நீதி போன்ற நூல்கள் வடமொழியில் இருப்பதால், அதனைத் தமிழ் மக்கள் படித்துணர மாட்டாமையான் அப்படியும் இருக்கலாம் என்று துணியத் தொடங்கினர். ஒன்றேனும் தனித்தமிழ்க் கொள்கையன்று, அனைத்தும் வந்த கருத்துக்களே என்று வல்லடிவாதம் புரிவார் பலராயினர். தாம் அறிந்த பிறமொழிக் கருத்துக்களைக்கொண்டு ஆதாரங்காட்டி மறுத்தாலும், அது மறுப்புரையென்று மதிக்கப்படுமேயன்றி உண்மை உள்ளவாறு உணர்த்தாது ஆகையாலும், சுக்கிர நீதி முழுவதையுமே ,மொழிபெயர்த்து உதவினால்,நாடு தானே படித்து உண்மையுணருமே யென்று எண்ணினார்கள், மொழிபெயர்த்தார்கள்.

**(2) சுக்கிர நீதியில் தென்னாட்டுக் கருத்துக்கள் பல பரவியுள்ளமை:** எடுத்துக் காட்டாகத் தென்னாட்டுச் சமுதாயம் வருணப் பிரிவையும் ஆச்சிரமப் பிரிவையும் அடியாகக்கொண்டு அமையாமல், எல்லா உயிரும் பிறப்பால் ஒத்தன; தொழிலால் ஒவ்வாதன என்ற அடிப்படைக் கொள்கையை உடையது. இதனை விளக்கியது 'பிறப்பொக்கும்' என்ற குறள். இதே கருத்தைச் சுக்கிர நீதி, முதல் அத்தியாயம் 38, 39 சுலோகங்களில்

"இவ்வுலகத்தில் அந்தணராதலும், அரசராதலும், வணிகராதலும் சூத்திரராதலும் மிலேச்சராதலும் பிறப்பினால் இல்லை. குணம் செயல்களால் வேறுபடுத்தப்பட்டனர் என்கின்றது. மேலும், "சாதியாலும் தாய் தந்தையராலும் பிராமணத் தன்மை எய்தற்பாலதன்று" என்கின்றது.

*(3)* **வள்ளுவம் :**

**"ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணும் கண்ணோடிப்**

**பொறுத்தாற்றும் பண்பே தலை"**

என்றது. இதனையப்படியே சுக்கிர நீதி, நாடிழந்த பகைவர்க்கும் விருத்திப்பொருட்டு, அதாவது, வாழ்க்கையின் நிமித்தம் பொருள் உதவு முறைகளைக் கூறுகிறது. (4 அத் .7ம் பிரகரணம், 401 சுலோ.) இங்ஙனம், பல தென்னாட்டுக் கருத்துக்கள் சுக்கிர நீதியில் பரவியிருப்பது, இத்தகைய சில காரணங்களால் இந்நூல் மொழி பெயர்க்கப் பெறின் தமிழ் மக்கள் அனைவரும் கருத்துப் பரிமாற்றத்தையும், அதனால் தமிழர் பெறுகின்ற ஆக்கக் கேடுகளையும் உணர்வார்கள் என்று எண்ணித் தமிழாக்கம் செய்தார்கள்.

அடுத்தது, மண்ணியற் சிறுதேர் அல்லது மிருச்சகடிகம். மிருத்-மண்,சகடம்-வண்டி. மிருச்சகடிகம் மண்ணாலியன்ற குழந்தை வண்டியால் விளைந்த கதை. இந்த நாடகத்திற்கு இதுவே கதை மூலமாக அமைந்தது. இதனையும் பண்டிதமணியவர்கள் மொழி பெயர்த்துத் தமிழுக்கு ஆக்கத்தையும், தமிழனுக்குத் தன்னுணர்வையும் தந்தார்கள்.

இதன் கதை : சாருதத்தன் - இந்நாடகத்தின் தலைவன். இவன் அந்தணன். ஆனால், அந்தணர் தொழிலைவிட்டு வாணிகம் செய்தான். பெருஞ் செல்வனாயினான். வாணிகத்தானும் வள்ளன்மையாலும் இளைத்தான். இளைத்த நிலையில் வாசவதத்தையென்னும் தாசி அவனை நேசித்தாள். அப்போதுள்ள சூழ்நிலையில் பாலகன் ஆண்டு வந்தான். ஆட்சி மிகச் சீர்கேடாக இருந்தது. அவனுடைய மைத்துனன் விடர், தூர்த்தர், காமுகர் முதலியவர்களுடன் நேர்மையற்றபலசெயல்களைச் செய்து வந்தான். ஒரு நாள் வசந்தசேனையைப் பின்பற்றிச் சென்று, அவள் கழுத்தை நெரித்து மயங்கச் செய்து, சாருதத்தன் அவளைக் கொன்று

விட்டான் என்று பழியை அவன்மீது சுமத்தி வழக்காடினன். மயங்கிக் கிடந்த வயந்தசேனையே எழுந்து வந்து உண்மையை உரைக்கின்ருள். இவ்வளவுதான். ஆயினும், இது சிறந்த சீர்திருத்த நாடகம். அந்தணன் வணிகனுனன். தாசி, குல மங்கையிற் சிறந்தவளாகிருள். சர்விலகன் அணிந்த பூணூல் களவாடற்றொழிலுக்குப் பெரிதும் பயன்படுகிறது வைதிக ஆசாரம் தட்சிணையாகப் பெறும் பொன்னின் அளவாகப் புறக்கணிக்கப்படுகிறது. இழிந்த குலமும் தாழ்ந்த தொழிலும் உடைய மக்கள் செய்ந்நன்றி மறவாதவர்களாகிருர்கள். அவர்களிடம் கொள்கை பிறழாமை காணப்படுகிறது. இத்தகைய சமுதாயச் சீர்திருத்தமாகிய இந்நூல் மொழி பெயர்க்கப்பெறின், சமுதாயப் பாகுபாடு மக்களினத்தில் எப்படிப் புகுந்து வேற்றுமை விடத்தை விளைத்திருக்கிறது, எங்கெங்கு, எந்தெந்தக் காரணங்களால் நெகிழ்ந்து கொடுக்கிறது என்பதைத் தமிழர்களும் உணருவார்கள் என்பதை எண்ணியே இதனை மொழிபெயர்த்தார்கள்.

மொழிபெயர்ப்பின் அமைப்பில் இந்நூலில் அவர்கள் கையாண்ட முறை :- இந்நூல் 10 அங்கமாக, 381 சுலோகங்களோடு ஏனைய பகுதிகள் உரையாடல் முறையிலும் அமைந்தது. இதில் பண்டிதமணியவர்கள் சுலோகங்களைப் பாடல்களாகவும், உரையாடல்களை உரைநடையாகவும் தூய செந்தமிழ் நடையில் பெயர்த்துள்ளார்கள். ஆனால் மூல நூல் அந்தந்த நாடகப் பாத்திரங்களுக்கு ஏற்ற சகாரி முதலான சிதை வழக்கான பிராகிருதமொழியில் அமைந்துள்ளது. இவர்களும் வழக்கியல் மொழி,சேரிமொழிகளில் அமைத்திருந்தால் நன்ருக இருக்கும். ஆனால், அவர்கட்குள்ள தனித் தமிழ்ப்பற்று, தமிழின் தரங்குறைதலாகாது என்ற எதிர்நோக்கு, இங்ஙனம் மொழி பெயர்க்கத் தூண்டியுள்ளது எனலாம்.

**கௌடிலியம் :**

பண்டிதமணியவர்கள் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராகப் பணியாற்றியபோது, பல்கலைக் கழகம், இவர்களிடம் கௌடிலியம் என்னும் சாணக்கிய அர்த்த சாத்திரத்தை மொழிபெயர்க்கும் பணியைத் தந்தது. கௌடிலியத்தில் குறியீட்டுச் சொற்களும், குழூஉக் குறிகளும் மிகுதி. அவற்றைத் தமிழாக்குவது மிகக் கடினம். குழூஉக்குறியான சொற்களை அப்படியே எடுத்தாண்டு, அடிக்குறிப்பிலே அதன் விளக்கத்தைத் தருவார்கள். எடுத்துக்காட்டாக, பயிற்சி பார்தல் என்னும் முதலதிகரணம் முதற் பிரகரணத்தில் '**ஆன்விட்சிகீ**' திரையீ, வார்த்தை தண்டநீதி என்னும் இவை வித்தையாம்', என்று அரசன் பயில வேண்டிய வித்தைகள் கூறப் பட்டுள்ளன. இவை பொருணூல்களுக்கு உள்ள குழூக்குறியான சொல். அதற்கு இவர்கள் எழுதிய குறிப்பு, 'ஆன்விட்சிகீ' என்பது, பொருள் உண்மையை-அவற்றின் இயல்பை ஆராய்தற்குரிய ஏதுக்களை எடுத்துக் கூறும் தருக்க முதலிய நூல்கள்' என்று எழுதியுள்ளார்கள். வார்த்தையென்பது, உழவு, பசுக்காவல், வாணிகம்—இம் மூன்றும் ஆம், என்று எழுதியுள்ளார். இவற்றிற்கு மேல்சிறந்தகுறிப்பாக'வாரிபெருக்கி (511) என்ற குறளில்,"வாரி-பொருள்வருவாய்,பொருள் வருவாயாவன: உழவு, பசுக்காவல், வாணிகம் என்னும் வார்த்தையுமாம் என்ற பரிமேலழகர் உரைக்குறிப்பையும் தந்துள்ளார். இவர்கள் மொழிபெயர்ப்பு இல்லையேல் பரிமேலழகருடைய உரைக் குறிப்புக்கள் பலவற்றை அறிய இயலாமற்போகும்.

அன்றியும், இந்தப் பொருள் நூற் கருத்துக்களோடு இணைந்த அல்லது விஞ்சிய சிறந்த தமிழ் நூற் பகுதிகளையும் ஆங்காங்குக் காட்டிச்செல்வது தமிழின் பெருமையைக் காணத் தக்க துணையாயாகும்.

மற்றும், 'சுலோசனு', 'உதயண சரிதம்' என்ற வடமொழி நூல்களையும் பெயர்த்துள்ளார். மேலும், ஏதோ ஒன்றை மொழிபெயர்த்துக் கையெழுத்துப்படியாக வைத்திருக்கிருர்கள். அது அச்சாகித் தமிழர்கள் கையில் தவழ வேண்டும் என்று அவர்களுடைய தலைமாணுக்கராகிய பேராசிரியர் டாக்டர் வ.சு.ப. மாணிக்கம் அவர்கள் சொல்லுகிருர்கள். அதுவும் கிடைத்தால் பெரு நன்மை பயக்கக்கூடும் என்று எதிர்நோக்குவோம்.

அவர்கள் ஏதோ மொழி பெயர்ப்பின் வாயிலாகத் தம் ஆரிய மொழிப்பயிற்சியின் திறமையைக் காட்டிக்கொள்ள வேண்டும் என்று மொழி பெயர்த்தவர்கள் அல்லர். அவற்ருல் தமிழ் மொழிக்குத் தனிப்பெருமை யுண்டாகும், குறைகள் நிறையும், தமிழன் இணைத்து எணணித் தன் ஏற்றத்தையுணருவான் என்ற அடிப்படையிலே பெயர்த்தார்கள்.

பெயர்ப்பு முறையில் எளிமையும் இனிமையும் அவர்கள் எழுத்துக்கு இயல்பாகவேயுள்ள தனிச் சிறப்பு.

இங்ஙனம், படைப்புப்பலபடைத்துத்தமிழர்க்கு உள்ள வலுவூட்டிய பண்டிதமணியவர்கள் புகழ் தமிழ் நாட்டில், தமிழன் உள்ளத்தில் என்றும் நின்று நிலவுமாக!

---



காரைக்குடி முத்துப்பட்டணம்
தவத்திரு. சொக்கலிங்க ஐயா அவர்கள்
(பண்டிதமணியாரின் சைவ சித்தாந்த ஆசிரியர்)



பண்டிதமணியாரின் அறுபதாம் ஆண்டு மணி விழா 12—10—1941
விழாத் தலைமை ஏற்ற செட்டிநாட்டரசர் டாக்டர் மு. அ. அண்ணாமலைச் செட்டியார்,
டாக்டர் ச. சோமசுந்தர பாரதியார்,
திரு. பெ. ராம. ராம. சித. சிதம்பரஞ் செட்டியார் முதலியோர்,



7—7—1940-இல் பண்டிதமணியாரின் திருவுருவப் படத்தினை
மேலைச்சிவபுரி சன்மார்க்க சபையில் செட்டிநாட்டு அரசர்
டாக்டர் மு. அ. அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் திறந்து வைத்தபோது எடுத்த நிழற்படம்.
பண்டிதமணியார், செட்டிநாட்டரசர், வ. பழ. சா. சாமிநாதன் செட்டியார், சிதம்பரஞ் செட்டியார்,
சிவனடியான் செட்டியார், வ. ராம. இலக்குமணச் செட்டியார்,
மெ. திருநாவுக்கரசு ஆகியோர் உள்ளனர்.



3—2—1943-ஆம் நாள் கோனுபட்டு இளைஞர் ஒற்றுமைக் கழகச் சார்பில் கவியரசர் இளங்கோவடிகள் படத்திறப்பு விழா நிகழ்ச்சி. படத்தைத் திறந்து வைத்த பண்டித மணியார், விழாத் தலைமைபேற்ற செட்டிநாட்டரசர் டாக்டர் மு. அ. அண்ணாமலைச் செட்டியார், பன்மொழிப்புலவர் அப்பாத்துரையார், சிவா. பழனியப்பச் செட்டியார், புலவர் விசு. திருநாவுக்கரசு, முருகு. சுப்பிரமணியம், இராம. சண்முகம் ஆகியோர் உள்ளனர்.



28—1—1951-ஆம் நாள் குன்றக்குடி திருவண்ணுமலை ஆதீனத்தில் தமிழ்த்திருநாளில் தவத்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்களால், செட்டிநாட்டு அரசர் டாக்டர் மு. அ. முத்தையா செட்டியார் அவர்கள் தலைமையில் பண்டிதமணியாருக்கு, 'சைவ சித்தாந்த வித்தகர்' என்ற பட்டம் அளித்துப் பொன்னுடை போர்த்தப் பெற்றபோது எடுத்த நிழற்படம்.



நண்பர் கழகம் - வாழ்த்தியல் விரிவுரை விழா 1939 - 40 அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.
நிழற்படத்தில் பண்டிதமணியார், ஏ. எஸ். பி. ஐயர், I C.S. மகாகனம் சீனிவாச சாத்திரி
(துணைவேந்தர்), டாக்டர் அ. சி. செட்டியார், சீனிவாசாச்சாரி, லெ. ப. கரு. இராமநாதனார்,
மெ. திருநாவுக்கரசு ஆகியோர் உள்ளனர்.



21—3—1941, அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நகரத்தார் மாணவர் கழகத் தொடக்க விழா.
பண்டிதமணியார், துணைவேந்தர் சர். கே. வி. ரெட்டி, தொடங்கி வைத்த
திரு. சிதம்பரஞ் செட்டியார், லெ. ப. கரு. இராமநாதச் செட்டியார்,
வ. சுப. மாணிக்கம், மெ. திருநாவுக்கரசு ஆகியோர் உள்ளனர்.

'தமிழண்ணல்' டாக்டர் இராம. பெரியகருப்பன்,
எம்.ஏ., பிஎச். டி.,
துணைத் தமிழ்ப் பேராசிரியர்,
மதுரைப் பல்கலைக் கழகம், மதுரை.

# பண்டிதமணி ஓர் ஒப்பீட்டறிஞர் !

பண்டிதமணி திரு. மு. கதிரேசச் செட்டியாரவர்கள், இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் தமிழுக்குக் கிடைத்த ஓர் ஒப்பற்ற ஒப்பீட்டறிஞர் ஆவார். இன்று மேலை நாடுகளில் மிகச் சிறப்பாகப் போற்றப்பட்டு வரும் ஒப்பிலக்கியம் (Comparative Literature) என்ற பார்வையில் நோக்கும் பொழுது பண்டிதமணி அவர்களின் தனித்தன்மை சுடர் வீசித் திகழ்கிறது எனலாம். பண்டிதமணியவர்கள் இலக்கிய நயமுணர்த்தும் தலைசிறந்த திறனாய்வாளர். அதனைக் கேட்பவர் மனங்கொள்ளும்வண்ணம்சொற்பொழிவாற்றியும் படிப்பவர் தெளிவுறும் வண்ணம் எழுதியும் அவர் வெளிப்படுத்தும் கலை நினைந்து நினைந்து இன்புறத் தக்கதாகும். பல வடமொழி நூல்களைத் திறம்பட மொழி பெயர்த்துத் தந்துள்ளமை அவரை மொழிபெயர்ப்பாளர்களில் முன்வரிசையில் அமர்த்துகிறது. வடமொழியும் தென்மொழியும் திடமுறக் கற்றமையால், அவரது கட்டுரைகள், ஆய்வுரைகள் பலவும் ஒப்பீட்டு மணங்கமழ்வனவாயின. இவ்வாறு இவர் திறனாய்வாளர், மொழிபெயர்ப்பாளர், ஒப்பீட்டறிஞர் என முத்துறையிலும் முத்தமிழுக்குப் பணி செய்துள்ளனர்.

தமிழுக்கும் வடமொழிக்கும் பண்டைக்காலத்தும் இடைகாலத்தும் நல்லுறவே இருந்து வந்தது. பிற்காலத்தில் முகிழ்த்த பகைதான் இவ்விரு நட்புறவு மிக்க மொழிகளைப் பிரித்து வைக்க முயன்றது எனலாம். தமிழிலேயே இருவகைக் கொள்கை நெறிகள் தோன்றின. ஒரு சாரார், தமிழிலிருந்து வடமொழி கடன் பெற்றதே அனைத்தும் என்றனர்; பிறிதொரு சாரார், வடமொழியிலிருந்து அனைத்தையும் தமிழ் கடன் பெற்றதாகக் கருதினர். இவ்விரு மொழிகளும் தனிக் குடும்பங்களாக் கருதத் தக்க மொழிகள் பலவற்றிற்குத் தலைமை தாங்குவன; தனித் தனிப் பண்பாட்டையும் பாரம்பரியத்தையும் கொண்டு வளர்ந்தமைந்தவை ; தனித்தனியான இயல்புகளைக் கொண்டவை என்பதைப் பலரும் மறந்துவிட்டனர். அதே சமயத்தில், இவை யிரண்டும் அண்டை வீட்டார் போல் அடுத்தடுத்த நிலையில் ஆயிரம் ஆண்டுகளுக்கு மேல் இருந்து வளர்ந்தோங்கியவை. இதனால் இவற்றிடையே 'கொள்வினை, கொடுப்பினை'கள் இருந்தே தீரும். சொற்கலப்பு, இலக்கியக் கலப்பு, இலக்கணக் கலப்பு என எத்தனை வகை களிலோ இவை இணைந்தும் பிணைந்தும் வளர்ந்துள்ளன. வடமொழி இலக்கிய வளர்ச்சியில் தென்னாட்டவர் பங்கு அளவிடற்கரியதாகும். காளிதாசருக்குத் தென்னாடு நன்கு அறிமுகமாகி இருந்தது என்பர். தண்டி ஆசிரியர் காஞ்சிபுரத்தில் இருந்த வடமொழிப் புலவர் என்று கருதுவாரும் உளர். கி. பி. ஏழாம் நூற்றாண்டிலும் அதற்குப் பின்னரும், மகேந்திரப் போத்தரையன் காலம் முதல் வடமொழி தென்னாட்டில் பெரு வளர்ச்சி கண்டது. கி. பி. 12 - ஆம் நூற்றாண்டு முதல் 18 - ஆம் நூற்றாண்டு வரை முழுக்க முழுக்க வடமொழி இலக்கிய வளர்ச்சிக்கு உதவியவர் தென்னாட்டவரே என்றும் கூறுவர்.* எனவே, வடமொழி - தமிழ் உறவு பல நூற்றாண்டுகளாய் ஏற்பட்டு வளர்ந்து வருவதாகும். இம்மொழி, இலக்கியம் ஆகியவற்றிடையே ஏற்பட்டு வந்துள்ள இத்தொடர்புகளை உற்று நோக்காமல் 'ஏற்றத் தாழ்வு' பேசி, வெறும் பூசல் விளைவிக்கும் வேளையில் பண்டிதமணி, மறைமலையடிகளார் போன்ற தமிழ்ச் சான்றோர்கள் சிறந்த வடமொழி நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்துத் தமிழுக்கு ஆக்கம் தேடினர்.

அமெரிக்கப் பேராசிரியராகிய ஆல்பர்ட்டு செரார்டு என்பார், மொழிபெயர்ப்பின் இன்றியமையாமையை மிகவும் அழகாக வற்புறுத்துகிறார். "நாம் நம்முடைய இனத்தை நேசிப்பது உண்மையானால், உலகிற் சிந்திக்கப்பட்டவற்றிலும் சொல்லப்பட்டவற்றிலும் மிகச் சிறந்தவற்றைத் தந்து அதனை வளப்படுத்த மிகவும் ஆர்வமுடையவர்களாய் இருக்க வேண்டும். அது போல, அதற்கு ஈடாக நம்முடைய சிறந்த கருத்துக்களை உலக மனித இனத்திற்கும் பொதுவான சேமிப்புக் கருவூலத்தில் சேர்க்க நாமும் கடமைப்பட்டிருக்கிறோம்" என்று அவர் தரும் விளக்கத்திலிருந்து இதை அறியலாம்.**

* V. Gopala Iyengar, A Concise History of classical Sanskrit Literature, Preface; p. vi.
** Albert Guerard, Preface to World Literature, p. 28

பண்டிதமணி அவர்கள் மண்ணியல் சிறுதேர், அர்த்த சாத்திரம் போன்றவற்றைத் தமிழில் தந்த பெருமையை இதனல் நன்குணர்தல் கூடும். அவர்களைப் பின்பற்றி வடமொழி நூல்கள் பல மொழிபெயர்க்கப் பெற்றிருந்தால், இக்கால ஒப்பிலக்கிய மாணக்கர்கட்கு அது பேருதவியாக இருந்திருக்கும்.

வடமொழி தமிழ் இடையே பூசல் கூடாது என்பதற்கும் இணைந்த, நல்லுறவான ஆய்வு ஒன்றே தமிழின் வளர்ச்சிக்கு உறுதுணை புரியும் என்பதற்கும், ஒன்றைவிட ஒன்று தாழ்ந்ததென மதிப்பிடும் தாழ்வு மனப்பான்மை கூடாது என்பதற்கும் பண்டிதமணி அவர்களின் வாழ்வையே தக்கதொரு எடுத்துக்காட்டாகக் கூறலாம். ஒரு முறை மகிபாலன் பட்டியில் அவர்களுடைய இல்லத்தில் நடைபெற்ற திருமண நிகழ்ச்சிக்கு யான் சென்றிருந்தேன். வரவேற்பு முன்மண்டபத்தில் பண்டிதமணி அமர்ந்திருந்தார்கள். கலைத்தந்தை கருமுத்து தியாகராசச் செட்டியார் அவர்கள், காரைக்குடி சா. கணேசன் அவர்கள் போன்ருேர் சூழ அமர்ந்திருந்தனர். அவர்கள் தமிழ், வடமொழி, சமயம், கலை பற்றி உரையாடிக்கொண்டிருந்ததை யான் கூர்ந்து கேட்டுக்கொண்டிருந்தேன். எதிர்பாராமல் அவ்வுரையாடலில் தமிழ் உயர்ந்ததா, வடமொழி உயர்ந்ததா என்பது போன்ற வாதம் இடம் பெறலாயிற்று. நிலைமை காரசாரமாகியது. இந்நிலையில், பண்டிதமணி அவர்கள் வீட்டுக்காரராகையால், வந்த விருந்தினர்களைச் சமாதானம் செய்ய வேண்டும் என்பது தம் கடமை என எண்ணினர் போலும்! அனைவரையும் அழைத்து அவர் கூறினர்: "இதோ பாருங்கள். நான் கூறுகிறேன். தமிழும் வடமொழியும் ஏற்றத் தாழ்வற்றவை. நம் இரு கண்களுக்குச் சமமானவை. என் பெயரைப் பாருங்கள், **'கதிரேசன்'** என்பது; இதில் **'கதிர்'** நல்ல தமிழ் — **'ஈசன்'** முற்றும் வடமொழி. இவ்வாறு என் பெயரிலேயே இரு மொழியும் இணைந்திருப்பதால், நான் நடுவு நிலையானவன் என்பது விளங்கும். எனவே நான் கூறுகிறேன் இவை இரண்டும் நாம் சமமாகக் கருதிப் போற்றக்கூடியவை என்று. நம்முள் வாதம்—எதிர் வாதம் வேண்டாம் என்பது என் வேண்டுகோள்'' என்ருர். இவ்வாறு அவர் கூறிக் கொண்டிருக்கும் போதே, ஒருவர் அவண் வந்து, 'சாப்பாட்டிற்கு இலை போட்டாயிற்று, வருக, என அழைக்கவே, பண்டிதமணியவர்கள் இது தான் தக்க சமயமென்று தட்டுத்தடுமாறி எழுந்திருக்க முயன்ருர். உடனிருந்த தமிழ்ச்சார்பு அறிஞர்களும் வடமொழிச்சார்பு அறிஞர்களும் அவருக்கு இருபுறத்தும் தோள் கொடுத்துத் தூக்கி, அழைத்துச் சென்றதைக் கண்டேன். ஆம், அவருக்குத் தமிழும் வடமொழியும் தக்க துணையாயின; அவரும் அவ்விருமொழிகட்கும் தக்கதோர் அருந்தொண்டர் ஆகப் பணியாற்றினர். **'பண்டித + மணி'** என்ற அவரது பட்டப்பெயரிலேகூட வடமொழியும் தமிழும் உடன் இயைந்து விளங்குவதைப் பிறகு நான் நினைவுகூர்ந்து மகிழ்ந்தேன்.

இவ்வாறு பெயராலும், புலமைப் பட்டத்தாலும் கல்வியறிவாலும், எழுத்தாற்றலாலும் பொழிவுத் திறனாலும் புகழாலும் கதிரேசனர் அவர்கள் இரு மொழிப் புலவராக இலங்கினர். தலைசிறந்த ஒப்பீட்டறிஞராகத் (Compara'ist) திகழ்ந்து' தமிழில் ஒப்பிலக்கிய வளர்ச்சிக்குத் துணைபுரிய வல்ல மொழி பெயர்ப்புத் துறையைப் போற்றினர். ஒப்பியற் கட்டுரைகள் பல எழுதித் தமிழை வளப்படுத்தினர் என்று கூறி அவரை நாம் நினைவுகூரக் கடமைப்பட்டிருக்கிறோம்.

'ஆயிரத்தொன்ரும் புலவர்' எனவும், 'வார்த்தை பதினயிரத்தொருவர்' எனவும் ஒர் பழஞ் செய்யுள் கூறுகின்றது. ஆனல், நம் பண்டிதமணியோ புலவர் ஆயிரவரில் ஒருவர்: வார்த்தை வல்லார் பதினயிரவரில் ஒருவர். ஏனேர் அறிதற்கரிய நுண் பொருள்களை எடுத்துக்காட்டியும், நகைச்சுவை முதலிய தோன்றவும் பேசும் அவரது அரிய சொற்பொழிவைச் செவிமடுத்து இன்புற்றவர்கள் அதனை ஒருபோதும் மறத்தல் இயலாது. மற்றும், செய்யுளியற்றல் உரைபெழுதுதல் முதலிய புலமைக் கூறுகள் பலவும் அவர்பாற் சிறந்து விளங்குகின்றன.

—**'பண்டிதமணியின் அறுபதாம் ஆண்டு நிறைவு விழா நிகழ்ச்சியும் பாராட்டும்' பக்கம்-25**

நாவலர், பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் எழுதியது.

**மதுரை 21-2-42**

# பண்டிதமணியின் பண்பு நலன்கள்

டாக்டர் சிலம்புமணி துரை. சிங்காரவேலனார், எம்.ஏ., பிஎச்.டி.,
தமிழ்ப்பேராசிரியர், தமிழ்த்துறைத் தலைவர்,
உசுமானியாப் பல்கலைக் கழகம்,
ஐதராபாத்.

அருங்கலைஞர் முதுபெரும் புலவர் மகாமகோ பாத்தியாயர் பண்டிதமணி கதிரேசஞ்செட்டியார் அவர்களின் திருவுருவச்சிலை திறப்பு விழாவும், மணிமண்டபத் திறப்பு விழாவும், மகிபாலன் பட்டியில் நடைபெற இருக்கும் நற்செய்தி, அனைவரையும் மகிழ்விக்கும் அருஞ்செய்தியாகும். இதனைக் கேட்கும் அறிஞர் உலகம் அகமகிழும்; காவிய உலகம் களிப்படையும்; ஓவிய உலகம் ஊக்கம் பெறும்; மாணவ உலகம் மகிழும். எங்கும் மகிழ்ச்சி !! எங்கும் சிந்தனைகள் !! பண்டிதமணியின் மறைவு கண்டு ஏங்கி நின்ற தமிழகம், பண்புத் தமிழ் மகனைப் பிரிந்து வாடிய தமிழகம், நம் புலவர் மணியை மறந்துவிடவில்லை, செய்ந்நன்றிப் பண்பை இழந்துவிடவில்லை என்பதற்கு இவ்விழா நல்லதோர் எடுத்துக் காட்டாகும்.

கணியன் பூங்குன்றனர் தோன்றிய பூங்குன்ற நாடாம் தெள்ளுதமிழ்ப் பாசறையில், அள்ளி வழங்கும் அன்புப் பண்ணையில், மாண்புடை மாந்தர் வாழும் மகிபாலன்பட்டியில் பிறந்து வளர்ந்த தூய தமிழ்ச்சங்கம், தெள்ளுதமிழ்த் தென்றல், இனி ஆங்கே சிலையுருவில் நின்று, சிந்தனையைத் தூண்டும் என்பது திண்ணம். கலைகளின் ஊற்று, இன்பச் சுரங்கம், அன்புக் குன்று, அறிவுக்கடல் எங்கே, எங்கே, என்று ஏங்கும் உள்ளங்களுக்கு, ஆறுதல் அளிக்கும் அருமருந்தாக, பண்டிதமணியின் அன்புத் திருவுருவம் காட்சி அளிக்கும் !

இத்தகு அருந்தொண்டிற்கு உறுதுணை செய்து, உருவச்சிலை கண்ட பெரியோர்களையும், வள்ளல்களையும், பெரும்புலவர்களையும், ஆட்சியாளர்களையும் தமிழகம் என்றும் வாழ்த்துதும், போற்றும் என்பது உறுதி. நல்லவர்களுக்குச் சிலையெடுத்தலும் வல்லுநர்களை வாழ்த்தலும், புலவர்களைப் பாராட்டுதலும் தமிழினத்திற்கே உரிய தமிழ்ப்பண்பாகும். அண்மைக் காலத்தில் நடைபெற்ற நல்விழாக்கள் பல இவ்வுண்மையை நிலைநாட்டி உள்ளன. தமிழ் நாட்டில், தமிழ்ப் பண்புடைய தமிழர்களின் ஆட்சி தழைத் தோங்கி உள்ளமையாலேயே, இத்தகு விழாக்கள் தமிழகத்தில் மறுமலர்ச்சி பெற்றுள்ளன. சங்க காலம் போன்று, புலவர்க்கு விசிறி கொண்டு விசிறி, பெருமைப்படுத்திப் பெருமிதம் அடையும் வாழ்வை நோக்கி, இன்றைய தமிழகம் சென்று கொண்டிருக்கின்றது. இதனைக் காணுங்கால், உள்ளம் இறும்பூதெய்துகின்றது. பண்டித மணி போன்ற பழம்பெரும்புலவர்களின் பண்பு நலன்களை, எண்ணிப் பார்க்கும் எழுச்சி தோன்றுகின்றது.

**வள்ளல் போற்றிய வல்லுநர் :** தமிழ் இலக்கிய வரலாற்றில் "பொற்காலம்" என்று போற்றப்படும் "சங்க காலம்" புகழ் மணம் விசுவதற்குக் காரணமாக இருந்தோர், அக்காலப் புலவரும் புரவலரும் ஆவர். புலவர்களைப் போற்றும் வள்ளல்களால் விளைந்த நன்மைகள் பல. பண்டிதமணி போன்ற முதுபெரும் புலவர் களைப் போற்றி, வாழ்வளித்து, தமிழில் மறுமலர்ச்சி நிலையைத் தோற்றுவித்த பெருமையை, அண்மைக் காலத்தில் கொண்டவர்களுள், தலை சிறந்த வள்ளல் செட்டிநாட்டரசர் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் ஆவர். தமிழகத்தின் மத்திய இடத்தில், கூத்தப் பெருமானின் கோவில் அருகே, தமிழ்ப் பல்கலைக் கழகம் கண்டு, தமிழறிஞர்களை ஒன்று சேர்த்து, சிறந்த தொண்டாற்றிய அண்ணாமலை வள்ளல் கண்ட, ஒளியார் மணியே பண்டிதமணி ஆவார்கள். பண்டிதமணியின் கல்வி வளம், கலைவளம் கொண்ட ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களையும், கலைவள்ளல் கருமுத்து தியாக ராயச் செட்டியார் அவர்களையும் நற்சாந்துப்பட்டி சிதம்பரம் செட்டியார் அவர்களையும் ஈர்த்த தென்றால், பண்டிதமணியின் பெருமைக்கு வேறு சான்றும் வேண்டுமோ ?

"கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல்"

என்ற வள்ளுவர் வாக்கிற்கு இலக்கணமாக அமைந்து, வள்ளல்களை மகிழச் செய்து, புலமைத் தேனை அள்ளி வழங்கிய வல்லுநரே பண்டிதமணி என்னும் புகழ் பெற்ற புலவர்மணி !

**தமிழை வணங்கிய தமிழ்ப் பேராசிரியர் :** பண்டிதமணி அவர்கள் வாழ்ந்த காலம் சிக்கல் நிறைந்த காலமாகும். தமிழொடு வடமொழியும் கலந்து பேசுதலைப் பெருமையாகப் பேசுவோரின் பிற்பகுதியார் வாழ்ந்த காலம். ஆங்கிலமும் தமிழ் அரங்கில் முக்கிய இடம் பெற்றிருந்த காலம். ஆடம்பரங்களும், பிற மொழிகளின் ஆரவாரமும் பெருகியிருந்த காலம். இவைகளால் ஈர்க்கப் படாது, தமிழையே மூச்சாகவும் பேச்சாகவும் கொண்டு வடமொழியிலும் தமிழிலும் வல்லுநராயினும், தூயதமிழில் பேசுவதையே குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்தவர் நமது பண்டிதமணி அவர்கள். எந்நிலையிலும் தமிழன்னையை வணங்கிய, தவத்திரு மறைமலை அடிகளாரும், ஞானியார் அடிகளும், எம். எல். பிள்ளை அவர்களும், நாட்டார் ஐயா அவர்களும், தமிழ்த்தென்றல் திரு. வி. க. அவர்களும் போன்ற, தமிழகம் தந்த அறிவுச் செல்வங்கள் சென்ற பாதையே, கதிர்மணி விளக்கம் கதிரேசனார் சென்ற பாதையாகும். தமிழ் நாட்டில் "தமிழ் அரசியல் மொழியாதல் வேண்டும். அரசியல் அவைகளிலும், நீதி மன்றங்களிலும் தமிழ் மொழியே இடம் பெறல்வேண்டும். உயர்கலைகள் பலவும் தமிழிலே கற்பிக்கவும் எழுதப்படவும் வேண்டும்" என்று முழங்கிய கதிரேசனின் முழக்கம், இன்று அன்றாட நடைமுறை நிகழ்ச்சிகளாக இருப்பதைக் காண்பவர், பண்டிதமணியைப் போற்றுதல் இயற்கையே யாகும். தமிழ் விரிவுரையாளராகவும், தமிழ்ப் பேராசிரியராகவும், தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவராகவும் தொண்டாற்றிய தமிழ்த் தலைமகனுக்கு, தமிழுலகம் என்றும் கடமைப் பட்டுள்ளது.

**புலமைக் கூறுகள் அனைத்தும் பெற்ற பெரும் புலவர் :** தமிழர்களுள்ளே "மகாமகோபாத்தியாய" என்னும் சிறப்பை, முதன் முதலில் பெற்ற பெருமை, பண்டிதமணிகட்கே உண்டு. "பண்டிதமணி" என்றவுடன் தன்னையே குறிக்கும் வண்ணம், பண்டிதமணியாகத் தமிழுலகில் உலவி வரும் தகைமையாளர் இவர்கள். சைவ சித்தாந்த வித்தகராய் விறுபெற விளங்கியவர். தலைசிறந்த தமிழ்ப்புலவர், வடமொழி வல்லுநர், பேரின்பம் பயக்கும் சொற்பொழிவாளர், இனிய எழுத்தாளர், சிறந்த கவிஞர், திறம் படைத்த உரையாசிரியர், மூல நூலையும் விஞ்சும் மொழி பெயர்ப்பாளர் சிறந்த தமிழ்ப்பேராசிரியர் என்பன போன்ற எல்லா வன்மைகளையும் ஒருங்கே பெற்று, அறிஞர் உலகம் போற்றும் வண்ணம் வாழ்ந்த பெருமை பண்டிதமணிகட்கு உண்டு ! இத்தகு புலமைக் கூறுகள் அனைத்தும் பெற்ற பெரும்புலவர்கள் மிகச்சிலரே ஆவர். மிகச்சிலரில் ஒருவராக விளங்கிய தவப்புதல்வரே இவர். தமிழ்ப் பேச்சில், தமிழ்ச் சொற்களில் கனிவு, குழைவு, இனிமை, நுட்பம் ஆகியவை இருக்கும்போது, பிற மொழிச் சொற்களை வழங்க வேண்டியதில்லை என்று மார் தட்டிக் கூறிய மறத்தமிழ்ப் புலவரை, தமிழகம் மறந்துவிடாது என்பது திண்ணம்.

**சைவ சித்தாந்த வித்தகர் :** மக்களின் அறிவு வளர்ச்சியில் ஒரு படியாக விளங்குவது மத உணர்ச்சி. ஒரு நிலையில் மாக்களை மக்களாக ஆக்கிய பெருமை மதங்களுக்கு உண்டு, "நல்லது எது, தவறு எது" என்று இடர்ப்பாடுற்ற மனித இனத்துக்கு "இது இத்தகையது" எனத் தெளிவுபடுத்தி, திருத்திய பெருமை மதங்களுக்கு உண்டு. சிந்தனை, சிறந்த தெளிவாகி, மத உருவில் வந்தது என்பர். அறிவுத் தெளிவில், தமிழ் மக்கள் பிறரையும் விஞ்சியவர் என்பதைக் காட்டுதற்கான கருவூலங்களுள் ஒன்று, சைவ சித்தாந்தம் ஆகும். மேலான மக்களால் சிந்திக்கப்பட்டு, எல்லோர்க்கும் பொருந்தும் வண்ணம், உண்மைகளை விளக்குவதே சைவ சித்தாந்தம் ஆகும். சைவ சித்தாந்தத்தை உள்ளபடி உணர்ந்தோர்க்கு, உலக சமுதாயமே ஒரு குடும்பமாகக் காட்சி தரும். கடவுள் பல்வேறு உருவில் விளங்காது; கலையின் உருவாய்,அன்பின் உருவாய், ஒளியின் உருவாய், அருளின் பிறப்பிடமாய், நாமமும் உருவமும் அற்று, எங்குமாய் எல்லாமாய்க் காட்சி தருவன். இத்தகு மேலான சைவ சித்தாந்தத்தை விளக்குதல், போதித்தல், அதன்வழி நடத்தல் தவமுடையார்க்கே இயலுவதொன்றாகும். பண்டிதமணி அவர்கள் சைவ சித்தாந்த நெறிகளை இனிமையும் எளிமையும் கலந்த முறையில் எடுத்தியம்பி, மக்கள் மனத்தை ஈர்க்கும் பேராற்றல் படைத்தவர்கள். பிறர் மனத்தைப் புண்படுத்தாது எல்லோர்க்கும் பொதுவான முறையில், சைவசித்தாந்த நெறிகளை விளக்குங்கால், தென்றல் தவழும், தமிழ் மணங்கமழும், தேன்மழை பொழியும். அவர்களின் அருள்முகம் பால் நிலாவென மிளிரும். அனைவரும் ஏற்றுக் கொள்ளும் வண்ணம் சித்தாந்தக் கருத்துக்களைக்

கூறுவதில் பண்டிதமணிக்கு நிகர் பண்டித மணியே ஆவர்.

**மன்னு உலகத்து மன்னுதல் குறித்தோர் :**

**"ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதொன் றில்"**

என்பது வள்ளுவர் வாக்கு. வள்ளுவர் மறைக்கு எடுத்துக்காட்டாய் விளங்குபவர்கள் புலவர் மணிகள். புலவர்தம் எழுத்தும் சொல்லும் பேச்சும் குன்றாது நின்று எதிர்காலச் சமுதாயத் திற்கு மலைவிளக்காய் மாண்புற மிளிர்வன. காலத்தை வெல்லும் பெருமையும், காலத்தின் அருமை உணர்ந்து கடப்பாடியற்றும் கவினுறு பண்பு நலனுமுடையோரே காலத்தைவென்றவர் ஆவர். இதனை நன்குணர்ந்த பண்டிதமணி அவர்கள் கூறியுள்ளமையை உற்றுநோக்குதல் வேண்டும்.

"ஒருவன் ஒரு பொருள்பற்றிச் சொற்பொழிவு செய்ய வருகின்றான் என்றால், அவனுக்காகப் பலரும் தமது காலத்தை ஒதுக்கிக்கொண்டு வருவர். அக்காலம் அவர்கள் வாழ்நாளில் ஒரு கூறு ; அது கழிந்தால் மீளப் பெறலாகாதது. அதன் அருமையை எண்ணாது, குற்றம் நிறைந்த கருத்துக்களை ஒருவன் சிந்தனையின்றிச் சொல்லி வீணாக்குவானாயின், அஃது அவனுக்கும் கேட் போனுக்கும் நன்மை விளைவிக்காது" என இடித்துக் கூறி மக்களை அவர்கள் திருத்திய செய்தி போற்றுதற்குரியதாகும். சொல் வன்மை யில் பண்டிதமணி அவர்கள் வல்லவர்கள். நன்னார் நாண அண்ணாந்தேகும் திறம் பெற்றவர் கள். "தமிழாசிரியர்களுக்கு 'க, கா' என்ற இரண்டிற்கு மேல் ஒன்றும் தெரியாது" என்று கூறியதற்கு மறுமொழியாக, "இவ்வுலகில் கடவுளுக்கும் காதலுக்கும் மேலாக எப்பொருள் இருக்கின்றது ? இந்த வகையில் தமிழ்ப்புலவர் கள் மாத்திரமல்ல, இங்கிலீஷ் புலவர்களும் அரசியல் நிபுணர்களும் எல்லோரும் ஒன்றுதான்" என்று உண்மையை எடுத்துக் கூறி, தமிழ்ப் புலவர் உலகத்தை வீறுபெறச் செய்த பெருமையை உடையவர்களே நாம் போற்றும் பண்டிதமணி அவர்கள். பண்டிதமணி அவர் களின் பொன்மொழிகளை, தந்த அறிவுப் பெட்டகங்களை விரித்தெழுதப்புகின் ஏடுகள் போதா. நிலையில்லா உலகத்தே தோன்றி, மொழிப்பற்று என்னும் ஏரால் உழுது அவர்கள் விளைவித்த விளைநிலங்கள், செம்பொன் மயமாய்க் காட்சி தரும் கவினை அறியாதார் யாவர் ? மன்னு உலகத்து மன்னுதல் குறித்தவரன்றோ அவர்கள்?

**தனவைசியர் மரபின் தவத்திரு :** தனவைசியர் மரபு பழங்காலத் தமிழகத்தின் பண்பை நிலை நாட்டிய மரபுகளுள் ஒன்று. "நாகநீள் நகரொடு நாக நாடதனொடு போகநீள் புகழ் மன்னும்" மரபு. பண்டைத் தமிழகத்தின் பண் பாட்டை, நாகரிகத்தை, செல்வச் செழிப்பை, உயர்ந்த வாழ்க்கையை உலகெங்கும் காட்டிய பெருமை அக்கால வணிகர்களுக்கும் உண்டு. கற்புக்கடம் பூண்ட பொற்புடைத் தெய்வமாம் கண்ணகியும், "பாரக மடங்கலும் பசிப்பிணி அறு கென ஆதிரையிட்டனள் ஆருயிர் மருந்து" என்று பாராட்டும் வண்ணம் விளங்கிய ஆதிரையும், புனிதவதியும் தோன்றிய புனித மரபு. இத்தகு மரபின் தமிழ் அறிவு, தமிழ் வளம் இத்தகையது என்பதை அண்மைக் காலத்தில் நிலை நாட்டி, தமிழ்க்குலத்தின் பெருமையை விளக்க வந்த பெருஞ்சுடரே, நமது கதிரொளி கதிரேசனார் !

**மகிபாலன்பட்டியே மகிழ்ந்தெழு !:** பெரியோர் களுக்குச் சிலையெடுத்தல் தமிழகத்தின், தமிழ் இனத்தின் தனிப்பண்பு ! பீடும் பெயரும் எழுதல் வழிவழி வந்த மரபு. கண்ணகிக்குச் சிலையெடுத்ததால் வஞ்சி நகர் உய்ந்தது. கால வெள்ளத்தால் அழிக்க முடியாத அளவு புலவர் நாவில் பொருந்தி நிற்கின்றது. அண்மையில், கண்ணகிக்குச் சிலையெடுத்ததாலும், வள்ளுவருக் குச் சிலையெடுத்ததாலும், தமிழகம் வளர்ந்துவரு வது கண்கூடு. மொழியால் புலவர் வளம்பெறு வர், புகழ் எய்துவர். புகழுடைய புலவரால் நாடு புகழ் பெறும். இது நாடறிந்த செய்தி. மகிபாலன் பட்டியே நீ பெருந்தவமே இயற்றி உள்ளாய்! இத்தகு உத்தமரை, புலவர் மணியைப் பெற்று, எழுபத்து மூன்று ஆண்டுகள் வரை தமிழ்ப்பண் பாட்டை வளர்த்துவரச்செய்து, அதனால் சிறந்த இடமே பெற்றுள்ளாய்!! சிறந்த மகனைப் பெற்ற தாய் மகிழ்தல் போன்று, நீ மகிழ்தல் இயற்கை யேயாகும். மறைந்த மாபெரும் புலவர் மணியைச் சிலை உருவில் காட்டி, தமிழ் மக்களையும் தமிழ்ப் புலவர்களையும் மகிழச் செய்கின்றாய். பண்டித மணியின் பண்பு நலங்களைப் பாராட்டிச் சிலை யெடுக்கின்றாய். மணிமண்டபம் அமைக்கின்றாய். நல்ல தமிழ்ப்புலவருக்கு நல்லதொரு தொண் டாற்றுவதால், தமிழகப் புகழ் ஓங்கி வளரும் தமிழன்னையின் தவப்புதல்வர்களுள் ஒருவரைப் போற்றிய புகழ், எதிர்காலத் தமிழகத்திற்குப் பேரொளி தரும். இத்தகைய நல்ல தொண்டைச் செய்யும் நீ வாழ்க ! வளம் பெறுக !!.

# பழைய நினைவுகள்

தமிழ்க்கடல் இராய. சொ.

பண்டிதமணி என்று சொன்னால் இராமநாத புரம் மாவட்டம் மகிபாலன்பட்டி என்ற சிற்றூரில் பிறந்த மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் ஒருவரைத்தான் குறிக்கும். நாட்டுக்கோட்டை நகரத்தார் சமூகத்தில் பெரும் புலமையும் புகழும் பெற்று அண்மையில் வாழ்ந்தவர் பண்டிதமணி. பண்டிதமணி தமிழ்ப்புலமை நிரம்பியவர் என்ப தோடு வடமொழியிலும் வல்லவர்.

டாக்டர் சுவாமிநாதய்யரவர்களுக்கு மகா மகோ உபாத்தியாயப் பட்டம் கிடைத்த பிறகு, அச்சிறந்த பட்டத்தைத் தமிழ்ப்புலமை காரண மாகப் பெற்றவர் பண்டிதமணியே. மகாமகோ உபாத்தியாயப் பட்டம் பெற்ற பிறகுங்கூட பண்டிதமணி என்றே அவரை அழைப்பது வழக்கம்.

பட்டத்திற்கேற்ற புலமையை அவர் பெற்றிருந் தார். பண்டிதமணி பேச்சிலும், எழுத்திலும் வல்லவர். பல நூல்கள் அவர் எழுதியிருக்கின்றார். சில அரிய வடமொழி நூல்களைத் தமிழில் ஆக்கி யிருக்கின்றார். அவர் தமிழுக்குச் செய்த சேவை யில் இணையற்ற இறை நூலாகிய திருவாசகத்தின் ஒரு பகுதிக்குச் சிறப்பாகப் பேருரை கண்டது சாலவும் போற்றற்குரியது.

பண்டிதமணி மறைந்தபோது பெருமை மிக்க கவிமணி தேசிக விநாயகனார்,

**''வையமெலாம் போற்றுதிரு வாசகத்தின்**
**உட்பொருளை**
**ஐயமறக் கண்டுஇன்று அடைந்தனையோ''**

என்றும்,

**''என்று வருவான் எமன்என்று எதிர்நோக்கி**
**நின்று தளர்கின்றேன் நித்தலுமே—மன்றில்**
**நடங்கண்ட ஈசன் நடராசன் பாதத்து**
**இடங்கண்டு வைநீ எனக்கு.''**

என்றும் இயம்பிய வெண்பாக்கள் சிந்திக்கத் தக்கன.

பண்டிதமணி என்னைவிடச் சுமார் 15 ஆண்டு கள் மூத்தவர். அவர்களும், நானும் தனவணிக நாட்டில் அடிக்கடி சொற்பொழிவு நிகழ்ச்சிகளில் கலப்பது உண்டு. பண்டிதமணி சொல்லாற்றலில் பெரிதும் வல்லவர். சில நேரம் எங்களுக்குள் மேடையிலேயே கருத்து வேறுபாடு தோன்றியது உண்டு. அன்னார் பழமையையே பெரிதும் போற்றுபவர். எனினும், ஆண்டில் சிறியவனாகிய என்னிடம் கருத்து வேறுபாடு காரணமாகக் காழ்ப்புக்கொள்ளாமல் பெருமதிப்பு வைத்திருந் தார்.

மிகப்பல ஆண்டுகளுக்கு முன் நான் சிறுவனாக இருந்தபொழுது காரைக்குடியில் என் இல்லத்தில் விருந்துண்ண வந்திருந்தார். அன்றைக்கு, இயல் பாகவே சேரன் மாதேவியில் குருகுலம் கண்ட பல மொழியும் வல்லவராகிய பெரியார் வ. வே. சு. அய்யரும், சிதம்பரத்தில் நந்தனார் கல்விச்சாலை கண்ட மதிப்பிற்குரிய ஆதித்திராவிட வகுப்பில் பிறந்த சகஜானந்த சுவாமிகளும் என் இல்லத் திற்கு வந்திருந்தனர். எல்லோரும் ஒன்றாக உணவு அருந்தியது பண்டிதமணிக்குச் சிறிது சங்கடமாகவே இருந்தது. ஆனால், பின்னாளில் அக்கருத்தை அவர் மாற்றிக்கொண்டதை நானே அறிந்தேன். என் வீட்டு விருந்து நிகழ்ச்சிக்குப் பிறகு பல ஆண்டுகள் கடந்து அண்ணாமலைப் பல் கலைக் கழகத்தில் பண்டிதமணி தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவராக இருந்த காலத்தில் பல்கலைக் கழகப் பாங்கர் உள்ள திருவேட்களத்தில் பண்டித மணியின் இல்லத்தில் அவரைப் பார்க்கச்சென்ற என்னையும், சகஜானந்த அடிகளையும் வற்புறுத்தி, விருந்து வைத்துப் பண்டிதமணி உடன் இருந்து உண்டு மகிழ்ந்தார்.

பண்டிதமணிக்குத் தமிழ் நாட்டில் ஒரு தனி இடம் உண்டு. மேலைச்சிவபுரி சன்மார்க்க சபை யின் தோற்றத்திற்குக் காரணம், பண்டிதமணி என்பது மிகையன்று. அரசன் சண்முகனார் உள்ளிட்ட பெரும்புலவர் பலரும் அச்சங்கத்தை அலங்கரித்துள்ளனர்.

பண்டிதமணி மறைவதற்குச் சில நாட்கள் முன்பு அன்னாரைப் பார்ப்பதற்கு நானும், சொ. முருகப்பனாரும் மகிபாலன்பட்டிக்குச் சென்றிருந் தோம். அவரோடு நீண்ட பொழுது தங்கி அள வளாவினோம். ''நீங்கள் என்னைப் பார்ப்பது இது தான் கடைசி முறை'' என்று எங்களிடம் சொன் னார். ஆண்டவன் அருள் அப்படியே முடிந்தது.

அன்று அவருடைய திருவாசக உரையைப் பாராட்டி, கவிமணி,

**''மன்னும் உரையெல்லாம் மகிபால மாநகரான்**
**சொன்ன உரைக்கு ஈடாமோ ? சொல்''**

என்று பாடியனுப்பிய வெண்பாவின் பகுதியைச் சொல்லி மிக்க மகிழ்ச்சி அடைந்தார் பண்டிதமணி. வாழ்க பண்டிதமணியின் புகழ் !

# பல்கலைமணி பண்டிதமணி

**புலவர் சி. செல்வத் தாண்டவன்,** எம்.ஓ.எல்.
முதல்வர்,
கணேசர் செந்தமிழ்க் கல்லூரி.

சான்றோர் உண்மையின், இயற்கையல்லன செயற்கையில்தோன்றினும், வான்பொய்ப்பினும் பொய்யாது ஒழுகும் அருவிகள் நிறைந்த பறம்பு மலையைத் தன்னிருக்கையாகக்கொண்டு, முந்நூறு ஊர்களுடன் கூடிய தண்பறம்பு நன்னாட்டைப் பாரிவள்ளல் புரந்து வந்தான்.[1] அப்பறம்பு நாட்டு ஊர்களில் ஒன்றாகிய பூங்குன்றமே இன்றைய மகிபாலன் பட்டியாகும்.

அறிஞர் உலகம் போற்றும் உயர்கருத்துக்களைத் தந்த சான்றோர் கணியன் பூங்குன்றனார் வாழ்ந்த, பாடல்சால் மகிபாலன் பட்டியில் தோன்றிய **முதுபெரும்புலவர் பண்டிதமணி மு. கதிரேசனார்** தலைசிறந்த புலவர் மணியாய்த் திகழ்ந்து, 'இவன்தந்தை என்நோற்றான் கொல்!' எனச் சான்றோரால் பாராட்டப் பெற்றனர். தமிழிடத்துக்கொண்ட தணியாக் காதலால் தமிழ் நூல்களைத் தனித்திருந்து ஆழ்ந்து கற்றார், பண்டிதமணியார். மேலைச்சிவபுரிக்கண் வாழ்ந்தவரும் தென்மொழி, வடமொழிப் புலவர்களைப் பேணுபவருமாகிய பழநியப்பச் செட்டியாருடன் இணைந்து, சன்மார்க்க சபை கண்டு வளர்த்த பண்டிதமணியார் நாளும் இருமொழிப் புலவர் பெருமக்களுடன் அளவளாவித் தமிழின்பம் பருகினர்; சன்மார்க்க சபைப் பொழிலில் நுழைந்து, அவண் உள்ள பல்வேறு துறைபற்றிய நூன்மலர்களில் உள்ள அறிவுத் தேனைப் பருகித் தமிழகம் எங்கும் தேமதுரத் தமிழோசை பரப்பிக் கோத்தும்பியாகத் திகழ்ந்தார்.

**எழுத்துமணி**

கதிரேசனார் தாம் துய்த்த தமிழின்பத்தைத் தமிழக மக்களும் துய்க்க விரும்பி, அதனை நூல்களில் வடித்துத் தந்தார். அவர் எழுதிய உரைநடைக் கோவை, சமயக் கட்டுரைகள், நாட்டுக் கோட்டை நகரத்தார்களின் சீர்திருத்தம் முதலிய நூல்களும்; மண்ணியல் சிறுதேர், சுக்கிர நீதி, சுலோசனை, உதயண சரிதம், கௌடிலீயம் (பொருள் நூல்) முதலிய மொழி பெயர்ப்பு நூல்களும்; திருவாசகக் கதிர்மணி விளக்கப் பேருரைகளும் அவர் மிக்க திறன் வாய்ந்த எழுத்துமணி என்பதை வலியுறுத்தும்.

**சொன்மணி**

கதிரேசனார் தாம் கற்று உணர்ந்து துய்த்த நுண்பொருள்களையும் கற்றோரும் மற்றோரும் உளங்கொள்ளுமாறு எடுத்துரைக்கும் பெற்றி வாய்ந்த சொல்லின் செல்வர். அவர் தமிழகத்துப் பல பகுதிகளுக்கும் சென்று, செவிச்செல்வம் அளித்து வந்ததோடு, தமிழ் மக்கள் வாழும் ஈழ நாட்டுப் பகுதிகளிலும் மைசூர் நாட்டுப் பகுதிகளிலும் மலையாள நாட்டுப்பகுதிகளிலும் சென்று, சொற்பெருக்கு ஆற்றியுள்ளார்.

சென்னைச் சைவ சித்தாந்த மகாசமாசத்தின் வெள்ளி விழா, கரந்தைத் தமிழ்ச் சங்க ஆண்டு விழா, தூத்துக்குடி சைவ சித்தாந்த சபைப் பொன்விழா, சென்னைத் தமிழ்ப்புலவர் மாநாடு, குறுந்தொகை மாநாடு போன்ற நிகழ்ச்சிகளில் பண்டிதமணியார் தலைமை தாங்கிச் சிறப்புரை வழங்கினர்; செட்டிநாட்டு அண்ணாமலையரசர் அழைப்பை ஏற்று, அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவராய் அமர்ந்து, கொள்வோன் கொள்வகை அறிந்து, நூல் கொடுத்துப் பெரும்பேராசிரியராக விளங்கினர். பண்டிதமணியாரின் சொல் வன்மையை,

> **''வடமொழி வாணருந் தென்மொழி வாணரும்**
> **ஆங்கிலப் பயிற்சியி லோங்கிய நிபுணரும்**
> **வேட்டுப் .பலமுறை கேட்டுச் சிரகர**
> **கம்பிதம் செய்திடக் கவின்பிர சங்கம்**
> **புரிதரு திறலினன் புலவர்க் கருந்துணை**
> ..........................................................
> **மாசிலாப் புகழ்க்கதி ரேசன்''**

என டாக்டர் உ. வே. சாமிநாதையரும்[2]

> **''கற்றவர்வி யக்கவறி யக்கழக மேவப்**
> **பெற்றவரு வக்கவறி வற்றவரு மோரச்**
> **செற்றவர்வி ருப்பமொடி னிக்கவிவ னுய்ந்து**
> **சொற்றவரு மைப்பொருள்சொ லாதவர்கள்**
> **யாவர்''**

1. புறம். செய். 105; 117.
2. புறம். செய். 192
3. சுக்கிர நீதி. பக். 13.

என மகாவித்துவான் ரா. இராகவையங்காரும் பாராட்டியுள்ளனர்.[4] இவையெல்லாம் கதிரேசனர் சிறந்த சொன்மணி என்பதை நிறுவும்.

**கவிமணி**

எழுத்து வன்மையுடன் சொல்வன்மையும் பெற்றவர் சிலரேயாவர். பண்டிதமணியார் அவ்விரு திறன்களுடன் செஞ்சொற் கவிபாடும் கவிமணியாகவும் விளங்கியுள்ளார். இளமையிலேயே சுந்தரவிநாயகர் பதிகம், வீர விநாயகர் மாலை, சுவாமிநாத விநாயகர் பதிற்றுப்பத்து முதலிய பாமாலைகள் பாடியுள்ளார். வடமொழியிலும் தேர்ந்தபுலமை பெற்ற பண்டிதமணியார், வடமொழி நாடக நூலாகிய மிருச்சகடிகத்தை மண்ணியல் சிறுதேராகத் தமிழில் பெயர்த்து யாத்துள்ளார். இந்நூலில் உள்ள பாடல்களைக் காணும்பொழுது, இனிய செய்யுளில் அமைந்த முதல் நூலாகவே எண்ணத் தோன்றுகின்றது; வழி நூலாகத் தெரியவில்லை. யாழ்நூல் ஆசிரியர் விபுலாநந்த அடிகள், "இம்மொழி பெயர்ப்பினை நோக்கக் கவிமணி எனவும், பண்டிதமணியவர்கள் விளங்குகின்றார்கள். தமிழ் நலங்கனிந்த செவ்விய பாடல்களாகிய நவமணிக் குவையைத் தாங்கி இம்**மண்ணியல் சிறுதேர்** நடக்கின்றது.[5] எனப் பண்டிதமணியாரின் கவிநலத்தைப் பாராட்டியுள்ளார்.

**மொழிபெயர் மணி**

நம் பண்டிதமணியார் வடமொழியிற் சிறந்து விளங்கிய நூல்களைத் தமிழிற் பெயர்த்தளித்துள்ளார் என முன்னர்க் கூறினேம். மகாவித்துவான் ரா. இராகவையங்கார் சுக்கிர நீதிக்கு அளித்துள்ள சிறப்புப்பாயிரத்தில், "பொருள் பெயர்த்திலன் மொழி பெயர்த்தனன் புலமையைப் புவிபுகழ்தல் தக்கதே" எனப் பாராட்டியுள்ளார்.[6] பண்டிதமணியாரின் மொழி பெயர்ப்புத் திறனை வியந்து, டாக்டர், நாவலர் சோமசுந்தரபாரதியார், "பிற மொழிகளினின்றும் பெயர்த்தெழுதப்படும் நூனடை, பெரும்பாலும் ஒழுக்கும் திட்பமும் ஒருங்கு பெறுவது அருமை. வழிந்தொழுகும் அருவியன்ன இயலொழுக்குத் தாய்மொழியில் தன் இதய வெளிப்பாட்டிற்கு இயைவதல்லால், பிற புலவருள்ளத்தைப் பிறிது மொழிகளினின்று பெயர்த்தெடுத்து எழுதுவோர்க்கு அமைவது அரிதாம். பண்டிதமணி தமிழிற்றந்துள்ள சுக்கிர நீதி, தமிழ் நூலன்றி மொழி பெயர்ப்பு நூலாதலை அவர் விதந்தோது முகத்தாலன்றி முன்னறியார் இதன் நடையால் அறிகில்லார்.........முதனூலிற் கண்டதனை முகந்துகொண்டு தமிழ்மொழியிற் குறையாது கொடுப்பதுடன், அசையேனுங் கூடாமல் அளந்தெடுத்துதவுமிவர் சொற்செட்டும் பொருள் நிறைவும் வரன்முறை வணிகர் வளத் தழகை வலியுறுத்தி நிற்கும்" எனப் பாராட்டியுள்ளார்[7]. "உரைநடையில் மொழிபெயர்ப்பு வடிவிலுள்ள நூல்கள் அனைத்திற்கும் இதுவே தலைமணி நூலாக விளங்குகின்றது......தமிழில் இன்னும் மொழி பெயர்ப்பு இயற்றக் கருதுபவர்கள் இவ்வாசிரியரையே (பண்டிதமணி) தங்கட்குத் தக்கதோர் வழிகாட்டியாகக் கருதற்பாலர்"[8] எனப் பேராசிரியர் கா. சு. பிள்ளை, நம் மொழிபெயர்ப்பு மணியாகிய பண்டிதமணியைப் பாராட்டியுள்ளார்.

**உரைமணி**

மெய்யன்புடன் ஓதுவாரையும் கேட்பாரையும் அளப்பரிய பேரின்ப வெள்ளத்தில் ஆழ்த்துவதும், இறை அநுபவங்களைத் தெள்ளத்தெளிய உணர்த்துவதுமாகிய பெருநூல் திருவாசகம். இதன்கண் உள்ள திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம், திருவெம்பாவைப் பகுதிகட்குப் பண்டிதமணியார் உரை எழுதியுள்ளார். "மணி வாசகராகிய மேகம், சிவம் என்னும் கருணைக் கடலில் படிந்து எழுந்து, திருவாசகம் என்னும் பெருமழை பெய்தது" என்று சிவப்பிரகாச அடிகள் குறித்துள்ளார்.[9] அங்ஙனமே நம் பண்டிதமணியாகிய மேகமும், திருவாசகம் என்னும் அருளார் அமுதப் பெருங்கடலில் படிந்து, திளைத்துக் 'கதிர்மணி விளக்கம்' என்னும் பயன் மழையை எம்மனோர் உய்யுமாறு வடித்துத் தந்துள்ளது. திருவாசகம் என்னும் ஊட்டச் சத்துக்கள்[10] நிறைந்த நல்லுணவைத் தாம் உண்டு, எம் போன்ற குழந்தைகட்கு ஏற்றவாறு பாலமுதமாக்கி அளித்துள்ள பண்டிதமணியாரின் தாய்மையைத் தமிழ் உலகம் பெருநன்றியுணர்வுடன் என்றும் போற்றக் கடவதாகும்.

4. மண்ணியல் சிறுதேர் - பக். 17.
5. மண்ணியல் சிறுதேர் - பக். 25.
6. சுக்கிர நீதி - பக். 17.
7. சுக்கிர நீதி - பக். 36.
8. சுக்கிர நீதி - பக். 29.
9. நால்வர் நான்மணி மாலை - செய். - 16.
10. vitamins.

பண்டிதமணியார் திருவாசகத்தில் உள்ள ஒவ்வொரு சொல்லேயும் ஆய்ந்து ஆய்ந்து, மணிவாசகர் உள்ளம் அறிந்து, அப்பெருந்தகை துய்த்த அளப்பரிய இறை அநுபவங்களைத் தாமும் உணர்ந்து துய்க்க முயன்றுள்ளமையைக் கதிர்மணி விளக்கம் காட்டும்.

உரை முழுதும் சொன்னயங்களும், சாத்திரக் கருத்துக்களும், வரலாற்று நுணுக்கங்களும், உலகியலால் இறையியலைத் தெளிவுறுத்தும் இடங்களும், நுணுகிக் காணும் புதிய விளக்கங்களும், முரண்பட்ட கருத்துக்களிடையே காட்டும் சமன்பாடுகளும் நிறைந்துள்ளன. மரபு வழிப்பட்ட உரையாசிரியர் வழிநின்று அரிய உரை வகுத்த பண்டிதமணியார், இருபதாம் நூற்றுண்டின் தலைசிறந்த உரைமணியுமாவார்.

பண்டிதமணி கதிரேசனுர் எழுத்து நலம், சொன்னலம், கவி நலம், மொழிபெயர் நலம், உரை நலம் அனைத்தும் வாய்ந்த-மரபு வழிப்பட்ட தலைமணியாவார்; பல்துறைப் புலமையும் ஒருங்குவாய்ந்த அப்பெருமகனுரைப் **பல்கலைமணி** எனப் பாராட்டுவதில் சன்மார்க்க சபையாரும் கணேசர் செந்தமிழ்க் கல்லூரியினரும் யாமும் பெருமை கொள்கின்றேம்.

---

பண்டிதமணியவர்கள் சொற்பெருக்காற்றி மகிழ்விக்காத சங்கங்களே தமிழ் நாட்டில் ஒன்றும் இல்லையென்னலாம். இதனுல் இவர்களது புலமைப் பொன்மலர் நறுமணமும் பெற்று விளங்குவதாயிற்று.

சில வருடங்களுக்கு முன்னர்த் திகழ்ந்திருந்த பாற்கர சேதுபதி பாண்டித்துரைத்தேவர், சோமசுந்தர நாயகர் என்னும் இப்பேரறிஞர்கள் ஒரு செய்யுளையே அடிப்படையாக வைத்துக்கொண்டு பல மணி நேரம் வரை சொற்பெருக்காற்றிக் கேட்டாரைப் பிணிப்பர் என்னும் செய்தி அறிஞர்கள் பலரும் நன்கு அறிந்ததே. அத்தகைய சொற்றிறன் படைத்தோர் அரிதாய இக்காலத்துப் பண்டிதமணியவர்கள் அத்திறனேடு விளங்குவது, அவர்களது புலமையின் சிறப்பியல்பைக் குறிக்கும். சுருங்கக் கூறின், இப்புலவர் பெருந்தகை கவியியற்றல், உரை காண்டல், சொற்பொழிவாற்றல், உரைநடை வகுத்தல், நூலறிவுறுத்தல், நூலாராய்ச்சி முதலிய பல்புலத்துறையும் முற்றிய வீறுசால் பெருமையாளர் என்னலாம்.

**(மதுரை அமெரிக்கன் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் ஆ. கார்மேகக் கோனுரவர்கள் எழுதியது.)**

"பண்டிதமணியின் அறுபதாம் ஆண்டு நிறைவு விழா
—நிகழ்ச்சியும் பாராட்டும்"
*(பக்கம் - 34)*
மதுரை *(21-2-1942)*

---

# மு. கதிரேசச் செட்டியாரின் நகைச்சுவை நயங்கள்

ஆ. இராமசாமிப்பிள்ளை,
தமிழ்த் துணைப்பேராசிரியர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

'எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பது' தான் கல்வி நலஞ்சான்ற ஆன்றோர்களின் வாழ்க்கைக் குறிக்கோள். எந்நாளும் சிரித்த முகமும் சிதேவியு மாக இருப்பதுதான் இன்ப வாழ்க்கை.

''சிரித்து வாழ வேண்டும்-பிறர்
சிரிக்க வாழ்ந்திடாதே''

என்று தற்காலப் புலவன் ஒருவனும் பாடினான். மனிதன் ஒருவனே சிரித்து, மகிழ்ந்து வாழும் இயல்புடைய பிராணி. அப்பேற்றினாலேயே மனிதன் தன் மண்ணுலக வாழ்வில் விண்ணுலகத் தேவனாகிறான். இடுக்கண் வருங்கால் நகுக, அவ் விடுக்கணைப் போக்க வேண்டுமென்றே வள்ளு வரும் தெள்ளிதின் கூறுகிறார். தானும் சிரித்துப் பிறரையும் சிரிக்க வைத்து, உலகில் எல்லோருமே இன்பமாகத் துன்பமின்றி வாழ வேண்டும். இவ் வுண்மையை உணர்ந்தே புலவர் பெருமக்கள், இலக்கிய உலகில் ஒன்பான் சுவையில் நகைச் சுவையை முதலில் அமைத்துக்கொண்டனர்.

''நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று''
(தொல். பொருள்-247)

மேலும்,

''நகையெனப் படுதல் வகையா தெனினே
நகையெனச் செய்வோன் செய்வகை நோக்கு
நகையொடு நல்லவை நனிமகிழ் வதுவே''

என்றும் விளக்கம் காண்கிறோம்.

முதுபெரும்புலவராகிய நம் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரும் இத்துறையில் சிறந்து விளங்கினார். உலகியலில் பல நண்பர்களோடு பேசும் பொழுதும் நகைச்சுவைபடப் பேசிக் கேட்போரைச் சிரித்து மகிழ வைப்பர். அத் தகைய உரையாடலில் கலந்துகொண்ட யாவரும் வயிறு குலுங்க நகைத்துத் தங்கள் கவலையையும், துன்பத்தையும் அறவே மறந்து, இன்புற்று மகிழ்ந்திருப்பர். அதனாற்றான், பண்டிதமணி எந்த இடத்திற்குச் சென்றாலும் அவர்களைச் சுற்றிப் பலர் இருந்து, அவர்களது இனிய பேச்சை மாந்தி மகிழ்வர். எல்லாரோடும் சிரிக் கப் பேசி மகிழவைக்கும் இயல்புடைய புலவர் கள், தத்தம் நூல்களிலும் அந்தநகைச்சுவையைப் பெய்து, படிப்போரை இன்புறுத்துவர். கவி காளமேகத்தின் வரலாறும் அதுதானே. விகட மாகப் பேசியது போலவே, தம் செய்யுட்களையும் நகைச்சுவைபட நையாண்டியாக எழுதித் தமிழுலகத்தை இன்புறுத்தியிருக்கின்றார். நம் பண்டிதமணியவர்களும் நுண்மாண் நுழைபுலமும் செறிவுடைய நுண்கருத்துக்களும் கொண்ட இலக்கியக் கட்டுரைகளும் நூல்களும் எழுதித் தமிழ் இலக்கியக் கருவூலத்தை வளம்படுத்திய அரிய பெருஞ்செயலிலும் ஆங்காங்கு நகைச் சுவையைப் பொதுளவைத்துப் படிப்போரை மகிழ வைத்திருக்கின்றனர். அவர்களது உரையாடலில் கண்ட நகைவிருந்துக்குச் சில சான்றுகளும், அவர்களது இலக்கியச் சுனையில் காணும் இனிய செய்திகளையும் கீழே காணலாம்.

உயர்ந்தோரைக் காண வருவோர் கையுறையா கச் சில மங்கலப் பொருள்களைக் கொண்டுவந்து கொடுப்பது நம் நாட்டு மரபு. அவ்வாறு, பண்டித மணியவர்கள் ஓரூருக்குச் சொற்பொழிவுக்குச் சென்றிருந்த பொழுது, பல நண்பர்களும் மாண வர்களும் அவர்களைக் காண வந்தனர். வந்தவர் களிற் சிலர் எலுமிச்சம் பழமும், சிலர் மலர் மாலைகளும் கொண்டுவந்து கொடுத்து, மரியாதை செய்தனர். வந்தவர்கள் அவர்களுடன் மகிழ்ந்து உரையாடிச் சென்றனர். வந்தவர்களிற்பலர் சென்றபின், மாலை கொண்டு வந்தவர்களில் மிக நட்புக் கெழுமிய ஒருவரைப் பார்த்து, ''ஐயா, எனக்கு மாலை போட்டு மகிழ நினைத்தீர்களே, அதைவிட அதன் விலைக்குச் சில எலுமிச்சம்பழம் வாங்கி வந்து பார்த்திருந்தால் நான் அப்பழங்களை வீட்டுக்குக் கொண்டுபோய் ஊறுகாய் போட்டுப் பல நாட்கள் வயிரார உணவு கொள்வேனே!'' என்று சொன்னவுடன், இருந்தவரனைவரும் கொல்லென நகைத்தனர்.

பேசும் மன்றங்களிலே சொற்பொழிவாளருக்கு இடை நேரத்தில் அருந்திக்கொள்ள சுவையுள்ள பசும்பால் காய்ச்சி மேசைமீது வைப்பது வழக்கம். பண்டிதமணியவர்கள் ஓரிடத்துக்குப் பேசச்

சென்றபொழுது, அவர்களுக்கு முறைப்படி நல்ல பால் ஒரு பாத்திரத்தில் வைக்கப்பட்டது. நீண்ட நேரம் பேசிவிட்டு, உட்கார்ந்து அப்பாலைப் பருகக் கையில் எடுத்துப் பார்த்த பண்டிதமணி அவர்கள், கூட்ட அமைப்பாளரிடம், "ஐயா, பாற் கடலில் சீனிவாசன் பள்ளிகொண்டிருக்கிறுன்" என்று கூறினர்கள். அதன் விளக்கம் யாதெனில், வைத்திருந்த பாலில் சீனியையுண்டு வாழும் எறும்பு விழுந்து கிடக்கிறது என்பதுதான். இந்த நகைச்சுவையான கூற்றைக் கேட்ட அமைப்பாளரும், தலைவர் முதலியோரும் சிரித்து மகிழ்ந்தார்களாம்.

பண்டிதமணியவர்கள் ஓர் இசை விழாவிற்குச் சென்றிருந்தார்களாம். இசைக்கச்சேரி செய்ய வந்திருந்தவர் ஒரு பெரிய பாடகர். தக்க பக்க மேளத்துடன் தியாகராசரின் தெலுங்குக் கீர்த்தனைகளையும், இராக ஆலாபனையையும், சுரதாள பல்லவியையும் பாடிவிட்டு, அந்நாளைய வழக்கம் போல், இறுதியில் சில தமிழ்ப்பாடல்களின் வரிசையில் திருப்புகழ்பாடினர். அருணகிரியாரின்,

"முந்துதமிழ் மாலை கோடிக் கோடி"

என்ற பாடலைத் தொடங்கிப் பாடலானுர். அப் பாட்டின் 2-ஆம் கண்ணியை எடுத்துக்கொண்டு,

"முந்தைவினை யேவ ராமற்போக"

என்ற அடியைத் திரும்பத் திரும்ப, பல பிர்க்காக் களுடன் 'முந்தைவினை யேவ ராமற்போக' என்று பிரித்துப் பிரித்துப் பாடினர். கச்சேரி முடிவில் பண்டிதமணியவர்கள் பாடகரிடம், 'முந்தைவினை யேவ ராமற்போக' எனப் பாடினீர்களே, இராமனை எந்த வினை காட்டிற்குப் போக ஏவிற்று ? எந்த இராமாயணத்தில் அவ்வாறு கூறப்பட்டுள்ளது?" என்று கேட்டார்கள். அதற்கு மறுமொழியாகப் பாடகர், "ஆம், இராமனது தீவினைதான் கூனி வடிவில் வந்து அவனைக் காட்டிற்கு ஏவிற்று" என்ருர். மேலும் பண்டிதமணியவர்கள் அவரிடம், "ராமற் என்று வல்லின றகர மெய் போட்டிருக்கிறதே. இடையின ரகரமல்லவா போட்டிருக்க வேண்டும்' என்று கேட்டபொழுது, பாடகர் "அதுதானையா முக்கியம். ராமரை அநியாயமாகக் காட்டுக் கனுப்பிய தீவினையை வெறுத்துக் கண்டிப்பதற் காகவே அருணகிரியார் வல்லின றகரமிட்டு வலியுறுத்தியிருக்கிருர்" என்று மேற்கொண்டு விளக்கமும் நயவுரையும் கூறினுராம். பாடலைப் பார்க்கும் பொழுதுதான் நமக்குத் தெளிவு ஏற் படுகிறது. அந்த அடி 'முந்தை வினையே வராமல் போக' என்பதுதான் இசைக்காகச் சீர்கள் வகையுளி செய்யப்பட்டுள்ளன. 'வராமல்' என் பதிலுள்ள லகரம் வருமொழி வல்லினபகரத்தோடு சேரும்போது றகரமாக விகாரப்படுகிறது.

இதனைப் பண்டிதமணியவர்கள் சொல்லக் கேட்ட போது, பாடகரின் இசையும் விளக்கமும் சிரிப் பையே தந்தது.

தமிழ் நாட்டில் திருமணம் முதலிய சடங்கு களைப் புரோகிதர்கள்தான் நடத்தி வைப்பது முக்கியமாகப் பழங்காலப் பழக்கம். அதிலும், சிற்றூர்வாசிகள் புரோகிதர் இல்லாமல் சடங்கு களை நடத்துவதில்லை. அப்புரோகிதர்களும் பாரம்பரியமாக வடமொழி மந்திரங்களைச் சொல்லியே நடத்தினர். புரோகிதரும் சரி, மக்களும் சரி, அம்மந்திரங்களின் பொருளறியார். அதிலும், சிற்றூர்வாசிகள் மந்திரம் என்பது தமக்குத் தெரியாத பிற மொழியொலி என்றே அதனை மதித்தனர். ஒருநாள், ஒரு சிற்றூர்த் திருமண விழாவிற்குப் பண்டிதமணியவர்கள் சென்றிருந்தார்கள். சுற்று வட்டாரத்திலுள்ள பல சிற்றூர்களுக்கும் ஒரே ஒரு புரோகிதர் குடும் பமே சடங்குகளைச் செய்யும் பணியை ஏற்றி ருந்தது. பண்டிதமணியவர்கள் சென்றிருந்த திரு மண நாளன்று பக்கத்து ஊரில் ஒரு பெரிய மனி தர் வீட்டிலும் திருமணம் நடக்க இருந்தது. அது பெரிய இடமானமையின் புரோகிதர் அங்கு செல்ல வேண்டிய அவசியமாயிற்று. இரண்டு திருமணங்களும் ஒரே நேரத்தில் நடைபெற வேண்டியிருந்தமையால், புரோகிதர் தமது மகனை யழைத்து, (பண்டிதமணியவர்கள் சென்றிருந்த) திருமண வீட்டுக்குப் போய்ச் சடங்கினை நடத்தி வரும்படி சொல்லிவிட்டுச் சென்றுவிட்டார். அவரது மகனுக்கோ வடமொழியோ, மந்திரமோ தெரியாது. அதுவரை அவனும் ஒரு சடங்கும் நடத்தி வைத்ததில்லை. பள்ளியிறுதி வகுப்பு படித்து வந்தான். தந்தையின் கட்டளையை மீற முடியாமல் அத்திருமண வீட்டிற்குச் சென்றவன், மணவோரையில் அமர்ந்து, தான் அன்று தேர் வுக்குத் தயாராகப் படித்திருந்த ஆங்கில நாடகா சிரியரான செகப்பிரியரின் 'வெனிஸ் வர்த்தகன்' என்ற நாடகத்தில் வழக்கறிஞராகத் தோன்றும் போர்சியா என்ற பாத்திரத்தின் ஆங்கிலப் பேச்சினை அழகாகச் சொல்லித் திருமணத்தை நடத்தி வைத்தான். அப்பகுதியே அவனது தேர் வுக்குப் பாடம். ஆங்கிலமும் அறியாத திருமண வீட்டாரும் மற்றும் வந்திருந்தவர்களும் ஒரு தடையும் எழுப்பாமல், அதனைத் திருமணச் சடங்கு மந்திரமாகவே கருதிக்கொண்டார்களாம். பண்டிதமணியவர்கள் புரோகிதப் பையனின் சமயோசித புத்தியை மெச்சி மகிழ்ந்தார்களாம்.

இனி, பண்டிதமணியவர்களின் நூலிலமைந்து கிடக்கும் நகைச்சுவையைக் காண்போம். அவர் களின் 'உரைநடைக்கோவை', இரண்டாம் பகுதி இலக்கியக் கட்டுரைகளில் 'சங்க காலத்து

அங்கதம்' என்ற தலைப்பில் கட்டுரையொன்று எழுதியிருக்கிறார்கள். அங்கதம் என்பது, ஆங்கில மொழியில் செடயர் (Satire) என்று வழங்கப்படும். ஒருவனுடைய குறையைக் கூறுங்கால், அவன் நெஞ்சில் உறுத்தும் வண்ணம் நகைச்சுவை தோன்றக் குறிப்பாகக் கூறுதலாம். இது இன்புறத்தக்கதாகும்.

திருக்குறளில்

''தேவ ரனையர் கயவர் அவருந்தாம்
மேவன செய்தொழுக லான்''

என்ற குறள் குறிப்பிடத்தக்கது. தம்மை நியமிப்பாரின்றி எண்ணியவற்றைத் தாமே செய் தொழுகுதலில் கயவர் தேவர்களுக்கு ஒப்பாவர் என்று, கயவருடைய கயமைக் குணங்களை நகைச் சுவை தோன்ற இடித்துரைப்பது வள்ளுவரின் வாய்மொழி மாண்பு எனப் பண்டிதமணி எடுத்துரைக்கின்றார்.

புறநானூற்றில் நகைச்சுவை தோன்ற அங்கத மாகக் கூறும் சான்று ஒன்றினைப் பண்டிதமணி காட்டுகிறார். சிலர் பரந்த செல்வமுடையராயினும் அச்செல்வம் பிறர்க்குப் பயன்படாது என்பது தோன்றவும், வேறு சிலர் சிறு செல்வம் பெற் றிருப்பினும் அதில் ஒரு பகுதியை ஈந்து மகிழ வைப்பர் என்பது தோன்றவும்,

''உவர்க்கட லன்ன செல்வரு முளரே
கிணற்றூற் றன்ன நீயுமா ருளையே''

என்ற அடிகளைப் பண்டிதமணி சான்று காட்டு கிறார்.

'மண்ணியல் சிறுதேர்' என்ற நூல் பண்டித மணியவர்கள் எழுதிய ஒரு நாடகம். வடமொழி யிலுள்ள 'மிருச்சகடிகா' என்ற நூலின் தழுவல் நாடகம். அந்நாடக நூலின் போக்கும், சொல் லாட்சி முறையும் பண்டிதமணியின் அறிவுத் திறத்துக்கு ஒரு சிறந்த சான்று. அந்நாடகப் பாத்திரங்களுள் மைத்திரேயன் என்ற விதூடகன் நாடகத்தில் நகைச்சுவைக்கென்றே படைக்கப் பட்டவன் போலப் பேச்சிலும் நடையிலும் காணப் படுகின்றான். இயல்பாகவே கூர்த்த மதியுடைய வன்தான். ஆனால், தன் பேச்சாலும் செய்கை யாலும் நகைச்சுவை யுண்டாக்குகிறான். மேலும் நாடகத்தில் கயவனாக வரும் சகாரன்கூடத் தன் பேச்சுக்களில் தன் அறியாமையையும் அறி வீனத்தையும் சாடுகின்றான். சான்றாக:

'' இராவணன் தன்பால் எழில்மிகு குந்தி
தராதலத் துற்ற தன்மை போல்''

என்று, 'இராவணனிடத்துக் குந்தி அகப்பட்டாள்' என்றும், வேறோரிடத்தில், 'அனுமன் சுபத்திரை யைக் கவர்ந்தான்' என்றும், 'குந்தி மகன் தசமுகன்' என்றும் தவறான செய்திகளைக் கூறும் போது, சகாரனின் அறியாமை வெளிப் படுவதோடு, படிக்கும் நமக்கும் நகைச்சுவை பயக்கின்றது.

★

சிரிப்பார் களிப்பார் தேனிப்பார்; சிரிப்பும் களிப்பும் தேனிப்பும் எல்லோருக்கும் வரமாட்டா. உள்ளங் குளிர்ந்து உவகையெய்திப் பூரித்தாலன்றி உண்மையான சிரிப்பும் களிப்புமில்லை. நிரம்பிய புலமையும், மெய்யன்பும், உள்ளுணர்வும், புரவலரை நாடிச் சென்றடையாத திருவும், அமரருள் உய்க்கும் அடக்கமும் வாய்க்கப் பெற்ற ஒருவருடைய உள்ளமே வெதும்புதலின்றி எஞ்ஞான்றும் குளிர்ந்திருக்கும்; இயல்பாகவே பூரிக்கும் தன்மையுடையதாயிருக்கும். அத்தகைய குளிர்ந்த உள்ளமுடையவர்கள் ஒருசிலரே இப்போது இத் தமிழ் நாட்டிலுள்ளார். அவர்களுள் ஒருவர் நம் பண்டிதமணி கதிரேசனாரவர்கள்.

(சென்னைச் சைவ சித்தாந்தப் பெருங்கழகத்து அமைச்சர் திரு. ம. சுப்பிரமணிய முதலியார், B.A , B.L., எழுதியது.)

பண்டிதமணியின் அறுபதாம் ஆண்டு நிறைவு விழா
—நிகழ்ச்சியும் பாராட்டும்
( பக்கம் - 29)
மதுரை (21-2-1942)



பண்டிதமணியார் ‘மகாமகோபத்தியாய’ பட்டம் பெற்றதைப் பாராட்டி, கிழச்சிவற்பட்டி பி. அழகாபுரி நகரத்தார் நடாத்திய விழா நிகழ்ச்சி. பண்டிதமணியார், விழாத் தலைமை ஏற்ற புதுக்கோட்டைத் தனியரசின் ஆளுநர் (திவான்) கான்பகதூர் பி. கலிபுல்லா சாகிப், சொ. முருகப்பா, விசு. திருநாவுக்கரசு ஆகியோர் உள்ளனர்.



1935-ஆம் ஆண்டு அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பகுதி ஆசிரியர்களும்,
வித்துவான் 4-ஆம் ஆண்டு மாணவர்களும். துணைவேந்தர் எஸ். இ. அரங்கநாதன்,
பண்டிதமணியார், பேராசிரியர் ச. சோமசுந்தர பாரதியார், ரா. பி. சேதுப்பிள்ளை,
கந்தசாமியார், சர்க்கரை இராமசாமிப் புலவர், மு. அருணாசலம் பிள்ளை,
ஆ. பூவராகம் பிள்ளை, பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார்,
க. வெள்ளைவாரணனார் ஆகியோர் உள்ளனர்.



பண்டிதமணியார் 'மகாமகோபாத்தியாய' பட்டம் பெற்றதைப் பாராட்டி, காரைக்குடி நகரத்தார் 27—6—1942இல் நடாத்திய பாராட்டு விழா. விழாத் தலைமை ஏற்ற திரு. டி. கே. சிதம்பரநாத முதலியார், பண்டிதமணியார், சொ. முருகப்பா, சா. கணேசன், தண்ணீர்மலையான் செட்டியார், விசு. திருநாவுக்கரசு, திரு. இராமசாமி செட்டியார், திரு. சோமசுந்தரம் செட்டியார் ஆகியோர் உள்ளனர்.



அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை ஆசிரியர்கள், மாணவர்களுடன்
பண்டிதமணியார், பேராசிரியர் ச. சோமசுந்தர பாரதியார், சுவாமி விபுலானந்தர்,
பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார், ஆ. பூவராகம் பிள்ளை,
மு. அருணாசலம் பிள்ளை, இ. எஸ். வரதராச ஐயர்
ஆகியோர் உள்ளனர்.



தமிழ்ப்பெருமக்களுடன் பண்டிதமணியார். பெ. ராம. ராம. சித. சிதம்பரம் செட்டியார்,
சொ. முருகப்பா, சா. கணேசன், சி. ராம. சி. இராமசாமிச் செட்டியார்,
கரந்தைக் கவியரசு வேங்கடாசலம் பிள்ளை, ஆகியோர் உள்ளனர்.



அண்ணுமலைப் பல்கலைக் கழக நகரத்தார் மாணவர், ஆசிரியர்களுடன் பண்டிதமணியார்.
லெ. ப. கரு. இராமநாதனுர், வ. சுப. மாணிக்கம், மெ. திருநாவுக்கரசு,
விசு. திருநாவுக்கரசு, கும. சுப்பிரமணியம், சுப. இராமநாதன்,
ஆவ. இராமநாதன் ஆகியோர் உள்ளனர்.



அண்ணாமலைப் பல்கலைக் கழகத்து 1938-40-ஆம் ஆண்டு வித்துவான் மாணவர்களுடன்
தமிழ்ப் பேராசிரியர்கள், துணைவேந்தர் மகாகனம் சீனிவாச சாத்திரியார்,
பண்டிதமணியார், அ. சிதம்பரநாதனார், ரா. இராகவ ஐயங்கார்,
பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார், ஆ. பூவராகம் பிள்ளை,
மு. அருணாசலம் பிள்ளை, லெ. ப. கரு. இராமநாதனார்
ஆகியோர் உள்ளனர்.



தமிழ்த்தென்றல் திரு. வி. க. அவர்களுடன் பண்டிதமணியார்.

# பண்டிதமணி - ஒரு கலைக்களஞ்சியம்.

**புலவர் சரசுவதி இராமநாதன், எம்.ஏ.,**
*சீதாலட்சுமி ஆச்சி கல்லூரி, பள்ளத்தூர்.*

ஒரு மாமணியாய் தமிழுக்குத் தோன்றிய உயர் மாமணி; தமிழ்மணி; நகரத்தார் மரபுதித்த நன்மணி; புலவர்க்குப் புலவராயும், புரவலராயும் விளங்கிய பொன்மணி; உரை விளக்க வந்த உயர்மணி; கவி பாடிய கவிமணி; கவினூறும் பாடம் போதிக்கும் புகழ்மணி; இருபதாம் நூற்றாண்டில் தோன்றிய தமிழ்த்தாயின் தவமணி; ஊருக்குழைத்த அருள்மணி.

தாங்கருஞ் சிறப்பில் தமிழ்த்தவமே மேற் கொண்ட தமிழ்மணிக்குக் கதிரேசன் என்ற இயற் பெயர் எவ்வாறு உயர்பொருளைச் செப்பி அவருயர்வைக் காட்டுகின்றதோ அது போல, 'முதுபெரும்புலவர்', 'மகாமகோபாத்தியாய' என்ற பட்டங்கள் அவருயர்வைக் காட்டுகின்றன. ஆயினும், 'பண்டிதமணி' என்ற பொருளொடு பொதிந்த பெயரே பாடு புகழ் தந்து நீடு நிலவுவது! பட்டத்தின் சிறப்பையும் புலமையின் உயர்ச்சியையும் நோக்குங்கால், பட்டத்தால் அவருக்குச் சிறப்பா, அன்றி, அவரால் பட்டம் சிறப்புப் பெற்றதா என்ற வினா நம்முள் எழுவது இயற்கையன்றோ ! உண்மை நிலையினை உள்ள வாறே எடுத்தியம்ப என் சொற்கள் போதா ! அவர் யாத்த மண்ணியல் சிறுதேரின் நாயக னாகவே நின்று அவரைக் காட்டுகிறேன்.

> **"நற்குணத் தேன்மிக்க நளினமலர்; சீலஒளி**
> **மிக்கமதி; இடுக்கண் மேவினர்-ஒற்கமெலாம்**
> **வீட்டும் இடம்; வேலையுட் சீர்மணி யாம்இவரை**
> **நாட்டிலறி யாரெவரோ நன்று."**

இத்தகு இவர் வாழ்வு கவின்மிகு கலைவாழ்வாம். வாழ்வையே கலையாக்கிப் படைத்த பெருமை இவரைச் சாரும். வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து, மன்னு உலகத்து மன்னுதல் செய்யும் தன் புகழ் நிறுவி, மணியறம் காத்து, தமிழ்வளம் பேணி, மன்னுபுகழ் பெற்ற மாமணி இவரெனில் அது மிகையாகாது. நடமாடும் பல்கலைக் களஞ்சிய மாக, பல்கலைக் கழகமாக இவர் திகழ்ந்ததைப் பலருடைய சொற்கள், எழுத்துக்கள் வழி நானறி வேன். சிறுவயதில் நேரில் கண்ட அவர் திருவுருவம் என்னெஞ்சில் நிலைக்கவில்லையெனி னும் அவரது புகழுடல்தான் என்றுந் தமிழ் நெஞ்சங்களில் கோயில் கொண்டிருக்குமே!

**மொழியறிவு :**

'கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்' என்று பாராட்டப்பெற்ற கண்ணப்ப நாயனர், அந்த அப் பிறவியிலே வேடராகக் கல்லா மனிதராக இருந்த போதும், முன்னைப் பிறப்பின் ஞானம் கைகூட்ட, வினை தீர்ந்த விளக்கம் வந்ததென்பர். அது போலத் தமிழகமெங்கும் கலையொளி வீசிய தண்டமிழா சான் பண்டிதமணியும் ஏழு மாதங்கூடப் பள்ளியில் கல்வி பயிலாதவர். ஆனல், பன்னிரு ஆண்டுகள் பல்கலைக்கழகப் பேராசிரியராகத் திகழ்ந்தவர். இவர் "பட்டம் பெறப் பிறந்தவர் அல்லர்; பட்டம் வழங்கப் பிறந்தவர்" என்று உலகம் சுற்றிய தமிழர் "சோம. லெ." அவர்கள் கூறியது முற்றிலும் உண்மை; வெறும் புகழ்ச்சி யில்லையன்றோ!

**இளமையில் புலமை :**

உணர்வலைகள் அலை மோதும் இளமைக் கடலி லேயே திருத்தொண்டர் புராணம், கம்பராமா யணம், பிள்ளைத்தமிழ் ஆகிய நன்முத்துக்களைப் பிறர் உதவியின்றியே (ஆசிரியர் உதவியின்றியே) தாமாகத் தெரிந்து தேர்ந்தார். தெரிந்தாய்ந்த முத்துக்களைத் தரங்கூட்டி நித்திலக்கோவை களாகவும், முத்திடைப் பவளமாகவும், ஆணி முத்து மாலைகளாகவும் ஆக்கித் தமிழன்னைக்கு அளித்திட்டார். வெண்பாவில் வல்ல புகழேந்தி பெண்களுக்காக எளிய நடையில் அல்லி அரசாணி மாலை செய்தது போல, எளிய சொன்முத்து மாலையினையும் ஆக்கினர், அரிய நடையுடை பண்டிதமணி. மகிபாலன் பட்டியிலிருந்து கண்டவ ராயன் பட்டிக்குச் செல்லும் நடைபாதையினைச் செப்பனிட்ட வள்ளல் வீரப்பச் செட்டியாரைப் பாராட்டி, எளிய பாடலாம் நன்முத்து மாலைதனைப் புனைந்தார்.

> **"தடந்தெரியா வழியாகும் நிலையும் தெரியாது**
> **சத்தமிட்டுக் கதறினலும் உதவி கிடைக்காது**
> **இருக்குநிலை சொல்லென்றுல் எவர்க்கும்**
> **முடியாது**
> **இப்பெரிய இடையூறு நிற்கவழி தேடி**
> **இரண்டாண்டில் முடித்துவைத்தீர்**
> **எங்கள் நலம் நாடி**

தினந்தினமும் தழைத்தோங்கும் தருமமிது
தானே
வழியழகாய் முடித்துவைத்தீர் துன்பமெலாம்
போக்கி
அறம்புரியும் தனவணிகர் வாழ்பாண்டி நாடு
அதுதேதி அந்நகரம் சிறந்தது கண்கூடு
செந்நெல்புரி தன்னில்வளர் சிவனடியார்
செல்வர்
வீரப்பச் செட்டியாரும் வாழ்க வாழ்க"

எனப் பாடி நாட்டு மக்களின், மகளிரின் உளங்களிலே தமிழிசையைத் தாவிவிட்டார் இவரெனின், இவர் நடையின் எளிமையும் பெருமையும் புலனுமன்றோ!

**தொண்டாற்றிய தொண்டன் :**

தமிழ்த்தொண்டால் தரணி புகழ் வாழ்வு பெற்ற தமிழறிஞன் மொழித்தொண்டோடு சமுதாயத்திற்கும் பல நற்றொண்டுகள் செய்தார். அகவிருள் நீக்கி அறிவொளி பெருக்க, தான் பிறந்த மகிபாலன்பட்டியில் பள்ளிக்கூடங்களையும், மங்கள விநாயகர் வித்தியாசாலை என்ற ஒன்றையும் ஏற்படுத்தினர். கல்விச்செல்வம், செல்வத்துட் செல்வமாகிய செவிச்செல்வம், போன்றவற்றைப்பெற பள்ளி, கல்லூரி, ஏற்ற மிகு ஊர்திகள், ஊர்திகள் ஊரப் பாலங்கள், பாதைகள் போன்ற பல இவரால் உருவாக்கப் பட்டன. ஊருக்குத் தேவையான அஞ்சல் நிலையமும் இவரது பெருமுயற்சியால் அங்கு உருவானது. வித்தியாசாலை, பள்ளி இவற்றிேடு அமையாது கணேசர் செந்தமிழ்க்கல்லூரி என்ற ஒன்றையும் நிறுவினர். கல்வியின் பேறு கல்லூரியோடு முடிந்துவிடக் கூடாதென்றெண்ணி, சன்மார்க்க சபையொன்றினையும் நிறுவி, அறிவொளியோடு அருளொளி காட்டி அறவழி கூட்டினர். இதனைப் பின்வரும் அரசஞ் சண்முகனர் பாடல்ால் நாம் நன்கறியலாம்.

செந்தமிழ மாரியமு முற்றவுணர்
நுண்மதியான் சீர்த்திச் சிந்து
வந்துமிழ மாரிகிகர் வண்மையினை
னற்குணமே வடிவ மானேன்
சுந்தரஞ்சேர் மகிபால நகர்வாழுங்
கதிரேசர் கழுக னேடு
முந்தவே பலகாலு மாராய்ந்து
சபையொன்று முளைப்பித் தானே.

இவ்வாறு ஊருக்குழைத்து பேரு (பெயர்) பெற்றது போலப் பேறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்ந்திட்டாரவர் எனக் கூறலும் வேறுமோ!

**பகுத்தறிவுப் பாதுகாவலன் :**

"கற்றலின் கேட்டல் நன்றும்;" "கற்றிலனுயினும் கேட்க" என்பவையெல்லாம் நம் முன்னேர் மொழி: முன்னேர்தம் மொழியைப் பொன்னே போல் போற்றிப் பாதுகாத்து வளர்த்தவர் பண்டிதமணி. கேள்வியால் தோட்கப்படாச் செவியாயினும் கேட்கும் திறனை உண்டாக்கும் வல்லமை பண்டிதமணியின் நாநலத்திற்குண்டு. அவருடைய பேச்சில் சிலம்பு, பெரிய புராணம், திருவாசகம் ஆகிய பெருநூலெலாம் கலந்துறவாடும்; கவின் கதை கூறும்; இன்பகீதம் இசைக்கும்; சிலம்பை சாகுந்தலத்தோடு இணைப்பர்; மிருச்சகடிகத் தோடு ஒருமிப்பர். இவ்வாறு ஒப்புமை கூறி விளக்குதலோடுகூடப் பாடலை விளக்கு முன் பாடலில் அமைந்த நுண்ணிய பொருள்களைச் சொற்சாதுரியத்துடனும் நகைச்சுவையுடனும் முதலில் தெரிவித்துவிடுவார். நயத்தை விட்டு ஏனையதை முதலில் கூறி, கடைசியில் பாட்டைப் படிப்பார். இவ்வாறன இவரது தன்மைகளை நோக்குங்கால் "The greatest teacher is one who makes you want to learn' என்று சொல்வதுபோல, பாடங்கேட்பவர்களைத் தூண்டித் தாமாகவே கற்கச் செய்யும் பிறவி ஆசிரியர் (Born teacher) இவரன்றோ! இத்தகு திறமிகுந்த இவரிடந்தான் அ. சிதம்பரநாதச் செட்டியார், மீனுட்சி சுந்தரனுர், ஆலால சுந்தரனுர், ஆறுமுக முதலியார், வ. சுப. மாணிக்கம், இராசாமணி அம்மையார், இராசரத்தினம் அம்மையார், தமிழ்ப் பேராசான் கி. இலக்குமண ஐயர் ஆகியோரும் கல்வி பயின்று மேம்பாடடைந்தனர் எனில், இவரது பாடம் புகட்டும் திறனுக்குச் சான்றும் வேறு வேண்டுமோ!

**வண்டமிழொடு வடமொழியறிவு**

என்றுமுள தென்றமிழை மட்டுமல்லாது வடமொழியறிவும் பண்டே பெற்ற பாண்டித்தியர் பண்டிதமணி. வடமொழி ஓர் இனத்தார்க்கே உரியதென எண்ணிய காலத்தில் வடமொழியையும் படித்து, அதன் ஆகமநூல்களையும் வியாகரணத்தையும் ஐந்தாண்டுகள் பயின்றுர். நுனித்த புலமையால் காளிதாசரின் பாடல் தமிழ்ப்பாவொடும், வடமொழிப் புலவர்களின் அரிய செய்யுள் நலங்கள் தமிழ்க்கவிகளொடும் சீர்தூக்கி ஆயப்படும். சிலம்பும் மிருச்சகடிகமும், சிலம்பும் சாகுந்தலமும் அங்கு சிந்திக்கப்படும். இதனுல்தான்,

"வடமொழி வாணருந் தென்மொழி வாணரும்
ஆங்கிலப் பயிற்சியி லோங்கிய நிபுணரும்
வேட்டுப் பலமுறை கேட்டுச் சிரகர கம்பிதஞ்
செய்திடக் கவின்பிர சங்கம் புரிதரு
திறலினன்."

என்று உ. வே. சா அவர்களே பாடுகின்றுர்கள் எனின், வடமொழியறிந்த அவர்தம் அறிவை ஆற்றெழுக்காய்ச் செப்பவும் கூடுமோ!

**கலைச்சொல்லாக்கமும் கவின்கலையாக்கமும்**

நாட்டில் எணணவும்பண்ணவும் படும் பல்வேறு வகைகளான புதுமைகளை அறிந்து நன்மை ஆக்கவும், தின்மை நீக்கவும், பல்வகைக் கலையிலும் நல்லறிவுயரத் தரம் தரமாகவும், இதம்பதமாகவும் நிரம்பிய அறிவைத் தரும் பெருநூல்களைத் தாய் மொழியிலே இயற்றச் செய்வது இன்றியமையாதது. அந்த இன்றியமையாமையை உணர்ந்ததனால்தான் பண்டிதமணி அவர்களும், வடமொழியின் பேரிலக்கியமாகிய மிருச்ச கடிகத்தை,நாடகப் பேராசிரியர்கள் வியக்கத்தக்க முறையில் 'மண்ணியல் சிறுதேர்' என்னும் தமிழ்ப்பெயரிலேயே மொழி பெயர்த்தார். உதயண சரிதம், சுக்கிர நீதி,சுலோசனை முதலியன உணர்ந்தவரிவர். சாணக்கியரின் கௌடிலீயத்தைத் தூய தமிழ் நடையில் மொழி பெயர்த்தார். சிலம்பையும் சாகுந்தலத்தையும், சிலம்பையும் மிருச்சகடிகத்தையும் ஒப்பிடுவார். இவ்வாறான தம் ஒப்பியல் ஆய்விலே புதுக்கருத்தைச் சுட்டுதற்கான சொல்லும், பிடிக்கத்தக்கவாறு அதனைச் சிந்தித்துத் தமிழின் தகவிகவாமல், (புதுச்சொல்லாக்கங்களைப்) புகுத்தி, கலைச்சொல்லாக்கத்தால் மொழி வளம் பெருக்கியதோடு மொழி வளர்ச்சிக்கான மொழி பெயர்ப்பினையும் செய்தார். இவ்வாறாக,இருமொழிப் புலமையும் ஒருங்கு பெற்றிலங்கிய காரணத்தால்தான் அவருடைய பெயரும் 'பண்டிதமணி' (இருமொழியிலும் புலமையாளர்களைக் குறிக்கும் பெயராக) என அமைந்து, வடமொழி, தென்மொழி மேன்மை யுணர்ந்திட்ட அவர் திறம் கூறுமாறு அமைந்தது போலும்!

**கணியனுமான கவிமணி :**

பயில்வார்க்கு மொழி நயம் தோன்ற உரையாகவும் செய்யுளாகவும் எழுதிய இவரின் மண்ணியல்சிறுதேரினைச் சுவைத்துணர்ந்த விபுலானந்தர், பண்டிதமணி 'கவிமணி' எனவும் கூறுவர். இந்தக் கவிமணி கணியன் பூங்குன்றனார் பிறந்த பூங்குன்ற நாட்டிலே, பூங்குன்றத்தில் பிறந்தவர். (பூங்குன்ற நாட்டுப் பூங்குன்றமே இடைக்காலச் சோழர் காலத்தில் மகிபாலன் பட்டியாயிற்று) அவரைப் போன்ற கவியாக இருந்ததோடன்றிக் கணியனாகவும் (சோதிடன்) இவர் திகழ்ந்தார் என்பதை, இவரோடு பழகிய 'சோம. லெ', டி. வி. சதாசிவ பண்டாரத்தார் ஆகியோர் வாயிலாக நாமறியலாம். இதனால் கவியுமாகி, பண்டிதனுமாகி, கணியனுமாகி அவர் நின்ற கோலம் புலனாகுமன்றோ !

**புலமை மிகு தலைமை :**

'மகாமகோபத்தியாய முதுபெரும்புலவர் பண்டிதமணி மு. கதிரேசஞ் செட்டியார் எனில், தமிழ் நாட்டில் அழுத பிள்ளை வாய் மூடாது; அது பாட்டுக்கு அழுதுகொண்டிருக்கும்; ஆனால்,தமிழ்ப் புலவர்கள் கூட்டங்களில் இப்பெயரைச் சொன்ன மாத்திரத்தில், மரியாதைக்கு அறிகுறியான அமைதி நிலவும்'' என இரா. கிருஷ்ணமூர்த்தி (கல்கி) கூறுவார். தூத்துக்குடி விழாவில் ஒருவர், ''தேவாதி தேவர்களைக்காட்டிலும் முருகன்தான் பெரியவனாக எல்லோரைக் காட்டிலும் இருந்தான்'' என்றார். தலைமை வகித்த இப்புலமையாளர் தன்னுரையிலே, ''முருகன் குழந்தையானதால் பரமேசுவரன் முருகனைத் தோள்மீது தூக்கி வைத்திருப்பார் ; இதனால் முருகன் எல்லோருக்கும் பெரியவனாகக் காட்சி கொடுத்ததில் வியப்பில்லையல்லவா !'' என்றார். நகைமிகு அங்கதத்தால் நலம் பெறச் சுட்டிக் காட்டினார் தலைமையுரையில் ; அவைத்தலைமையில் மட்டுமல்ல; அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பேராசிரியராகத் தலைமை ஏற்றுஇருந்த காலத்தில், ஆங்கில மொழிபெயர்ப்பு போன்றவற்றில் தவறு இருந்தால், உடன் கண்டறிந்து செப்பனிடுவார். இவ்வாறான இவர் செய்கைகளால், புலமைமிகு தலைமையால் தலைமைக்கே ஒரு தகைமை தந்தார் எனில், அது மிகையாகாது.

**நலங்கிளர் நகை :**

''இடுக்கண் வருங்கால்நகுக''என்றார் வள்ளுவர். ஆனால் பண்டிதமணி, இடுக்கண்ணிலே வரும் நகையுடன் இயல்பாகவே நகையுணர்வு கொண்டவர். அவர் வாழ்வின்கண் நடந்த பல்வேறு நிகழ்வுகளால் அதனை நாம் உணரலாம்.

ஒரு முறை, திருவாவடுதுறை ஆதீனத் தலைவர் அம்பலவாண தேசிகரை வணங்கச் செல்லுங்கால், கைப்பிரம்பு தடுக்கிக் கீழே விழ நேர்ந்தது. அப்போது பண்டிதமணி, 'பக்தர்களாகிய நாங்கள் தவறுவதும், குருமார்களாகிய நீங்கள் தாங்குவதும் இயல்புதானே'' என்றாராம்.

ஒரு முறை, மு. அருணாசலம் பிள்ளை என்ற அண்ணாமலைப் பல்கலைக் கழக விரிவுரையாளர், ''பற்பலரும் அங்காந்து இவர் சொற்பொழிவைக் கேட்பர்'' என்று கூற இவர் ''பல பற்களை உடையவர்களும் வாயைத் திறக்கும்படி'' என்ற பொருளும், 'பற்பலரும் அங்காந்து' என்ற தொடரில் உண்டு என் வாயில் பல்லே இல்லாததால் இவ்வாறு சொன்னார் போலும்'' என்றாராம். இவ்வாறு சிலேடையாம் சொல்லாடலால், நலங்கிளர் நகையைத் தோற்றுவிக்கும் மாண்புடையவர் என்பதை உணரலாமன்றோ !

**உரை விளக்கும் உரை :**

நூலின் கால அறிவும், நூற்காலச் சமுதாய அறிவும், தொடரின் நடையறிவும், நாட்டின்

வரலாற்றறிவும், இன்ன பிறவும் கொண்டுதான் உரையின் விளக்கம் எண்ணப்பட வேண்டும். அரும்பொருள் தரும் செய்யுட்களும் எளிதில் தெற்றெனப் புலப்பட்ட காரணத்தாலமைந்த உரைத்திறம் போற்றற்குரியது. நினைவில் நிலைத்து நாளில் நடம் புரியும் பாடல்களில் சிலவற்றை இவர் வழி (உரை வழி) நோக்கின், நிலை புரியும்.

'' வையகம் பொலிய மறைச்சிலம் பார்ப்ப
மன்றுளே மாலயன் தேட
ஐயர்தாம் வெளியே யாடுகின் றுரை
யஞ்சலி மலர்த்தி முன்குவித்த''......

என்ற தடுத்தாட்கொண்ட புராணப்பாடலில், ''சிவன் திறந்த வெளியில் திருநடனம் புரிகிறார் என்ற உண்மையை அறியா மாலயன் உள்ளே தேடும் அறியாமை என்னே!'' எனச் சேக்கிழார் பாடியுள்ளதைப்பண்டிதமணி விளக்கிப் புன்னகை புரிவர். நடராசர் சிதாகாசத்தில் ஆடுகிறார் என்பதை 'வெளியிலே' ஆடுகிறார் எனக் கூறியுள்ள நயம் கூறுவார்.

பத்தரெல்லாம் பாராட்டும் பண்டிதமணி சமய தத்துவங்களை அழகுற விளக்கும் பெற்றி வாய்ந்தவர். திருவாசகத்தின் திருவெம்பாவையில் 'பைங்குவளைக் கார்மலரால்'' என்ற பாடலால் நாம் காணலாம் இவ்வுண்மையை. கார் மலரும் செங்கமலப் போதும், குருகினமும் அரவமும் நிறைந்த அப்பொய்கை, வளை அணிந்த உமையாகவும் அரவணிந்த செம்மேனியனாகவும் தோன்றுவதோடு,முறையேநயனதீக்கை, மானசிக தீக்கை, பரிச தீக்கை, வாசிக தீக்கை ஆகிய வற்றை விளக்குவனவாகவும் காட்டுகின்றார். முன்னவர்தம் மொழியைப் பொன்னேபோற் போற்றுதலோடு பொன்னைப் புடம்போட்டுச் செம் பொன்னாக்குதல் போன்று உரை விளக்கும் உரையாக, உரை விளங்கும் உரையாக ஆக்கி அளிக்கும் திறனும் படைத்த இவர், சிறந்த உரையாசிரியரு மன்றோ !

**நா படைத்த நாச்சுவை :**

நாநலம் படைத்தவரின் எழுத்தாற்றல், உரை வன்மை, மொழித்திறம் போல நாச்சுவையாம் அடிசிற்கலையும் போற்றற்குரியதாக அமையும் ஒன்றேயாம். சமையற்காரனுக்கே பக்குவம் சொல் கிறஅளவு அடிசிற்கலை வல்லுநராகத் திகழ்ந்தார். அவர் சொல்லும் பக்குவமே நாவில் நீர் ஊறச் செய்யும். முட்டைக்கோசு கூட்டு, உருளைக்கிழங்கு சாம்பார், எலுமிச்சை ஊறுகாய் என வகை வகை யாய்ச் சுவை தேர்ந்துண்டாலும் அளவுடன் உண்டு வளமுடன் வாழ்ந்த பெருமகனன்றோ அவர் !

செந்தமிழ்ச்செல்வம் சிறந்து வளர்ந்து வரச் சிந்தைமகிழ் பன்னூல்கள் செய்தளித்து முந்து புகழ் பூண்ட கதிரேசப் பேரம்பலத்தனார், நூல் களைச் செவ்வையாய்க் கற்று, வழுவற உரைநயங் காட்டி, விழுமிய நூல்கள் எழுதப் போதிய ஆற்ற லும் பெற்று, சொல்லின் திட்பமும் பொருளின் நுட்பமும் ஒர்ந்து, சீர்தூக்கி ஒளிரும் நடை ஒப்ப முடன் வையமெலாம் போற்று திருவாசகத்தின் மெய்ப்பொருளை ஐயமறக் கண்டறிந்து, செய்ய தமிழ் மன்றத்தறிஞர் மணியாய் ஒளிவீசி நின்ற கதிரேசர், பல்கலைக் களஞ்சியமாக விளங்கியவர் என்பதில் ஐயமில்லையன்றோ!

**31-5-1944-இல் வலம்புரியில் நிகழ்ந்த தமிழிசை மாநாட்டுத் தலைவர் திரு. மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் கூறிய முன்னுரைச் சுருக்கம்:**

தமிழ் என்றால் அஃது இயல், இசை, கூத்து என மூன்று பிரிவுகளாக ஒன்று பட்டு நம் உள்ளத்திற்குப் புலனாவதாகும். இம்மூன்றனுள், நடுமணியாகத் திகழ்வது இசை. இசை உணர்ச்சியில் ஈடுபடாத உயிர் வாழ்க்கை மிகச் சுவையற்றதாக இருக்குமென்பது அனுபவத்தில் கண்டது. பசு முதலிய விலங்குகளும் வஞ்சகச் செயல் அரும்பாத குழந்தைகளும், பாம்பு முதலிய கொடிய உயிர்த் தொகுதிகளும், இசையில் மெய்மறந்து ஈடுபடும் என்றால், தக்க இன்ன, தகாதன இன்னவென்று பகுத்துணரும் மக்களறிவு இசையில் இரண்டறக் கலந்து இன்ப நுகர்ச்சியில் தலைப்படுமென்பது கூறவும் வேண்டுமோ? பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தமிழிசை இந்நாட்டில் மிகவும் விறுபெற்றிருந்த செய்தியைச் சங்கத்துச் சான்றோர் நூல்களில் காண்கின்றோம். காட்டு வழியில் நின்று ஆறலைப்போர், சூறை கொள்ளு வோர் முதலிய வன்கண்ணாளரும் இனிய பாலைப் பண்ணைக் கேட்ட அளவில் கையில் இருந்தகொடிய படைக்கலங்கள் நழுவத் தம் மறச்செயலை மறந்து இசை வடப்பட்டு நிற்பர் என்றும், தினைப்புனங் காக்கும் குறப்பெண்கள் குறிஞ்சிப்பண்ணைப் பாடக் கேட்ட அளவில், ஆங்குத் தினைக்கதிரை உண்ண வந்த மதயானைகள் அக்கதிரையும் உண்ணாமல், நின்ற நிலையினும் பெயராமல், துயில் கொள்ளுமென்றும், ஆடல், பாடல் கருவியாகிய, இம்மூன்றாலும் இசைக்கூத்து நடைபெறுமென்றும், அம்மூன்றும் ஒத்து நிகழ்வது முரசு முழங்குதானைகளையுடைய சேர பாண்டியர் சோழர்களாகிய மூவேந்தரும் கூடி அரசவையிருந்த தோற்றம் போலாகுமென்றும் பழந்தமிழ் நூல்கள் கூறும்.

# முதுபெரும் புலவர் காட்டிய வழி

சுப. இராமநாதன், எம். ஏ.,
தமிழ் விரிவுரையாளர்,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

மனோன்மணீய நூலாசிரியர் சுந்தரம் பிள்ளை தமிழ்த்தாய் வணக்கத்தில் தமிழன்னையினை நோக்கி,

"பற்பலர் நின்றன் பழம்பணி புதுக்கியும்
பொற்புடை நாற்கவி புதுப்பணி குயிற்றியும்
நிற்பவர் நிற்க"

[மனோமன்மணீயம்-பாயிரம்]

என்றார். அவர் கூறுவது போன்று தமிழ்த் தொண்டு புரிவோர் பலர். அவர் மேற்கொண்ட வழிகளும் பல. பாரதியார், பாரதிதாசனைப் போன்று புதிய கவிதைகளைப் படைப்பார் சிலர். ஆறுமுக நாவலர், வேங்கடசாமி நாட்டாரைப் போன்று பழம்நூல்களுக்கு உரை வரைவோர் சிலர். சி.வை. தாமோதரம்பிள்ளை, டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் போன்று பழைய நூல்களைப் பதிப்பிப்போர் சிலர். எஸ். வையாபுரிப் பிள்ளை, கா. சு. பிள்ளை போன்று ஆராய்ச்சி நூல்கள் இயற்றுவோர் சிலர். பண்டிதமணியவர்களோ சிரிய படைப்பாளராய், செந்தமிழ் உரைகாணும் நல்லறிஞராய், மனங்கொளப் பாடஞ்சொல்லும் நல்லாசிரியராய், இரு மொழியாளரும் ஏற்றுக் கொள்ளும் மொழி பெயர்ப்பாளராய்த் திகழ்ந்தார்.

முதுபெரும் புலவரவர்கள் தமிழிற்கு ஆற்றிய பணிகள் பல துறையின. அவற்றுள் மொழி பெயர்ப்புத் துறையில் அவர்களுடைய பணி சிறப்புடையது. அவர்கள் இத்துறையில் ஆற்றிய தொண்டினைக் காணுமுன் மொழி பெயர்ப்புத் துறையின் இன்றியமையாமை யினைக் காணலாம். இருபதாம் நூற்றாண்டில் தமிழ்மொழியானது மலையாளம், தெலுங்கு முதலிய தென்னாட்டு மொழிகளுடனும் வங்காளி, மராட்டி, இந்தி ஆகிய வடநாட்டு மொழிகளோடும் ஆங்கிலம், பிரஞ்சு, ரஷ்யன் முதலிய பிற நாட்டு மொழிகளுடனும் உறவு கொண்டுள்ளது. அந்த மொழிகளிலிருந்து பல நூல்கள் தமிழில் மொழி பெயர்ப்புகளாகவும் தழுவல்களாகவும் தோன்றி யுள்ளன. பதினெட்டு, பத்தொன்பதாம் நூற்றாண்டுகளிலே ஆங்கிலம், வடமொழி ஆகிய மொழிகளுடைய தொடர்பு தமிழிற்கு இருந்தது. அதற்கு முன் செல்வோமானால் தமிழ் உறவு கொண்டிருந்தது வடமொழியொன்றினுடன் என்று சொல்லலாம். வடமொழி நூல்களின் தழுவல்களாகத் தோன்றியவைதாம் பெருங் கதை, சீவக சிந்தாமணி, சூளாமணி, கம்பராமாயணம் போன்ற காப்பியங்கள். திருக்குறள் முதலிய நூல்களிலும் வடமொழிக் கருத்துக்கள் உள என்பர் அறிஞர் பெருமக்கள். மூன்று நான்கு நூற்றாண்டுகளுக்கு முன் வாழ்ந்த தமிழ்ப்புலவர்களிற் பலர் வடமொழி வல்லுநர் களாகவும் இருந்தார்கள். வடமொழி தமிழ் மொழியினைக் காட்டிலும் தொன்மை வாய்ந்தது என்ற காரணத்தினாலோ இலக்கிய வளம் உடையது என்ற காரணத்தினாலோ வட மொழியினை அவர்கள் கற்றார்கள் என்று கூறி விடுவதற்கில்லை. முற்காலத்தில் இந்திய நாட்டில் அறிஞர்கள் தங்களுக்குள்ளே கருத்துக் களைப் பரிமாறிக்கொள்கின்ற மொழியாக அது இருந்தது. இன்று தமிழறிஞர்கள் ஆங்கிலத் தினைக் கற்பது போன்று, அன்று வடமொழி யினைக் கற்றார்கள். பல நூற்றாண்டுகளுக்கு வட மொழியும் தமிழ்மொழியும் நெருங்கிய உறவு கொண்டிருந்ததனால் வடநூற்கருத்துக்கள் தமிழி லும், தமிழர்களுடைய கருத்துக்கள், பண்பாடு முதலியனவும் தமிழ்ச்சொற்களும் வடமொழி யிலும் புகத் தலைப்பட்டன. வடநூல்களிற் காணப்பெறுகின்ற, வடநாட்டு மக்களிடத்திலே காணப்பெறுகின்ற தமிழர்தம் சொற்கள், கருத்துக்கள், பழக்கவழக்கங்கள் ஆகியவற்றை அளவிட்டு அறிதற்கு வடமொழியறிவு தமிழா ராய்ச்சியாளருக்கு வேண்டப்படுகின்ற ஒன்று ஆகும். சென்ற நூற்றாண்டிலும் இந்நூற் றாண்டுத் தொடக்கத்திலும் வாழ்ந்த சில வட

மொழிப் பற்றுடையவர்கள் தமிழ், வடமொழியினின்றும் தோன்றியது என்றும், வடமொழி தேவர்கள் மொழி, தமிழ் பைசாச மொழி என்றும் இது போன்று பல தவருன உண்மைக்கு மாருன கருத்துகளைக் கூறத் தலைப்பட்டனர். அதனல் தமிழ்நாட்டார் வடமொழியினிடத்திலே வெறுப்புக்கொள்ளலாயினர். இப்பொழுது பல அரிய ஆராய்ச்சியின் பயனகத் தமிழ் வடமொழியினைப் போல, அதனைக்காட்டிலும் கூடத் தொன்மை வாய்ந்தது என்றும், இலக்கியச் செல்வம் கொண்ட உயர்தனிச் செம்மொழியென்றும் நிலைநாட்டப் பெற்றுவிட்டது. அதனல் நாம் இனி வடமொழியினிடத்திலே வெறுப்புக் கொள்ள வேண்டியதில்லை. அதனை அதனுடைய தொன்மைக்காகவோ இலக்கிய வளத்திற்காகவோ கற்க வேண்டுமென்று சொல்ல வரவில்லை. விரும்பியவர் கற்கலாம். ஆனல், முந்திய நூற்றுண்டுகளில் தமிழ் வடமொழியினேடு தொடர்பு கொண்டிருந்தமையால் தமிழ்த்துறையில் ஆராய்ச்சியை மேற்கொள்கின்றவர்க்கு வடமொழியறிவு இன்றியமையாததாகின்றது.

பாரதியார் தமிழ் சிறப்புறுவதற்குக் கூறுகின்ற வழிகளிலே ஒன்று, "பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ்மொழியிற் பெயர்த்தல் வேண்டும்" என்பது. மற்றென்று, "திறமான புலமையெனில் பிறநாட்டார் அதை வணக்கம் செய்தல் வேண்டும்" என்பது. இப்பொழுது நம் மொழியில் பல துறைகளில் பல மொழிகளினின்றும் மொழிபெயர்ப்பும் தழுவல்களுமாக நூல்கள் வருவதனைக் காணலாம். ஆனல், அந்த அளவிற்கு நாம் தமிழ் இலக்கியங்களையும் தமிழர்தம் செல்வங்களையும் சிறப்புகளையும் பிற நாட்டார் உணரும் வகையில் அவரவர்தம் மொழியில் மொழி பெயர்த்துக் கொடுத்துள்ளோமா? புறநானூற்றிற்கு மலையாள தெலுங்கு மொழிபெயர்ப்பு உண்டா? இல்லை, ஆங்கில மொழிபெயர்ப்புத்தானுண்டா? எல்லா மொழிகளிலும் மொழிபெயர்க்கவில்லையென்ருலும் சிறந்த நூல்களை நாம் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளோமா? ஒவ்வொரு தமிழறிஞரும் தமிழ் தவிர மற்றெரு இந்திய மொழியினையோ மேனட்டு மொழியினையோ கற்றுத் தேர்ச்சி பெறல் வேண்டும். "நமக்குள்ளே பழங்கதைகள் சொல்வதிலோர் மகிமையில்லை" என்ருர் பாரதியார். தமிழறிஞர்கள் பிற மொழிகளிலே மொழிபெயர்த்தாற்ருன் தமிழ் நூல்களின் உயிர்க் கருத்தைத் தெரிந்து மொழிபெயர்க்க முடியும். பிற மொழியாளர்கள் தமிழ்க் கருத்தைத் தெரிந்து செம்மையாக மொழிபெயர்க்க முடியும் என்று சொல்வதற்கில்லை. பண்டிதமாமணி வடமொழி, தமிழ்மொழி ஆகிய இருமொழிகளிலும் நல்ல புலமையாளர் என்பதனை அவருடைய மொழி பெயர்ப்பு நூல்களுள் ஒன்ருகிய 'மண்ணியல் சிறுதேர்' என்ற நூலிலிருந்து சில எடுத்துக் காட்டுகளின் மூலம் காணலாம்.

வடமொழி மூலத்தில் உள்ள சுலோகங்களையே மொழிபெயர்த்தாலும் தமிழ்மொழி மரபிற்கேற்ப இனிய சந்த ஓட்டத்துடன் செய்யுள்கள் அமைந்துள்ளன. அதற்குக் கீழ்வரும் செய்யுள் எடுத்துக் காட்டாகும்.

"பீலிநிறை வேனில்மயில் போலவுறு பீதி
யாலெனது பக்கலின கன்றுபெயர் கின்றுய்
பாலடவி யுற்றவொரு கோழியினம்
பார்ப்பின்
மாலுறவி ரைந்தெனது மன்னன்வரு-
கின்ருன்.

[அங்கம் : 1. செய் - 17]

உவமைகளின் அடுக்குகளைத் தமிழ்க்கவி யோட்டத்தில் கீழ்க்காணும் செய்யுள்களிற் காணலாம்.

"பாய்தலிற் பூசை யோடலி னிரலை
பற்றுபு சிதைத்தலிற் பருந்து
வாய்மையிற் பொய்யிற் றுயில்பவ னிலையை
மதித்தலி ஞயகி யூர்தல்
ஆய்பிற வுருவோ டுடல்கொளன் மாயை
யயன்மொழி யறிவின்வாக் கிறைவி
ஏய்விளக் கிரவி னுழைவழிப் பல்லி
யிருநிலத் தசுவநீர் நாவாய்"

[மூன்ரும் அங்கம்-செய். 96]

"ஓடலிற் பாம்பு நிற்பி
னுருமலை சுழன்றி யாண்டும்
ஆடலிற் கலுழன் யாரு
மறிவுரு விடத்திற் றங்க
நாடலின் முயலை மொப்பே
னண்ணிய பிறரைப் பற்றிக்
கோடலிற் செந்நா யஞ்சாக்
குணத்தினுன் மடங்க லென்பேன்

[மூன்ரும் அங்கம்: செய். 21]

கீழ்க் குறிக்கப்பெற்றுள்ள செய்யுளைப் படிக்குங்கால் மொழிபெயர்க்கப்பெற்ற செய்யுளாகவே தோன்றவில்லை.

"அந்தகன் பார்வை போலும் ஆதுரன்
வன்மை போலும்
மந்தன துணர்வு போலும் மடியுளான்
சித்தி போலும்

**சிந்தைநைந் தலையப் பெற்ருன் சிறந்தநூற்**
**கல்வி போலும்**
**வந்தவன் பகைவ ரன்பின் மறைந்த**
**ணின்பா னின்றே''**

[முதல் அங்கம், செய்யுள் 47]

முதுபெரும் புலவரவர்களுடைய இருமொழிப் புலமைக்கு மேற்கண்ட செய்யுள்கள் சில எடுத்துக் காட்டுக்களேயாகும். தமிழ்ப் பணி புரிவோரில் ஒருசிலராவது தமிழோடு வேற்று மொழி ஒன்றிலாவது நல்ல புலமை யுடையோராகித் தமிழில் உள்ள சிறந்த இலக்கியங்களைப் பிறிதொரு மொழியில் மொழி பெயர்த்துத் தொண்டாற்றுவது இக்காலத்தில் இன்றியமையாத ஒன்ருகும். மொழிபெயர்ப்புத் துறையில் பண்டிதமணியவர்கள் காட்டிய வழி நாம் பின்பற்ற வேண்டிய வழியாகும்.

ஆளுடை அடிகள் அருளிய "திருவாசகத் திருச்சதகத்துக்கு" கதிர் மணி விளக்கம் எனப் பெயரிய பேர் உரை ஒன்று தம் நுண்மாண் நுழை புலம் தோன்ற யாத்துத் தமிழ் உலகிற்கு-சிறப்பாகச் சைவ உலகிற்கு இனிமையும், எளிமையும், தெளிவும், திந்தமிழ்த் தூய்மையும், செம் பொருள் வாய்மையும் அமைய அளித்துள்ளார்கள்.

இவ்வுரை, அடிகளின் அருட்பாக்களைப் பலகால் ஓதிப் பயன் துய்த்த பண்பால் நிரம்பி வழியும் பால் போன்றது. உண்மை கண்டு உரைக்கும் திண்மையது; வைச சித்தாந்த மெய்ந்நூல் உணர்ச்சிக்கு வரம்பாயது; ஏனைத் திருமுறைகளுக்கு உரை காண அவாவும் ஒண்மை யர்க்கு நூல் (இலக்கண) வண்மையது. அன்பைப் பெருக்கி ஆருயிர்க் கண் இறவா இன்பை நிறைக்கும் எழிலது. யாவரும் இடையருது ஓதியுய்யும் வழியது.

**செந்தமிழ்ச் செல்வி**
*சிலம்பு-22 பரல்-4*
*மதிப்புரைத் திரட்டு (பக்கம் 44-45)*

# நான் அறிந்த நல்லாசிரியர் பண்டிதமணி

**பேராசிரியை த.கி. நாகாம்பாள், எம். ஏ.,**
*தமிழ்த்துறைத் தலைவர், மகாராணியார் கல்லூரி, பெங்களூர்.*

வையகம் போற்றும் தமிழ் மொழி தழைத்த தமிழகத்தில் சங்கமிருந்து தமிழ் வளர்த்த மாபெரும் புலவர்கள் பலராவர். ஒல்காப் புகழ் பெற்ற தொல்காப்பியரும், நெற்றிக்கண் திறந்து கண்டும் கலங்காத நக்கீரரும், உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியரும், வான்மறை வழங்கிய தெய்வப்புலவர் திருவள்ளுவரும், அறிவுக் கடவுளாம் முருகப்பெருமானின் திருவருள்பெற்ற ஒளவைப் பெருமாட்டியும் தோன்றிய தமிழ் நாட்டில், அன்று தொட்டு இன்று வரை, பெரும்புகழ் நிலை நாட்டி, பூதவுடல் மறையினும் புகழுடல் பெற்று நிலைத்து நிற்கும் புலவர் பெருமக்கள் பல்லோராவர்.

மண்ணுலகையாண்ட மணிமுடி மன்னர், கவியுலகாண்ட கவின்பெறு கலைஞர், புலன் கொண்டுழுத புலவர், பாட்டிசைத்து, பரமனின் அருள் பெற்றுத் திகழ்ந்த பாவலர், நாவசைத்து நல்வாழ்வின் வளங்காட்டிய நாவலர், கருத்துக்கு விருந்தாகக் கவிதை பாடி, கானக் குயிலெனக் களித்து வாழ்ந்தவர் தமிழ் மொழியில் எண்ணற்றோர். இஞ்ஞாலம் நல்கும் அழகைக் கண்டு, தம் கூரிய மதித்திறத்தால் அவற்றின் நுட்பம் ஆராய்ந்து, இன்புற்றுத் தாம் கண்ட இன்பம் இவ்வையகமும் காணட்டும் என்று மனமுவந்து, சொற்சித்திரத்தால் வடித்து வழங்கியவரே நம் தம் தலைசிறந்த கவிஞர்களும் கலைஞர்களும். பாம்பின் கால் பாம்பறியும் என்பது போல், நல்லாரை நல்லவரே விரும்புவதும், கற்றாரைக் கற்றாரே காமுறுவதும் இயற்கை. இத்தகு நல்லவர் நாட்டின் நல்லறிவை வளப்படுத்துவதோடு சிறப்பினைச் சேர்ப்பவருமாவர். இவரே, இறந்தும் இறவாது என்றும் வாழ்பவர். இவர்தம் பெருமையே பெருமை.

இத்தகு பெரும்புலவர் வரிசையில், தம் குலம் தழைக்க, நாடு செழிக்க, மொழி சிறக்க, இருபதாம் நூற்றாண்டில் மணிமுத்தாறு அணைத்தோடும் மகிபாலன்பட்டியில் பிறந்து வளர்ந்தவர் நமது முதுபெரும் புலவர், நல்லாசிரியர், பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் அவர்கள். தமிழ் நாட்டில் கோயில் என்றால், மாபெரும் சோழ மன்னன் இராசராசன் கட்டிய, தஞ்சை பெரிய கோயில் ஒன்றையே குறிக்கும். அம்பலம் என்றால், ஆண்டவன் ஆனந்தக் கூத்தாடும் சிற்றம்பலம் ஒன்றே. அது போல, இராஜா சர் என்றால், அறிவுப் பெட்டகம், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தைத் தந்த புரவலர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களையே குறிப்பதுபோல் 'பண்டிதமணி என்றால், வடமொழி தென்மொழி இரண்டிலும் பாண்டித்யம் பெற்றுப் படித்தவரும், பார்ப்பனரும் வியக்க வாழ்ந்த பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் அவர்கள் ஒருவரையே குறித்து வழங்கி வருவது இன்றும் கண்கூடு.

இவ்வளவு சிறந்த நல்லாசிரியரிடத்துத் தமிழ்க் கல்வி கற்கும் தனிப்பெரும் சிறப்பை நானும் என்னுடன் பயின்ற ஏழு உடன்பிறவாச் சகோதரர்களும் 1941-ஆம் ஆண்டு முதல் 1944-ஆம் ஆண்டு வரை அழகுறப்பெற்றது யாம் பெற்ற பேறாகும். மண்ணின் நலம் விளையும் பயிரிலும், மரத்தின் நலம் மலர்ந்து கனியும் கனியினும் காண்பது போல், அவரது மாணவர் பரம்பரை, இமயம் தொட்டு ஈழம் வரை எங்கும், ஏன், மலேயா போன்ற அயல் நாடுகளிலும் மதி நலம் சிறக்க, மாண்புறு பதவிகளை வகித்து மன வமைதியோடு வாழ்ந்து வருவதை மனமுவந்து காண்பவர் அறிவார். நானிலம் வியக்க நல்லாசிரியராக விளங்கிய இவரைப் பற்றி நானறிந்த சில செய்திகளைக் கூறி மனம் மகிழ்கிறேன்.

நான் படித்த காலத்தில் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் தென்னாட்டுக் "கேம்பிரிட்ஜ்" என்று சொல்லத்தக்கதாய், தமிழ் அறிவுக்கும் பண்பாட்டிற்கும் உறைவிடமாய், தமிழ் பயிலும் மாணவர்க்குத் தனியிடமாய், தமிழ்த்தாய் அரங்கேறியிருப்ப, துணைவேந்தர், மாணவர் தந்தை, சர் கே. வி. ரெட்டி அவர்களின் ஆட்சியில் அழகு பெற அலுவலாற்றி வந்தது. அக்காலத் தமிழ்த்துறைத் தலைவர்கள் பொறுமை நலம் கனிந்த உத்தமப் புலவர் திரு. கா. சு. பிள்ளை அவர்களும், மாணவர் போற்றும் மாட்சிமை

மிக்க பண்டிதமணி அவர்களுமாவர். தமிழ்ப் பயிர் தழைக்க, இலக்கிய மணம் கமழ, இலக்கணச் சுவையூற, நீதி சிறக்கக் கருத்துக்கு விருந்து அளிக்கும் கற்பனைத்திறம் ஓங்க, உயர்ந்த உள்ளத் தோடும் கவரும் சொல் நயத்தோடும் மாணவர் மனத்தில் மழையெனப் பொழிந்து, அவரைத் தமரெனப் போற்றி வளர்த்த பெருமை இவருடையதாகும்.

முதுபெரும் புலவர், பள்ளியில் படிக்காதவர். தம் சொந்த உழைப்பால் வடமொழி, தென் மொழி இரண்டிலும் பாண்டித்தியம் பெற்றவர்; பட்டமேதும் பெறுதவர். பல்லாயிரம் மாணவர்க் குப் பட்டம் பெற வழி காட்டியும், பட்டம் வழங்கி யும் சிறப்பித்தவர். நுண்மாண் நுழைபுலம் அறிந்தவர். புலன்கொண்டாராயும் புலனறி வாளர். இவர்தம் நுட்பங்கண்டு நல்லாசிரிய ராக்கி நன்மை செய்த புரவலர் இராஜா சர் அவர்களாவர். பண்டிதமணி அவர்கள் கம்பீரத் தோற்றப் பொலிவும், கருணை வடியும் உள்ளப் பொலிவும் உடையவர். ஆதரவு மிக்க அவரது இன்முகத்தில் எப்பொழுதும் புன்முறுவல் தவழும். பரந்த நெற்றியில் நல்லறிவு பிரகாசிக் கும். மணி போன்ற கண்களில் பண்பு நிறைந் திருக்கும். அகத்தில் அன்பு ஊற்றெடுக்கும் சொல்லில் நகைச்சுவை ததும்பும். இவ்வளவும் மாணவர் மனத்தைக் கவரும். இவ்வள விருந்தும் அவரது நடக்கவியலாத, நலிவுற்ற கால், மாணவர் கழிவிரக்கத்தையும் ஈர்த்ததால், களங்கமற்ற குழந்தை மனங்கொண்ட அவரை நாற்காலியில் வைத்து, எங்கும் எடுத்துச் செல்ல என்றுமே தயங்காது உதவவும், அவருக் குப் பணி செய்ய முன்வந்த மாணவர் சமுதாயம் குருகுலப் பண்புடன் அவரிடம் பழகி வந்தமை, இன்றும் அவர் மாண்புற்று வாழ வாழ்த்தாய் அமைந்தது போலும். வகுப்புக்கு ஆசிரியர் குறித்த வேளையில் வந்துவிடுவார். புன்முறுவல் பூத்த முகத்துடன் பாடம் துவங்கும். ஆசிரியரது ஆழ்ந்த புலமையும், அழகிய சொல்வன்மையும், கருத்தின் விளக்கமும் மாணவரை மயங்கச் செய்யும். செந்தமிழ் அறிவு, இலக்கிய இனிமை, இலக்கண மரபு, சொற்சுவை, பொருள் நயம் கனியும் கற்பனைத் திறம்—இவற்றை எளிமையாக எடுத்தாளும் சிறப்பு அவருக்கே உரியதாக இருந்த ஒன்று. சங்க இலக்கியக் கடலில் நீந்தித் திளைத்து, கிடைத்தற்கரிய நன்முத்துக்களை நல முற ஆய்ந்து, அள்ளி வழங்குவதில் அவருக்கு அவரே ஈடாக விளங்கினர். அகப்பொருளை அழகுற விளக்கிக் கூறுவதில் பண்டிதமணிக்கு ஒப்பாரும் மிக்காரும் இலரெனவே கூறலாம்.

ஆங்கிலம் கற்றவர்தான் அழகாக, நாகரிகமாகப் பேச இயலும் என்று எண்ணியிருந்த அந்த நாட்களில், வடமொழி தென்மொழிப் புலவரான, பள்ளியிற் பயிலாத, பட்டம் பெறுத பண்டிதரான, நம் புலவர் பெருமான் நனி நாகரி கத்துடன், ஆண்களும் பெண்களும் உள்ள வகுப்பில், அகப்பொருளை அழகுற, கேட்பவர் ஆர்வம் பெற, அணுஅணுவாக விளக்கிச் சொல் லும் ஆற்றல் பெற்றிருந்தார். அவர் சொல் நயங் கேட்ட மாணவர், மாலை வேளையில் கோவிலுக் கருகில், கலைக்கோயிலாக இருந்த அவரது இல்லத்திற்கும் சென்று, இரவு 9 மணி வரை பாடங் கேட்டு வருவது வழக்கம். அவரது சொல் நயம் கேட்பவர் மனம் இனிக்கச் செய்யும். பாடஞ்சொல்லும் போது செவியினிக்கும். தமிழோசை தனிப்பட்டு நிற்கும், இலக்கணம் இலங்கும், சுவை ததும்பும், கற்பனை மிளிரும், கருத்து விளங்கும், கலை நடம் புரியும். சிந்தைக்கு விருந்தளிக்கும் கருத்துக்களை, அழகிய சொல் லோவியமாக்கி, ஆழமும் காட்டி, ஆர்வமும் ஊட்டி, ஐயமும் போக்கி, அமைதியும் நிலவும்படி அன்புடன் போதிப்பார், அருள் நிரம்பிய ஆசிரியர் பண்டிதமணி அவர்கள்.

செல்வத்தாற்சிறந்த செட்டியார்கள் செழித்த இடத்தில், சொல்லால் சிறந்த செட்டியாராக விளங்கினர் இவர். புரவலர் மலிந்த குடியில் புலவராகத் திகழ்ந்தவர் இவர். கலையொளி வீசிய தண்டமிழ் ஆசான் பண்டிதமணி, குலம் தழைக்கத் தோன்றிய குரிசில். பரம்பரை அந் தணரும் பார்த்து வியக்க வடமொழிப் புலமை பெற்று, அரும்பெரும் வடமொழி நூல்களைத் தமிழில் பெயர்த்துதவியமை தமிழ் நாடு பெற்ற பேருகும். (உதயண சரிதம், சுலோசனை, மண் ணியல் சிறுதேர், சுக்கிர நீதி — பெரும்புகழ் வாய்ந்தவை) இருமொழியிலும் இணையிலாப் பெரும்புலவராகிய இவர் ஆற்றியுள்ள பேச்சுக் களும், தலைமையுரைகளும், எழுதிய எழுத்துக் களும் என்றென்றும் அழியாதவை. மதுரைத் தமிழ்ச்சங்கத் தொண்டிலும், சன்மார்க்க சபை வளர்ச்சியிலும், தன் சொந்த ஊர் வளர்ச்சியிலும் தனிப்பெரும் சேவை செய்துதவியவர். இலங்கை முதலிய இடங்களுக்குச் சென்று இனிய தமிழ் மணம் பரப்பியவர். தொண் டுள்ளங்கொண்ட இவருக்கு இலக்கண இலக் கியப் புலவர் பெருமக்கள் தொடர்பும், நட்பும், பாராட்டும் மிக்கிருந்தன. இவரது புகழ் மலேயா போன்ற நாடுகளிலும் பரவியிருந்ததற்கு ஓர் எடுத்துக் காட்டு. 1957-58-ஆம் ஆண்டில் நான் சிங்கைத் தமிழர் தமிழ்விழாவில் பங்கு கொண்ட

போது, ஈப்போ நகரத்தில் சொற்பொழிவாற்ற வாய்ப்பிருந்தது. அங்கு என் பேச்சைக் கேட்ட முதியவர் ஒருவர், என்னுடைய பேச்சில் பண்டிதமணியவர்களின் சொல் நடை இருப்ப தாகக் கூறிப் பாராட்டினர். அவரது மாணவி என்று நான் கூறுங்கால் என் பெருமை எனக்கே வியப்பூட்டியதென்ருல் என்னைக் கண்ட அவர்கள் அடைந்த மகிழ்ச்சி அளவிடற்கரியதாயிருந்தது. பிணங்கு நகரிலும், இரப்பர்த் தோட்டங்களிலும் வாழும் தமிழரும், தமிழ்ச் செட்டியார் சமூகத் தினரும் பண்டிதமணியைப் பாராட்டிப் புகழாத வர் இல்லையெனலாம்.

இத்தகு கல்வி நலங்கனிந்து, பண்புடன் மாணவர் பாராட்ட நல்லாசிரியராக விளங்கிய முதுபெரும் புலவர்க்கு மனைவாழ்க்கையும் மாண்புற அமைந்திருந்தது. கற்பு நலம் குன்ருத மனைவிளக்காக அமைந்த மனைவி மீனுட்சி ஆச்சி யார் அவர்கள், என் போன்ற மாணவ மாணவி யர்க்குத் தாய் போன்று விருந்தோம்பி உபசரித்து நல்லன்னையாக விளங்கியது மட்டுமல்லாமல், சிறந்த வாழ்க்கைத் துணைவியாராகி, பண்டிதமணி அவர்கள் பண்டிதராகவும், மணியென யொளி பெறவும் காரணராயிருந்துதவியவர்என்ருல்மிகை யாகாது. இவ்வம்மையாரின் அருள் நலத்தால் தான் இரவு வகுப்புக்களை இடையூறு இல்லாது வீட்டுத் திண்ணையில் நடத்தினர் நல்லாசிரியர் அவர்கள். இவரிடம் பயின்ற பாடப்பகுதிகளை இன்றும் எடுத்தவுடன் பொருள் விளக்கிப் போதிக்க இயலுவதும், இவரிடம் பாடங்கேட்காத பகுதிகளை உரையைப் படிக்காது பாடஞ்சொல்ல இயலுவதில்லையென்ருல், இவர் போதித்த வகை தெள்ளென விளங்குகிறதல்லவா ? இன்றைய இளைஞர் சமுதாயம் இவர் போன்ற இனிய புலவர் களையும், நல்லாசிரியர்களையும் இழந்துவிடக் கூடாது. இருப்பவர்களையுணர்ந்து போற்றி, அவர் தம் நல்லறிவை தம்மறிவாக்கிக்கொள்வது கடமையல்லவா ?

பழைய புலவர்களை மனமார வாழ்த்தியும், அவர் வழி நின்றும், அவர்தம் நினைவு நாட்களை நன்மை பெற விழாவாக்கியும், அவர் வழிவழி வாழ நாமும் நல்வாழ்வு வாழ வழி வகுப்பதும் நம் கடமையன்ருே ?

———

## பெண் கல்வி

இனி, நம் பெண் மக்கள் விஷயமாகக் கவனிக்க வேண்டியவை களுஞ்சிலவுள. எல்லாக் கற்பிலக்கணங்களும் நிரம்பப் பெற்ற நம் பெண் மக்களுட் சிலர் நம் சமயாசாரப்படி கிருகத்திற் செய்ய வேண்டிய நித்திய காரியங்களைச் செவ்வையாகச் செய்தலிற் சிறிது அசிரத்தை கொள்ளுகின்றனர். அதனையும், குண வகைகளின் மாறு பட்டிருப்பின் அவற்றையும் திருத்தலும் நித்திய ஒழுக்கங்களைக் கற்பித்து அவ்வழி நிறுத்தலும் அவரவர் புருடர்களுக்குரிய கடனுகும். இவற்றிற்கெல்லாம் நம் பெண்மக்களுங் கல்வியுடைய ராயிருப்பின் மிக நலமாகும். பண்டைக் காலத்தில் ஔவையார், பூதப்பாண்டியன் றேவியார், வரதுங்கராம பாண்டியன் தேவி முதலிய பெண் மக்கள் இலக்கிய இலக்கண வரம்பு கண்ட பெரும் பண்டிதைகளாக விளங்கினரென்பது அன்னூரியற்றிய அருமை நூல்களானுஞ் செய்யுட் களானும் விளங்குகின்றது. பெண்மக்கள் கல்வியுடையவராயிருப் பின் நிலை பிறழ்ந்து கெடுவர் என்று கூறுவாருஞ்சிலருளர். கல்வியில் லாத பெண்கள் சிலர் முறை பிறழ்ந்து கெடுதற்கு அவர் கூறுங்காரண மென்னையோ ? கல்வியுடையவராயிருப்பின் கூடிய வரை தம் மதிப்பைப் பேணிக் கொள்வதிலவர் கருத்துச் செல்லுமென்பதிலையமின்று. இப் பெண் கல்வி விடயமாக இக்காலத்து நாகரிக மக்கள் பலர் பல பத்திரிகை வாயிலாகவும் புத்தக வாயிலாகவும் வெளியிட்டு வருகின்றன ராதலின் யானிது விஷயமாக விரிக்காது ஒன்று கூறி முடிக்கின்றேன். அஃதாவது நம் பெண் மக்களைச் சிறு பருவத்தில் தந்தைமார்களும் பின் அவரவர் புருடர்களும் கல்வியானும் பழக்கத்தானும் சமயாசார நியமத்திற் சிரத்தையுடையராகச் செய்வதேயாம்.

—பண்டிதமணி கதிரேசன் செட்டியார்
**"நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் சீர்திருத்தம்"**, மகிபாலன்பாட்டி, *1911*

# சொக்கலிங்க ஐயாவும் பண்டிதமணியும்

(முத்துப்பட்டினம் மெ. சு. தி. தண்ணீர்மலையான் செட்டியார்)

செட்டிநாட்டு வட்டாரத்தில் அரை நூற்றுண்டுக்கு முன் ஒரு நகரத்தார் புலவர் மணி-சைவசித்தாந்தப் பெருமணி காரைக்குடியில் தோலா நல்லிசையோடு தோன்றினர். அவர்களைச் சொக்கலிங்க "ஐயா" என அழைப்பர். தோத்திர-சாத்திர நூல்களில் துறை போகியவர். ஆறுமுக நாவலர்-வன்றெண்டர்-மெய்யப்ப சாமிகள் போன்றவர்களிடம் பாடங்கேட்டவர்கள். அவர்களிடம் காரைக்குடியில் தமிழ் அறிவு பெற விரும்பியோர் அணுகி, பலர் பாடங்கேட்டனர். அவருள் நாவன்ன முருகப்ப செட்டியார், உ. ராம. இராமசாமி செட்டியார், மெ. மெ. பெரி. சம்பந்தம் செட்டியார், முத்தவெ. சொனு, கா. கா. அழ. காளையப்ப செட்டியார், வித்துவான் அரு. சோமானு, சேவு. மெய்யப்ப செட்டியார், சொ. திருநாவுக்கரசு செட்டியார், நான் ஆகியோர் முக்கியமானவர்கள். மாலை வேளையில் அறுபத்துமூவர் குருபூசை மடத்தில் பாடம் கேட்பது வழக்கம். ஒரு நாள் மாலை 3 மணியிருக்கும். ஒரு மாட்டு வண்டி வந்து மடத்து வாசலில் நின்றது. அதில் இருந்து ஒருவர் இறங்கினர். நடுவயது. சிவப்பு நிறம். கையில் ஒரு கம்பு. தார்ப்பாச்சு கட்டியிருந்தார். முகத்தில் களை. முறுவல் பூத்த முகம். உள்ளே அவர் வந்தார். நாங்கள் வரவேற்றேம். யாரெனத் தெரியாமல் ஒருவர் முகத்தை ஒருவர் நோக்கினேம். வந்தவர் தாமே இனிய மொழியில் பேசினர். மகிபாலன்பட்டி மு. கதிரேசன் எனத் தம்மை அறிமுகப்படுத்திக்கொண்டார்.

அப்பொழுதே அவர் அரிய நூல்களில் தேர்ச்சி மிக்க பேச்சாளர்-எழுத்தாளர் என நாங்கள் கேள்விப்பட்டதுண்டு. அவர் வரவின் காரணம் தெரியாமல் நின்றேம். பண்டிதமணியும் தாம் "ஐயா" அவர்களைக் காண அவாவுவதாகக் கூறி ஒரு சீட்டுக் கவி கொடுத்தார்கள். அதை "ஐயா"விடம் சேர்த்தோம். சிறிது தாமதித்து "ஐயா" வெளியில் வந்து பண்டிதமணியை வரவேற்றூர்கள். இருவரும் தமிழ் நூல்களைப் பற்றிச் சிறிது பேசினர்.

"சேர்ந்தறியாக் கையானை எங்குஞ் செறிந்தானை" என்ற திருவம்மானைப் பகுதிக்குப் பொருள் கேட்டார்கள். அதற்குப் பண்டிதமணி, "இறைவன் தாய் தந்தை இல்லாதவர், அவர் யாரையும் வணங்க வேண்டியதில்லை" என்றூர்கள். "ஐயா" அவர்கள் அதற்கு மேல் சில தத்துவப் பொருள்களைக் கூறி மேலும் விளக்கினர்கள். பண்டித மணியவர்கள், தமக்குச் சாத்திர நூல்களைக் கற்பிக்க வேண்டுமெனவும் தம்மை மாணவராக ஏற்க வேண்டுமெனவும் கேட்டுக்கொண்டனர்.

ஐயா அவர்கள், "அதுசரி, தாங்களுக்குச் சங்க நூல்களிலும், சிந்தாமணியிலும் தேர்ச்சி உண்டு எனத் தெரிகிறேன். தங்கள் பணி, இனி சைவப்பணியாக இருக்க வேண்டும் என்றூர்கள். பண்டிதமணி, "அதற்குத்தானே பல நாள் எண்ணி வந்திருக்கிறேன். கற்பியுங்கள்" என்றனர். அதன் பின்பு பண்டிதமணியவர்கள் 2 மாதம் காரைக்குடியில் அன்பர்கள் இல்லங்களில் தங்கி ஐயாவிடம் சைவ சமய சாத்திரங்களைப் பாடங்கேட்டுக் கொண்டார்கள்.

இதனல் பண்டிதமணியின் அறிவு வேட்கை தெரிய வரும். தேர்ந்த துறை போகியவர்களிடம்தான் பாடங்கேட்பது என்ற அவர்கள் கொள்கையும் அறிய வரும். அறிவு பெறுவதின் பொருட்டு ஏற்படும் துன்பங்களை அவர்கள் பொருட்படுத்துவதில்லை என்பதையும் அறியலாம். சமயப்பணிக்குப் பண்டிதமணி ஆட்படக் காரணமாய் இருந்தவர்கள் காரைக்குடி சொக்கலிங்க ஐயா என்பதைத் தமிழ் உலகம் தெரிந்துகொள்ள வேண்டும். திருவசாக உரையும் இவர்கள் தொடர்பால் எழுந்ததே.

# திருச்சதக உரையும் சைவ சித்தாந்தமும்

புலவர் மணி — சித்தாந்த வித்தகர் — முரு. பழ. இரத்தினம் செட்டியார்

ஐந்து ஆண்டுகளுக்குமுன் சென்னையில் நடைபெற்ற சைவசித்தாந்த மாநாட்டிற்குச்சென்றிருந்தேன். அங்கே பண்டிதமணி அவர்கள் எழுதியுள்ள "திருவாசகம் - திருச்சதக உரை" பற்றிய பேச்செழுந்தது. "செட்டியார் அவர்கள் இலக்கிய நயம் செறிய உரை எழுதியுள்ளார்கள்; ஆனால் சித்தாந்த சாத்திரக் கருத்துக்கள் அவ்வுரையில் நன்கு இடம் பெறவில்லை" எனச் சிலர் கூறினர். "பாட்டுத் தாங்காத அளவுக்குச் சிந்தாந்தக் கருத்துக்களை எழுதித் தம் சித்தாந்த நூற் புலமையைச் செட்டியாரவர்கள் வெளிப்படுத்திக் கொள்ளவில்லை என்பது உண்மையே; ஆனால் வேண்டும் அளவுக்குச் சித்தாந்தக் கருத்துக்களை மிகத் தெளிவாகவும் நயமாகவும் அவர்கள் எழுதியிருக்கிறார்கள் என்பதை நீங்கள் அறிய வேண்டும்", எனக்கூறித் திருச்சதக உரையில் அவர்கள் எழுதியுள்ள சில பகுதிகளைச் சுட்டிக் காட்டினேன். அதன் பின்னர் மறுப்புக் குரல் எழுப்பிய அன்பர்கள் உள்ளம் உணர்ந்து அவ்வுரையைப் பாராட்டினர்.

பண்டிதமணி அவர்கள் திருவாசகத்திற்கு உரை எழுத வேண்டும் என இளமைப்பருவம் தொட்டே விரும்பினார்கள். ஆனால் தம் முதுமைப் பருவத்தில்தான் உரை எழுத முற்பட்டார்கள். இதனால் தான் அவர்கள் உரை முற்றுப் பெறாமல் போய்விட்டது. "திருவாசகம் முதல் நான்கு அகவல்களுக்கு மறைமலை அடிகள் எழுதியுள்ள உரை போதுமானது; ஏனைய பகுதிகளுக்கு இதுவரை நல்ல உரை வெளிவரவில்லை; எனவே திருச்சதகத்திலிருந்து துவங்குகிறேன்" எனப் பண்டிதமணி அவர்கள் கூறினார்கள். "நல்ல உரையாக இருப்பின் பண்டிதமணி அவர்கள் பரந்த உள்ளத்தோடு பாராட்டும் தன்மையுடையவர்கள்" என்பதற்குத் திருவாசகம் முதல் நான்கு அகவல்களுக்கு அவர்கள் உரை எழுதாமல் விடுத்ததே சிறந்த எடுத்துக் காட்டாகும். திருவாசகம்-திருச்சதகம்-நீத்தல் விண்ணப்பம் - திருவெம்பாவை ஆகிய மூன்றிற்கும் உரை எழுதி முடிப்பதற்குள் உடல் நலம் பெரிதும் குன்றிப் போய்விட்டது. அப்புறம் அவர்களால் எழுத முடியவில்லை. சில ஆண்டுகளுக்குப் பின் இறைவன் திருவடி நீழலை அடைந்தார்கள்.

திருச்சதகத்திற்குப் பண்டிதமணி அவர்கள் எழுதியுள்ள உரையில் இலக்கிய நயம் மிகுதி என்பதைக் கூற வேண்டுவதில்லை. ஆனால் சித்தாந்தக் கருத்துக்களையும் அவர்கள் திறம்பட விளக்கியுள்ளார்கள் என்பதற்குப் பல இடங்களைச் சுட்டிக் காட்டலாம். ஈண்டு அவற்றுள் சிலவற்றைக் கவனிப்போம்.

திருச்சதகம் 3-ஆம் பாடல், "உத்தமன் அத்தன் உடையான் அடியே நினைந்துருகி" எனத் துவங்குகிறது. இதில் வரும் "அத்தன்" என்பதற்குத் தந்தை என்று பொருள். "தந்தை" என்ற அளவில் எழுதி இதனை விட்டுவிடலாம். அல்லது, "அப்பன் நீ அம்மை நீ" என்னும் அப்பர் வாக்கை மேற்கோள் காட்டி அமையலாம். பண்டிதமணி அவர்கள் இவ்விடத்தில் சைவ சித்தாந்த உணர்வோடு பின்வருமாறு உரை எழுதுகிறார்கள்.

"ஓர் அரசன் புதல்வன் வேடர் சூழலிற்பட்டுத் தன் இயல்பை அறியாமல் வளர்ந்தானாக, நல்லூழ் வயத்தால் "நீ வேட்டுவன் மகன் அல்லை; உண்மையில் என் புதல்வன் ஆவாய்" என அறிவித்து, அவ்வரசன் அப்புதல்வற்குத் தன் அரசுரிமைச் செல்வத்தை நல்குதல் போல, அடிகள் ஐம்புலமாகிய வேடர் சூழலிற்பட்டுத் தம் இயல்பு அறியாமல் இருந்த நிலையில் கட்டறுக்கும் பருவம் உற்றமையால், "நீ புலன் நுகர் இன்பம் பெறுதற்கு உரியை அல்லை; உண்மையில் பேரின்பம் நுகர்தற்குரிய என் புதல்வனாவாய்" என மெய்யுணர்வால் அறிவித்து இறைவன் தன் பேரின்பப் பெருஞ் செல்வத்தை அருளிக் காத்தமை தோன்ற, "அத்தன்" என்றார்."

சிவஞான சித்தியாரில் வரும், "மன்னவன் தன் மகன் வேடரிடத்தே மயங்கி" என்னும் திருப்பாடலை உளம் கொண்டு குரு நிலையே உயிர்க்கு இறைவன் உண்மையில் தந்தை ஆகும் நிலை என இங்கே பண்டிதமணி அவர்கள் தெளிவு செய்யும் நயம் சிந்திக்கத் தக்கதாகும். உலகியல் தந்தை, உயிரின் தூய உடல் தோன்றுவதற்குக் காரணன் ஆகின்றான். இது போல இறைவன் உயிரின்

தோற்றத்திற்குக் காரணன் ஆக முடியாது. சைவ சித்தாந்தம் உயிர் யாராலும் படைக்கப்படாத என்றும் உள்ள அநாதி நித்தியப் பொருள் என்று கூறுகிறது. இறைவனைப் போல உயிரும் அநாதி யாதலால், உயிரின் தோற்றத்திற்கு இறைவன் காரணன் ஆகான் என உணர்ந்த உரையாசிரியர்கள் காரண, சூக்கும உடல் தோன்றுவதற்கு இறைவன் காரணன் என்று கூறி, அந்த வகையில் உயிர்க்கு இறைவன் தந்தை ஆவான் என விளக்கம் கூறி வந்தனர். ஆனால் உயிர்க்கு நேரடியாகத் தந்தை ஆகும் நிலை ஒன்று உண்டு; அஃதே அவன் தன் ஞானப் பெரும் செல்வத்தை உயிர்க்குநல்கும் குருநிலையாகும். பேரின்பப் பேறு உயிர்க்கே அன்றி உடலுக்கு அன்று. இதனால் குருநிலையே தந்தைநிலை என்னும் உண்மையைச்சித்தாந்தசாத்திரத் துணைகொண்டு பண்டிதமணி அவர்கள் விளக்கம் செய்திருக்கிறார்கள். திருச்சதகம் 68-ஆம் பாடலில் "ஒப்பில் அப்பனே" என வரும் தொடர்க்கு உரை எழுதும் போது, "உடற்காப்புச் செய்யும் அவ்வளவில் ஒழியும் உலகியல் தந்தைபோலாது, ஞானநெறியை உபதேசித்து உயிர்க்காப்புச் செய்யும் ஞானாசிரியனும் ஆவான் என்பது தோன்ற, "ஒப்பில் அப்பனே" என்றார்" என மேலும் அவர்கள் இதனைத் தெளிவுபடுத்தியிருப்பதைக் காணலாம்.

திருச்சதகம் 22-ஆம் பாட்டின் ஈற்றடி, "முனைவனே முறையோ நான் ஆனவாறு, முடிவறியேன் முதல் அந்தம் ஆயினானே" என்பதாகும். இதில், "முதல் அந்தம் ஆயினான்" என்பதற்குத் "தோற்றத்திற்கும் இறுதிக்கும் காரணன் ஆனவனே" என்றே பலர் உரை எழுதியுள்ளனர். பண்டிதமணி அவர்களுக்கு, "அந்தம் ஆதி என்மனார் புலவர்" என்னும் சிவஞான போத முதற் சூத்திர ஈற்றடி நினைவுக்கு வந்துவிட்டது. "அந்தத்தைச் செய்யும் முதற்பொருள் ஆனவனே"—"சங்கார காரணனாகிய முதலையே முதலாக உடைத்து இவ்வுலகம்" என்னும் கருத்தினை உளம் கொண்டு, பின்வருமாறு அவர்கள் விளக்கம் எழுதியிருக்கிறார்கள் :—

"உலகம் ஒடுங்குவதற்கு ஏதுவாய் நின்ற தன்னிடத்தில் நின்றே மீளத்தோன்றுதலின், அழித்தலைச் செய்யும் மகா சங்கார காரணனாகிய இறைவனே முதற்பொருள் ஆவான் என்னும் பொருள் தோன்ற, "முதல் அந்தம் ஆயினானே" என்றார்."

திருச்சதகம் 43-ஆம் பாட்டில், "காலமே உனை என்றுகொல் காண்பதே" என வரும் அடிக்குப் பண்டிதமணி அவர்கள் கூறும் விளக்கம் வருமாறு :—

"எல்லாத் தத்துவங்களும் காரியப்பட்டுத் தோன்றுதவற்கும் ஒடுங்குவதற்கும் காரணமாக உள்ளது காலதத்துவம். காலதத்துவம் ஆன்மாக்களுக்குத் தொழில், அறிவு, இச்சைகளை முறையே விளக்கி உபகரிக்கும் கலை, வித்தை, அராகம் என்னும் வித்தியா தத்துவங்களையும் தன்னுள் அடக்கி மேல் நிற்பதாகலானும் பேரூழிக் காலத்து எல்லாம் ஒடுங்கிய ஞான்று இறைவன் ஒருவனே அக்காலத்தின் இறுதியில் விளங்குபவன் ஆதலானும் அக்காலத்தோடு ஒற்றுமைப்படுத்து "காலமே" என்று விளிக்கப்பட்டுள்ளான். உண்மையில் காலத்தையும் கடந்த தனிப் பொருளாக நிற்றலின், இறைவன் கால காலன் ஆவான். ஆன்மதத்துவங்களுக்குக் காலம் இறுதியாக உள்ளது ஆகலின், அத்தத்துவங்களானய உடம்போடு கூடிய உயிர்களின் இயல்பு நோக்கி, இறைவனைக் "காலமே" என்றார். மேல், "கழிதரு காலமுமாய் அவை காத்தெம்மைக் காப்பவனே" என்று கூறியதன்கண்ணும் இவ்வுண்மை காண்க. இனி, அசுத்தமாயா தத்துவம் ஆகிய கால தத்துவத்திற்குச் சுத்தமாயா தத்துவம் ஆகிய காலம் காரணம் ஆகலானும் அது சிவ தத்துவங்களின் அணிமையில் உண்மையானும் அது பற்றிக் "காலமே" என்றார் எனினும் ஆம்".

ஈண்டு, "அசுத்தமாயா தத்துவம் ஆகிய கால தத்துவத்திற்குச் சுத்தமாயா தத்துவம் ஆகிய காலம் காரணம்" எனப் பண்டிதமணி அவர்கள் கூறுவதற்கு ஆதாரம் சிவஞான பாடியத்தில் சுத்த காலம்" என ஒன்று உண்டு என்றும், அஃதே அசுத்தமாயா தத்துவமாகிய காலத்திற்குக் காரணம் என்றும் சிவஞான சுவாமிகள் எழுதியிருப்பதே ஆகும்.

திருச்சதகம் 44-ஆம் பாடல், "காணலாம் பரமே" என்பதாகும். "காணலாம் பரமே—சிவஞானத்தால் காண்டற்கு உரியதாகும். பரம்பொருளே" எனப் பண்டிதமணி அவர்கள் உரை எழுதிப் பின்வருமாறு விளக்கம் கூறுகிறார்கள் :—

ஊனக்கண்பாசம் உணராப்பதியை, ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி" என்னும் சிவஞான போதச் சூத்திரத்தாலும் அதன் விளக்கம் ஆகிய, "பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் பார்ப்பறிய பரம்பரனைப் பதி ஞானத்தாலே, நேசமாகும் உள்ளத்தே நாடி" என்னும் சிவஞான சித்தியாரினும் பரம்பொருளைச் சிவஞானம் ஒன்றால்தான் அறியலாம் என்பது புலனாகும். நூல்கள் முகமாக நிகழ்வது பாச ஞானம் எனவும், நான் பிரமம் என்று மதிக்கவருவது பசு ஞானம் எனவும் கூறுவர். இவ்வுண்மையை, "வேத சாத்திரம் மிருதி புராணம் கலைஞானம்—நாதமுடிவான

எல்லாம் பாச ஞானம்" (சிவஞானசித்தி சுபக்கம் சூ9—2.4) எனவும், "காதலினால் நான் பிரமம் என்னும் ஞானம் கருது பசு ஞானம்" (சிவஞானசித்தி சுபக்கம் சூ-9-2) எனவும் கூறிப்போந்த பிரமாணங்களால் அறிக. அவன் அருளே கண்ணாகக் காண்டல் பதி ஞானம் ஆகும். இம் மூந்திற ஞானங்களுள் இறைவனது பரம்பொருள் தன்மை அறிதற்கு உரியது மெய்ஞ்ஞானம் ஆகிய பதி ஞானம் ஆகும்." பண்டிதமணி அவர்களின் உரைக்குப் பின்வந்த தருமையாதீனத் திருவாசக உரையில், மகாவித்துவான் அருளை வடிவேல் முதலியாரவர்கள், "காணலாம் பரமே" என்பதற்கு "ஞானக் கண்ணாலன்றி ஊனக்கண்ணாலும் காணத் தக்க பரம்பொருளே," எனத் துணிந்து உரை கூறி, "இஃது அடியவர்க்கு அநுபவமாதல் குறித்தபடி" என்று விளக்கம் செய்திருக்கிறார்கள். "பரமே" என்பதால் ஞானக்கண்ணிற்கு அது புலனாகுமே அன்றி ஊனக் கண்ணுக்குப் புலனாகாது என்பது பெறப்படும். இறைவனின் தடத்த நிலைதான் ஊனக்கண்ணுக்குப் புலனாகும். இதே திருச்சதகம் 76-ஆம் பாடலில், "அனைத்துலகும் ஆய நின்னை ஐம்புலன்கள் காண்கிலா" எனக் கூறுவதன் வாயிலாக மணிவாசகப்பெருமான் இறைவனின் பரநிலை ஞானக் கண்ணிற்கு மட்டுமே புலனாகும் என்பதைத் தெளிவுபடுத்தியிருக்கிறார். எனினும் முதலியாரவர்கள், "இஃது அடியவர்க்கு அநுபவமாதல் குறித்தபடி" என விளக்கம் செய்திருப்பதற்குக் காரணம், "உணர்வில் நேர்வரும் சிவபோகம்...ஐம்பொறி அளவினும் வர அருளினை எனப் போற்றி" என்னும் திருமொழித்துணை தான் என்பதைக் கூற வேண்டுவதில்லை.

நடராசப் பெருமானின் தடத்த வடிவ தரிசனம் அப்பர நிலை அநுபவம் போல இருந்தது என்பதே இத்திருமொழியின் கருத்தாகும். பரநிலை அநுபவம் ஊனக்கண்ணுக்கும் புலனாகும் என்று இதற்குப் பொருள் கொண்டால், அது சித்தாந்த சாத்திரத்தின் தீர்ந்த முடிபுக்கும் ஏனைத் திருமுறை வாக்குக்களுக்கும் முரணாகும் என அறிதல் வேண்டும். ஆகவே, பண்டிதமணி அவர்களின் உரையே இவ்விடத்தில் சித்தாந்தக் கொள்கைக்குப் பொருத்தமானது என்பது தேற்றம்.

திருச்சதகம் 96-ஆம் பாடல், "விச்சதின்றியே விளைவு செய்குவாய்" எனத் துவங்குகிறது. இதற்குச் சிவஞான பாடியத்தில் சிவஞான சுவாமிகள் எழுதியிருக்கும் உரையை இனிது விளக்கிப் பண்டிதமணி அவர்கள் பின்வருமாறு எழுதியிருக்கிறார்கள் :—

"படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழிற்கும் இறைவன் தலைவனாயினும் படைத்தல் தொழிலில் ஓர் உண்மை ஆராயத்தக்கது. வினைக்கு ஈடாக மாயை என்னும் வித்தினின்றும் உயிர்க்கு உடல் முதலியன இறைவனால் தரப்படுகின்றன என்பது சைவ நூற்கொள்கை. அங்ஙன மாயின் மருட் கேவல நிலையில் உள்ள உயிர்க்கு வினைத்தொடர்பு இன்மையால் முதல் தோற்றத்திற்கு ஏது என்னும் என்பது வினாவாகும். அதற்கு விடையுளதாயினும் அஃது அரிதின் ஆராய்ந்து கொள்ளத்தக்கதாகும். இவ்வருமைநோக்கியே சிவஞான போதம், 2-ஆம் சூத்திரத்திற்கு நுதலிய பொருள் கூறப்புகுந்த மெய்கண்ட ஆசிரியர் "புனர் உற்பவம் வருமாறு உணர்த்துதல் நுதலிற்று" என்று கூறினர்.........ஈண்டுப் பேருரை வகுத்த மாதவச் சிவஞான முனிவரர்,......"விச்சதின்றியே விளைவு செய்குவாய்" எனவும், "விண்ணும் மண்ணகமுழுதும் யாவையும் வைச்சு வாங்குவாய்" எனவும் ஓதிய திருவாக்கானும் இவ்விருவேறு வகையும் கண்டு கொள்க" என்றுரைத்தார். இருவேறு வகையாவன : முதலுற்பவமும் புனருற்பவமும் ஆம் என்பது."

முதலுற்பவத்தில் வினையின்றியே இறைவன் தன் கருணை காரணமாக எல்லா உயிர்களுக்கும் சூக்கும தேகத்தைப் படைத்தளித்திருக்கிறான் என்பதையே, "விச்சதின்றியே விளைவு செய்குவாய்" என்னும் மணிமொழி உணர்த்துகிறது எனச் சிவஞான சுவாமிகள் சிவஞான பாடியத்தில் எழுதியிருப்பதையே பண்டிதமணி அவர்கள் விளக்கம் செய்திருக்கிறார்கள். இதற்கு மேல் புதியதோர் உரை காண அவர்கள் விரும்பவில்லை. சிவஞான சுவாமிகள் திறத்தில் பண்டிதமணி அவர்கள் கொண்ட ஈடுபாடே இதற்குக் காரணமாகும். தருமையாதீனத் திருவாசக உரையில், மகாவித்துவான் அருளை வடிவேல் முதலியாரவர்கள் சிவஞான சுவாமிகளின் இவ்வரிய உரையை உடன்பட்டாலும், இதனிலும் பார்க்க, வேறோர் உரை காணுதல் சிறப்பென எண்ணி, "நாவுக்கரசர்க்குக் கல்லே தெப்பமாய் அமையக் கடலைக் கடந்து கரையேறச் செய்தமை, ஞானசம்பந்தர்க்கு ஆண்பனைகளே பெண் பனைகளாகக் காய்தரச் செய்தமை, சுந்தரருக்குச் செங்கல்லே பொன்னாகிப் பயன்படச் செய்தமை போல்வன நியத காரணம் இல்லையாகவும், பிற காரணமே காரணமாய் அமைய அவற்றை நிகழச் செய்தமை குறித்தே "விச்சதின்றியே விளைவு செய்குவாய்" என்றார் என உரை கூறியிருக்கிறார்கள். முதலுற்பவத்தில் வினை இன்றியே உடல் வழங்கிய அருஞ்செயலைக் குறிக்கும் இத்திருமொழியை இவ்வாறு திசை திருப்புதல் சைவப் பேறிஞர்கட்கு அடாது என்பதை மட்டும் இங்கே குறிப்பிட விரும்புகிறோம். நியத காரண

மில்லாவிட்டாலும், பிற காரணங்களை அடிப்படையாகக் கொண்டே இந்நிகழ்ச்சிகள் நடந்திருக்கின்றன. இதனால் இவை "விச்சதின்றியே விளைவு செய்குவாய்" என்பதற்கு முற்றப் பொருந்தாமல் நெகிழ்வது கண்கூடு.

திருச்சதகம் 53-ஆம் பாடல், "போரே றேநின் பொன்னகர் வாய் நீபோந்தருளி **இருள் நீக்கி,** வாரே றிளமென் முலையாளோ டுடன்வந் தருள அருள் பெற்ற" என்பதாகும். இதற்குப் பண்டிதமணி அவர்கள் மிக்க நயமான சித்தாந்த உரை கண்டுள்ளார்கள். பின்வந்தார் இந்த நயத்தைக் காணத் தவறிவிட்டனர். "போர் ஏறே" என்பதற்கு, "ஆணவப் போரில் அரி ஏறு போல்பவனே" என அவர்கள் உரை கண்டனர். இதன்பின் அவர்கள் எழுதும் விளக்கம் வருமாறு :-

போரின் பயனாக இருள் நீக்கம் கூறப்பட்டிருத்தலின் ஈண்டு ஆணவப் போர் என்பது பெற்றும். மெய்யன்பர்களுக்கு அருளும் கால் அவரைப் பற்றி நிற்கும் மூலமலமாகிய ஆணவம் என்னும் யானைகளின் வலி அழித்தற்கு ஆண்சிங்கம் போறலின், "போரேறே" என்றார். (இனி "இருள் நீக்கி" "அருள் பெற்ற" எனக் கூறுவதன் கருத்து நயம் யாதெனிற் கூறுதும்.) கட்டுக் காலத்தில் தெளிவான பளிங்கு அனைய உயிர் அறிவை மறைத்து நிற்பது திணிந்த இருள் உருவமான ஆணவமலமே. அம்மலப் பிணிப்பு நீங்கினால் அன்றிச் சிவக் காட்சி புலனாகாது. ஆதலின் முதலிற் பாசநீக்கமே வேண்டுவதாயிற்று. பக்குவ முதிர்ந்த உயிரைப் பற்றி நிற்கும் ஆணவ ஆற்றல் கெட்டு ஒழிந்ததும் அவ்வுயிர் சிவன் அருளில் தலைப்படும் என்பது, "இருள் நீக்கி அருள் பெற்ற" என்பதனால் தெளியலாம். ஈண்டு நீக்கலும் அருளலும் முறையே பாச நீக்கத்தையும் சிவப் பேற்றையும் குறிப்பனவாம். சிவஞானபோதம் பத்தாம் சூத்திர அவதாரிகையில், "இனி அச்சாதனத்தானாய பயனியல்பு வகுத்துக் கூறுவான் எடுத்துக் கொண்டார். அப்பயனாவது பாசவீடும் சிவப்பேறும் என இருவகைப்படும்" என்பர் சிவஞான முனிவரர். பத்தாம் சூத்திரத்தில், "மலமாயை தன்னொடு வல்வினை இன்றே" என்றதனால் பாசவீடும், பதினோராம் சூத்திரத்தில், "அயரா அன்பின் அரன் கழல் செலுமே" என்றதனால் சிவப்பேறும் கூறப்பட்டன. அவ்விரண்டு பயன்களையும் ஈண்டு மெய்யன்பர் பேறுகளாக அடிகள், "இருள் நீக்கி அருள" எனவும் "அருள் பெற்ற" எனவும் முறையே கூறியருளினர். பாச விடுதிக்கு உயிரின் சாதனம் ஏதுவாயினும் இறையருள் முக்கியம் என்பது தோன்ற, "இருள்நீக்கி" என இறைவன் செயலாகவும் அந் நீக்கத்தில் சிவப்பேறு தானே கைகூடும் என்பது தோன்ற, "அருள் பெற்ற" என உயிரின் செயலாகவும் அடிகள் அருளிச் செய்வாராயினர். இத்தகைய தத்துவ நுண்பொருள்கள் உண்மை அநுபவம் உடையார் வாக்கில் எளிமையாக வெளிப்படுகின்றன என்பது உணர்ந்து இன்புறத் தக்கது."

சிவஞானபோதம் 10, 11 சூத்திரம் இரண்டையும் இவ்வளவு எளிதாகப் பண்டிதமணி போன்றவர்கள்தாம் விளக்க முடியும்.

ஞானசம்பந்தர் திருவாய் மலர்ந்தருளிய "தோடுடைய செவியன்" என்னும் திருப்பாடல் இறைவனின் ஐந்தொழில்களையும் உணர்த்தும் எனச் சைவ அறிஞர்கள் கூறுவர். கயப்பாக்கம் சதாசிவச் செட்டியாரவர்கள் இப்பாடலுக்கு உரை எழுதும் போது ஓர் இடர்ப்பாட்டைக் கண்டார்கள். (1) தோடுடைய செவியன் (2) விடையேறி (3) தூவெண் மதிசூடி (4) சுடலைப் பொடிபூசி (5) உள்ளம் கவர் கள்வன் (6) அருள் செய்த என ஆறு தொழில்நிலைகள் வருவதால், "தோடுடைய செவியனை" நீக்கிவிட்டு, (1) விடையேறி—படைத்தல் (2) தூவெண் மதி சூடி—காத்தல் (3) சுடலைப் பொடிபூசி—அழித்தல் (4) உள்ளம் கவர் கள்வன்—மறைத்தல் (5) அருள் செய்த—அருளல் என ஐந்தொழில்களையும் பொருத்திச் சதாசிவச் செட்டியாரவர்கள் உரை எழுதினார்கள். "தோடுடைய செவியன்" — அம்மையோடு கூடிய இறைவன் ஆதலால், படைத்தலைத் "தோடுடைய செவியன்" நிலைக்குச் சொல்லுவதுதான் பொருத்தம். "விடைஏறிய நிலைக்கு"ச் சொல்வது வலிந்து கூறுவதாகவே முடியும். எனவே, பண்டிதமணி அவர்கள் திருச்சதகம், 21-ஆம் பாடலுக்கு உரை எழுதும் போது "தோடுடைய செவியன் படைத்தலையும் "விடைஏறி", "மதி சூடி" இரண்டும் காத்தலையும், "சுடலைப் பொடிபூசி"—அழித்தலையும், "உள்ளம் கவர் கள்வன்" மறைத்தலையும், "அருள் செய்த" அருளலையும் குறிக்கும். ஏனைய தொழில்களுக்கெல்லாம் ஒவ்வொன்று கூறிக் காத்தல் தொழிற்கு "விடையேறி", "மதி சூடி" என இரண்டு நிகழ்ச்சி கூறியது இறைவன் ஆதாரமாகியும் ஆதேயமாகியும் நின்று காப்பதாலேயாம். விடை அறத்தின் வடிவம். அதனை ஊர்தியாகக் கொண்டது அறத்தைப் பாதுகாத்து நடத்தும் தலைவன் என்பதைப் புலப்படுத்தும். இறைவன் உலகிற்கு ஆதாரமாகியும் ஆதேயமாகியும் நின்று பாதுகாப்பவன் என்பதைச் "சடையாய்", "விடையாய்" என்பன குறிப்பாக அறிவுறுப்பனவாம். ஆதாரம் தாங்குதலும் ஆதேயம் தாங்கப்படுதலும்

ஆதலின், இறைவன் தன் சடையில் கங்கைப் பெருக்கைத் தாங்கியும், விடையை ஊர்ந்து அதனால் தாங்கப்பட்டும் இருத்தலின், இறைவன் இருவகையாக நின்று உலகைப் பாதுகாக்கிறான் என்பது பெறப்படும்", எனக் குறிப்பிட்டுள்ளார்கள். இவ்வாறு சிக்கறுத்துப் பொருள் கொள்வது பண்டிதமணி அவர்களுக்குரிய சிறப்பியல்பாகும்.

இதுகாறும் திருச்சதக உரையில் பண்டிதமணி அவர்கள் சைவ சித்தாந்த சாத்திரக் கருத்துக்களை விளக்கியுள்ள ஒருசில இடங்களைக் குறிப்பிட்டோம். இன்னும் பல பகுதிகள் உண்டு. பாடல்கள் எந்த அளவுக்குக் கருத்துக்களை விரிக்க இடம் கொடுக்கின்றனவோ அந்த அளவுக்குப் பண்டிதமணி அவர்கள் தெளிவாகச் சாத்திரக் கருத்துக்களை விளக்கியுள்ளார்கள். இதனால் திருச்சதக உரை சாத்திர மணமும் இலக்கிய மணமும் 'ஒருங்கே கமழும் ஒரு பூஞ்சோலை என்பது இனிது புலனாகும்.

மணிமொழியடிகளார் அன்பு பெருகி அருள் தழைக்க மனமுருகிப் பாடிய திருவாசகத்தினுள் திருச்சதகம் சிறந்த பகுதி; அந்தாதித் தொடையில் அமைந்தது; அழகிய செய்யுட்கள்; கல்லும் கரையும் சொல்லினிமையுடையது. தமிழ்ப் புலவர் சோதனைக்குப் பாடப் பகுதி என்றால், வேறு சொல்வானேன்? பரிமேலழகர், நச்சினார்க்கினியர் இளம் பூரணர், பேராசிரியர், அடியார்க்கு நல்லார் முதலியோர் பண்டைக் கால உரையாசிரியர்கள். இவர்களெல்லாரும் ஒருருவாகி வந்தாற் போன்றவர் முதுபெரும் புலவர் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்கள்! அவர்களை நினைக்கும் பொழுதே தமிழ்ப் புளகம் எய்துவர் தமிழறிஞர்! அருட்டிரு மறைமலையடிகளார் திருவாசகத்தின் முதற் பகுதியாகிய நான்கு அகவல்களுக்கும் பலவாண்டுகட்கு முன் உரையெழுதியிருக்கிறார்கள். பண்டிதமணி, இல்லற ஞானி, திருச்சதகத்திற்குத் தெள்ளிய உரை எழுதியிருக்கிறார்கள்; படிக்கப் படிக்க இனிக்கிறது, தெவிட்டாத இன்பம் தருகிறது; வரிதோறும் அறிவை அள்ளிச் சொரிகிறது. இப்படியல்லவா தமிழ்ப் புலவர் செய்யுளை ஆராய்ந்து அறிய வேண்டும் என்று தட்டியெழுப்புகின்றது! தமிழ் மாணவர் எல்லாம் வாங்கிப் படித்து நற்பயனடைவார்களாக; எத்துணையோ நூல்களை ஒருங்கு படித்த அறிவு உண்டாதல் திண்ணம்.

**தமிழ்த் தென்றல் கொடி 1, பூ-5-ல்**

வெளி வந்தது

*மதிப்புரைத் திரட்டு (பக்கம் 46-47)*



மேலைச்சிவபுரி சன்மார்க்க சபை ஆண்டுவிழா. பண்டிதமணியாருடன் மகா வித்துவான் ரா. இராகவ ஐயங்கார், சபைத்தலைவர் வ. பழ. சா. சாமிநாதன் செட்டியார், சிவனடியான் செட்டியார், விசுவநாதன் செட்டியார், சிங்காரஞ் செட்டியார் ஆகியோர் உள்ளனர்.



அண்ணாமலைப் பல்கலைக் கழக ஆசிரியர்களுடன் பண்டிதமணியார், துணைவேந்தர் மகாகனம் சீனிவாச சாத்திரியார், மகாமகோபாத்தியாய குப்புசாமி சாத்திரி, பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார், ரா. இராகவ ஐயங்கார், அ. சிதம்பரநாதனார் ஆகியோர் உள்ளனர்.



அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப்பேரவையின் 1938-39-ஆம் ஆண்டின் இறுதிச்
சொற்பொழிவு நாள். பெருந்தலைவர் பண்டிதமணியார், நீ. கந்தசாமிப் பிள்ளை,
அ. சிதம்பர நாதனார், லெ. ப. கரு. இராமநாதனார், வி. மு. சோமசுந்தரம் பிள்ளை,
இ. எஸ். வரதராச ஐயர் ஆகியோர் உள்ளனர்.



24—12—1933-இல் நிகழ்ந்த தூத்துக்குடி சைவ சித்தாந்த சபைப் பொன்விழா. மாநாட்டு தலைவர் பண்டிதமணியார், திறப்பாளர் சி. கே. சுப்பிரமணிய முதலியார், தி. கு. கி. நாராயணசாமி நாயுடு ஆகியோர் உள்ளனர்.

சிவநேசச் செல்வர்களுடன் செந்தமிழ்ச் செல்வர் பண்டிதமணியார்.

# கருப்பட்டி கண்ட கதிர்மணி

காரைக்குடி. கருப்பட்டிக் கவிராயர்

முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன், மதுரைத் தமிழ்ச்சங்கத்தார் நடத்தி வந்த பால பண்டிதத் தேர்வு எழுதி முடித்துவிட்டு விட்டிலிருந்த ஒரு நாள், பண்டிதமணி அவர்களிடமிருந்து ஒரு வாரத்துக்குள் மகிபாலன்பட்டி வந்து பார்க்கு மாறு பணிக்கப் பெற்று ஒரு கடிதம் என் பெயருக்கு வந்தது. எனக்கு ஒரே வியப்பு. முன் பின் எந்தத் தொடர்பும் இல்லை. மேலும் நானே பதினாறு வயதுடையவன். ஆண்டிலும் அறிவிலும் இளைஞனாகிய எனக்கு ஆண்டாலும் அறிவாலும் முதிர்ந்து பேரொளியாக விளங்கும் பேராசிரியப் பெருமானிடமிருந்து அழைப்புக் கிடைத்தது பற்றி எனதுள்ளம் எல்லையில்லா மகிழ்ச்சி யடைந்தது. குறிப்பிட்டபடி மகிபாலன்பட்டி சென்று, பண்டிதமணி அவர்கள் இல்லத்தை விசாரித்து அறிந்து அங்கு சென்றேன். முதன் முதலாக அப்பொழுதுதான் அவர்களைப் பார்த் தேன். என்னைப் பற்றி விவரங்கள் கேட்டு என்னை அழைத்த காரணத்தையும் விளக்கினார்கள். அதன் பிறகுதான் நான் எழுதிய பால பண்டிதத் தேர்வின் விடைத்தாள்களில் இலக்கணப் பகுதி, கவிதை புனைதல் பகுதி, விடைப் பகுதிகளைத் திருத்தி மதிப்பு எண் கொடுத்திருக்கிறார்கள் என்பதை அறிந்தேன். அவர்களைப் பெரிதும் கவர்ந்த பகுதி நான் எழுதிய கவிதை புனைதல் என்ற வினாத்தாளுக்குப் பொருத்தமாக கவி புனைந்திருந்ததுதான். அப்பகுதியில் தாண்டக யாப்பில் "நான் அறிந்த தமிழ்ப்புலவர்"களில் ஒருவரின் சிறப்புக்களை பாடும்படி குறித்திருந் தார்கள். அதற்கு நான் பண்டிதமணி அவர் களின் சிறப்புக்களைப் பற்றி ஒரு பாடல் தாண்டக யாப்பில் பாடியிருந்தேன். அப்பாடல் வருமாறு:

"பண்டிதன்காண் ; பண்டிதர்க்கு மணியா னான்காண்
பைந்தமிழும் வடமொழியும் பாகம் ஆக்கி
உண்டவன்காண் ; நூற்கடலை உள்ளந் தோய
உணர்ந்தவன்காண் ; கவிநயங்கள் ஓர்ந்து நோக்கி
விண்டவன்காண் ; தடையெழுப்பி விடை யுங் காட்டி
விரிவுரைகள் தந்தவன்காண் ; சொல் லின் ஆழங்
கண்டவன்காண் ; மகிபால நகரம் தந்த
கதிரேச ஆசான்என் கண்ணுள் ளானே.

இந்த ஒரு பாடலே பண்டிதமணி அவர்களை எனக்கு அறிமுகப்படுத்தி அவர்களின் வாழ்த்தைப் பெற வைத்தது. இப்பாடலை என்றும் மறவேன். மறக்கவும் முடியாது. பின்னர் அவர்கள் எனக்கு ஆசி வழங்கி அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் புலவர் வகுப்பில் படிக்க வசதி செய்து கொடுத்துப் பெருமை பெறச் செய்தார்கள். அதன்படி 1940 முதல் 1944 வரை அங்கு படித்துப் புலவர் பட்டமும் பெற்றேன்.

பண்டிதமணி அவர்களுக்கு மகாமகோபாத் தியாய பட்டம் 1942-இல் அரசியலார் கொடுத்தது குறித்துத் தமிழ்நாடெங்கும் பாராட்டு விழாக்கள் நடைபெற்றன. அவ்வகையில் காரைக்குடி நகரத்தார் நடத்திய விழாக்குழுவில் அங்கம் பெற்றுப் பணி செய்யும் வாய்ப்புக் கிடைத்தது. அதன் விளைவாகக் காரைக்குடியில் திரு. அ. ராம. அண்ணாமலைச் செட்டியார், திரு.பழ.ப. ராமசாமிச் செட்டியார், தமிழ்ப்பண்டிதர் ப. மாசிலாமணித் தேசிகர் மூவரின் பெருமுயற்சி காரணமாகத் தமிழ் பயில்வதற்கும் மதுரைத் தமிழ்ச் சங்கத் தேர்வு களுக்குப் படிப்பதற்காகவும் பண்டிதமணியின் பேரால் 1-10-1943-இல் கதிரேசன் கழகம் தொடங்கப் பெற்றது. அதன் முதலாண்டு செயற் குழுவில் செயலாளர்களில் ஒருவனாக இருந்து பணி செய்யும் பெருமையும் பெற்றேன்.

16-4-1944-இல் சென்னையில் பண்டிதமணி அவர்கள் தலைமையில் நடைபெற்ற கம்பர் விழா எதிர்பாராத நிலையில் இடையிலே இடையூறு நேர்ந்தது. பண்டிதமணி அவர்கள்பால் வெறுப்பும் அவர்கள் பெற்று உயர்ந்து வரும் புகழின்பால் பொறாமையும் கொண்ட ஒரு கூட்டத்தாரின் செயலால் கம்பர் விழா பாதிக்கப் பெற்றுப் பண்டிதமணி அவர்கள் மனம் வெதும்பி ஊர் திரும்பிய நேரம். இந்த நிலையில் கதிரேசன் கழகம் ஓராண்டு நிறைந்து விழா எடுக்க முயற்சி செய்து வந்தது. சென்னையில் பகைமை காட்டிய கூட்டத்தாரின் பின் அணியாக உள்ளவர்களில்

சிலர் காரைக்குடியில் இருந்தார்கள். அவர்கள் கழகத்துக்கு இடையூறு செய்து பழி பல கூறினார்கள். எல்லா எதிர்ப்புக்களையும் பொருட் படுத்தாமல் கழகம் **8-10-1944-இல்** பசுமலை S. சோமசுந்தர பாரதியார் தலைமையில் கொண் டாடிய கதிரேசன் கழக முதலாண்டு நிறைவு விழாவில் அண்ணாமலை அரசர் திருக்கரத்தால் பண்டிதமணி அவர்களுக்குப் பொன்னாடை போர்த்திச் சிறப்பிக்கப் பெற்றது. எதிர்ப்பும் பழியும் கூறிய ஊரிலே தனக்கு ஒரு சிறப்பு செய்த கதிரேசன் கழகத்தைப் பண்டிதமணி அவர்கள் வாழ்நாள் முழுதும் சிறப்பித்துக் கூறி வந்தார்கள். கழகமும் பத்தாண்டுகள் தொடர்ந்து தமிழ்ப்பணி செய்து வந்தது.

**1948-இல்** திரு.ரா.பி. சேதுப்பிள்ளை அவர்கள் தலைமையில் நடைபெற்ற ஐந்தாம் ஆண்டு நிறைவு விழாவில் **"தமிழன்னை தசாங்கம்** என்ற நூலை இயற்றி, பண்டிதமணி அவர்கள் முன்னிலை யில் அரங்கேற்றினேன். அவ்விழாவில் அவர்கள் என்னைப் பற்றி வாழ்த்துக் கூறி ஒரு பாடலையும் கூறினார்கள். அவர்கள் வாழ்த்து மெய்யாக இன்று வரையிலும் என்னை வளர்த்து வருகிறது. அவர்கள் கூறிய பாடல்:

**ஆன்ற தமிழ்த்தாய்க் கழகார் தசாங்கஇயல்**
**ஏன்றசுவைப் பாவால் இனிதுரைத்தான்—**
**தோன்றுபுகழ்**
**காரைநகர்ச் செல்வக் கருப்பட்டி பேரோங்**
**சீருடையான் வாழ்க சிறந்து.** [கும்

காரைக்குடியில் நகரச் சிவன் கோவிலில் ஆண்டுதோறும் நடைபெறும் ஆடிப் பூரத் திரு நாளில் ஏழு நாட்கள் சமயப் பேரவை கூடும். தமிழ்நாட்டுப் புலவர் பெருமக்கள் வந்து சொற் பொழிவு ஆற்றி வந்திருக்கிறார்கள். அதனை முன்னின்று நடத்தி வந்த வித்துவான் அரு. சோம சுந்தரம் செட்டியார் அவர்களுக்குப் பின் அப் பொறுப்பை அடியேன் ஏற்று நடத்தி வந்தேன். அந்தக் காலம் **1949-இல்** நடைபெற்ற மேற்படி சமயப் பேரவைக்குப் பண்டிதமணி அவர்களை ஒரு நாள் கூட்டி வந்தேன். வரும் வழியில் நாங்கள் வந்த கார் பழுது பட்டு ஒரு மணி நேரம் இடைவழியில் இருக்க நேர்ந்தது. அப்பொழுது பண்டிதமணி அவர்கள் உள்ளத்தில் ஒரு பாடல் உருவாகி இருக்கிறது. அதனை அவர்கள் இங்கு வந்து சபையில் **"சமயக்கண்"** என்ற சொற்பொழிவைத் தொடங்கும் பொழுது முன்னுரையாக நகைச்சுவை ததும்ப மேற்படி பாடலைச் சொல்லி, கருத்துக்களைக் கூறினார்கள். அப்பாடல் இன்னும் என் செவியில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. அப்பாடல்வருமாறு:

**காட்டானை போலக் கதறிக் கிளம்புகின்ற**
**மோட்டாரை நம்புவதும் மோசம்தான்—**
**பாட்டாய்கேள்**
**காரைக் குடிநகரைக் காணவிழைந் தா**
**யன்றோ**
**காரைக் குடியாகக் காண்.**

இப்பாடலில் முதலிரண்டு அடிகள் பண்டிதமணி அவர்கள் கூற்றாகவும், பின் இரண்டு அடிகள் அதற்கு விடையாகக் கார் கூறுவதாகவும் அமைந்தது. பண்டிதமணி அவர்கள் எந்தத் துறையாக இருந்தாலும் அந்தத் துறையில் வினா எழுப்பி வினாவிற்குத் தக்க விடை கூறும் நுண்ணறிவு பெற்றவர்கள். அது இப்பாடல் மூலமாகவும் வெளிப்படுகிறது.

*1950-இல்* நடைபெற்ற கம்பன் திருநாளில் இரண்டாம் நாள் நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்கிச் சிறப்புச் செய்தார்கள். இவ்விழாவில் அவர்கள் தலைமையில் "இரண்டில் ஒன்று" என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றும் வாய்ப்பும் பெற்றேன்.

பண்டிதமணி அவர்கள் காரைக்குடிக்கு வந்த சமயமெல்லாம் அடியேன் வீட்டில் தங்கி எங்கள் குடும்பத்தாருடன் உறவாடிச் சிறப்புச் செய்த செயலை என்றும் மறக்க முடியாது. இதன் காரணமாக என்னையும் அவர்கள் குடும்பத் தாருடன் சேர்த்துக்கொண்டு வாழ்த்தி எனக்குப் பல வகையிலும் ஆசானாக இருந்தார்கள். அவர் கள் திருவடியை வாழ்த்தி இக்கட்டுரையை நிறைவு செய்கிறேன்.

—

"சாகித்தியத்தோடு கலவாத தனி இசையும், கருவியினின்று எழுப்பப்படும் இசையும், பொருள் உணர்ச்சிக்கு இடம் இன்றிச் செவிக்கும், உள்ளத்திற்கும், ஓரளவு இன்பம் செய்வனவாகும். உள்ளத்திற்கு இன்பம் செய்வது இயற்பாவோடு கூடிய இசையே ஆகும்."

*31-5-1944-இல்* வலம்புரியில் நிகழ்ந்த தமிழிசை மாநாட்டுத் தலைவர், பண்டிதமணி **திரு. மு. கதிரேசச் செட்டியார்** அவர்கள் கூறிய முன்னுரைச் சுருக்கம்.

(பக்கம் : 3)

# தமிழ்த்தாயின் தவப்புதல்வர்

இல. பழனியப்பன், எம்.ஏ.

தமிழ் கூறும் நல்லுலகம் அறிந்த ஓர் ஒப்பற்ற மேதை பண்டிதமணியவர்களெனில் மிகையாகாது. நுட்பமான அறிவும், பார்த்தோரைப் பரவசத்தில் ஆழ்த்தும் பண்பும் இயற்கையிலேயே அமையப் பெற்ற பண்டிதமணி அவர்களின் தமிழ்ப் பணிக்கு நன்றி செலுத்து முகத்தான் அன்னாருக்குச் சிலை நிறுவ முன் வந்த அனைவரையும் தமிழகம் என்றும் நன்றியுணர்ச்சியுடன் நினைவுகூரக் கடமைப் பட்டிருக்கிறது. அந்நியராட்சியில் மொழியுணர்ச்சியிலும் அடிமைப்பட்டுக் கிடந்த தமிழர்களைத் தட்டியெழுப்பிய பணியில் பண்டித மணி அவர்களுக்கும் குறிப்பிடத்தக்க பங்கு உண்டு.

"யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற தத்துவத்தை உலகுக்கு வழங்கிய கணியன் பூங்குன்றனையளித்த இன்றைய மகிபாலன்பட்டியில் (இராமநாதபுரம் மாவட்டம்) தோன்றிய பண்டிதமணி அவர்கள் இயற்கையிலேயே எளிமையும் இனிமையும் வாய்ந்தவர்கள். தாய் மொழியாம் தமிழின் மீதிருந்த தணியாத ஆர்வத்தால் இளமையிலே ஆசிரியர் இல்லாமல் தானாகவே தமிழ் இலக்கண, இலக்கியங்களைக் கற்றுத் தேர்ந்த பண்டிதமணியின் திறன் நம் அனைவரையும் வியப்பில் ஆழ்த்துகிறது. இளமையிலே தந்தையை இழந்த பண்டிதமணியவர்கள் மூத்த பிள்ளையானதால், குடும்பத்தின் பொறுப்புச் சுமையை இளம் வயதிலேயே ஏற்க வேண்டி வந்தது. அன்று ஏற்றுக்கொண்ட பொறுப்பை மிகச் சிரிய முறையில் கடைசிவரை நிறைவேற்றியது கண்டு அனைவரும் இன்றளவும் வியக்கின்றனர்.

பலருடைய வாழ்க்கைக்கு ஊன்றுகோலாக இருந்த பண்டிதமணி அவர்கள் இளமையிலே ஏற்பட்ட இளம்பிள்ளை வாதத்தால் தன் இடக் காலிலும், இடக்கையிலும் வலுக்குறைந்து ஊன்றுகோலோடு வாழ்ந்ததை எண்ணிக் கவலைப்பட்டனர் தமிழ்ப்பெருங்குடிமக்கள். உடல் நலக்குறைவால் தன் சொந்த ஊரிலேயே ஆண்டவனை ஆசானாகக்கொண்டு தமிழ்ப் பணியாற்றிய பண்டிதமணியின் சிந்தனை உலகைச் சுற்றி வர ஒருபோதும் தயங்கவில்லை. நாட்டு நடப்பில் அவர் காட்டிய நாட்டம் போல் அந்நாளில் யாரும் காட்டவில்லை. பண்டிதமணியின் உழைப்பின் சின்னமாகத் தமிழகம் பெற்ற ஒப்பற்ற பரிசு மேலைச்சிவபுரியிலே இன்றளவும் தமிழ்ப்பணியாற்றி வரும் சன்மார்க்க சபையும், கணேசர் செந்தமிழ்க் கல்லூரியுமாகும்.

கல்வியறிவு மிக்க புலவர்களையும், புரவலர்களையும் நண்பர்களாகப் பெற்றிருந்த பண்டித மணியவர்கள், சிறந்த நூல்களைக் கற்று நவில்தோறும் நூல் நயம் கண்ட பெருமகனர். டாக்டர் நாவலர் பாரதியார், தமிழ்த்தாத்தா உ. வே. சா., மறைமலையடிகளார், தமிழ்த் தென்றல் திரு.வி.க. போன்ற தமிழ்ப் பெரியார்களுடன் தொடர்பு கொண்டு வாழ்ந்த பண்டித மணியவர்களைப் பல்வேறு பதவிகள் தழுவிக் கொண்டது இயற்கையே.

வடமொழியில் சிறந்த புலமை பெற்றிருந்த ஒரு சில தமிழ்ப் பேராசிரியர்களில் தலையானவர் பண்டிதமணி அவர்களே. தாய்மொழியை ஒதுக்கியவர்களைச் சாட அவர் ஒரு போதும் தயங்கியதில்லை. தமிழ் நாடு முழுமையும் குறிப்பாகப் பாண்டி நாடு முழுமையும் சுற்றுப் பயணம் செய்து இலக்கிய அன்பர்களுக்கு விருந்து படைத்து மொழித் துறையில் ஓர் மறு மலர்ச்சியை அக்காலத்தில் உண்டாக்கிய பெருமை ஐயா அவர்களையே சேரும்.

தமிழ்ப் பண்பாட்டின் காவலராக, தமிழிசை இயக்கத்தின் தாயகமாக விளங்கும் அண்ணமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ் ஆசிரியராகச் சேர்ந்து தன் உழைப்பாலும் அறிவாற்றலிலும் தமிழ் ஆராய்ச்சித் துறைத்தலைவர் வரை உயர்ந்தவர் பண்டிதமணி. அண்ணமலைப் பல்கலைக் கழகத்தில் அவர் ஆற்றிய பணிகள் இன்றளவும் தலை சிறந்து விளங்குகின்றன. இன்றைய அமைச்சர்களில் டாக்டர் நாவலர் நெடுஞ் செழியனும், பேராசிரியர் அன்பழகனும் ஐயா அவரின் மாணவர்களே. இன்றைய தமிழ்ப் பேராசிரியர்கள் பலருக்கும் ஐயா அவர்களே ஆசான். மாணவர்கள் புரிந்துகொள்ளும் வண்ணம் பாடம் சொல்லிக் கொடுப்பதில் பண்டிதமணி தனித்திறமை பெற்றிருந்தார்.

ஆசிரியர் மாணவர் உறவுக்கு ஓர் பாலமாகத் திகழ்ந்தவர் பண்டிதமணி.

பண்டிதமணியவர்கள் ஒரு சிறந்த நிர்வாகி. சென்னை, அண்ணாமலைப் பல்கலைக் கழகங்களில் பல பொறுப்புக்களில் சிறப்பாகப் பணிபுரிந்து எல்லோருடைய நன்மதிப்பையும் பெற்ற பெரு மகனார் பண்டிதமணி. அக்காலத்தில் யாரும் பெறமுடியாத மகாமகோபாத்தியாயா பட்டம் பெற்ற பண்டிதமணி அவர்கள், மிகுந்த அடக்கத்துடன் ஆரவாரமின்றி வாழ்ந்த பெரியாராவர்.

பண்டிதமணி அவர்களின் கட்டுரைத் திரட்டு, கௌடலீயம் மொழி பெயர்ப்பு, திருவாசக உரை ஆகிய படைப்புக்கள் மிகச் சிறந்த படைப்புக்களாகத் திகழ்கின்றன. அவர் அனைத்துத் தமிழிலும் தலைசிறந்து விளங்கினார். அவரைப் போல் பாவன்மையும், நாவன்மையும் ஒரு சேரப் பெற்றவர்களை இக்காலத்தில் காண்ப தரிது.

தன் சொந்தக் கருத்துக்களைத் துணிவுடன் வற்புறுத்திய பண்டிதமணி, மாற்றுக் கருத்துக் கொண்ட பல அறிஞர்களுடன் கடைசிவரை நட்புறவுடன் பழகிய பாங்கு மிகவும் பாராட்டு தற்குரியது.

தன் தாய்மொழியின் சிறப்பில் வைா நம்பிக் கையுடன் விளங்கிய பண்டிதமணி அந்தக் காலத்திலேயே துணிந்து தமிழ் எழுத்துச் சீர் திருத்தத்தை வரவேற்றவர் என்பது குறிப்பிடத் தக்கது. ஆங்கிலத்தின் அவசியத்தை நன்கு உணர்ந்திருந்த ஒருசில தமிழறிஞர்களில் பண்டித மணியும் ஒருவர். தாய்மொழி வழிக் கல்வியில் உண்மையான நம்பிக்கையுடனும், உறுதியுடனும் உழைத்த பண்டிதமணி தன் கருத்துக்களை அச்ச மின்றி எடுத்து மொழிந்தவர் என்பது நினைவு கூரத் தக்கது.

பொது வாழ்க்கை போல் பண்டிதமணி அவர் களின் இல்வாழ்க்கையும் மிகச் சிறப்பாக அமைந்திருந்தது. தன் கடைசி மூச்சு வரை தன் தாய்மொழிக்கும், தாய்நாட்டிற்கும் உழைத்த பண்டிதமணியவர்களின் நினைவு என்றும் நம் அனைவர் நெஞ்சங்களிலும் பசுமை யாகத் திகழும் என்பதில் ஐயமில்லை. பண்டித மணி அவர்களின் தமிழ்க் கனவுகளைத் தமிழ் நாட்டின் விடிவெள்ளி தமிழவேள் டாக்டர் கலைஞர் நிறைவேற்றுவோர் என்பதில் தமிழர்களுக்கு அசைக்க முடியாத நம்பிக்கை என்றுமுண்டு.

வாழ்க பண்டிதமணியின் புகழ் !



உயர்திரு விபுலாநந்த அடிகள் எழுதியது :

வேதம் ஆகமம் முதலிய எண்ணிறந்த பல்வேறு அறிவு நூற் பெருக்கங்களையுடைய வடமொழியும், தமிழ் மொழியும் ஆகிய இரு பெரு மொழிக்கும் இலக்கணம் வகுத்து புலனழுக்கற்ற அறிவுடையோர் பலர் வடமொழி வல்லாராய் அம்மொழி மரபு பலவற்றை எடுத்தாண்டமை யாலும் தமிழிலக்கணம் புலமை நிரம்புதற்கு வடமொழியறிவும் ஒருசார் வேண்டப்படுவதன்றோ ? இக் காரணங்களினாலே ஆரிய மொழியினை விரும்பிக் கற்று, அம்மொழியிலுள்ள சுக்கிர நீதி, மிருச்ச கடிகம் முதலிய சிறந்த நூல்களைத் தூய தமிழில் மொழிபெயர்த்து அச்சியற்றி நல்கியதற்காகத் தமிழுலகம் பண்டிதமணியாரைப் பாராட்டுகின்றது.

பண்டிதமணியின் அறுபதாம் ஆண்டு நிறைவு விழா
நிகழ்ச்சியும் பாராட்டும்
(பக்கம் - 32)
மதுரை 21-2-42
மதுரை மீனாட்சி ஆலயின் ஆட்சித் தலைவர்
திருவாளர்
**கருமுத்து தியாகராசச் செட்டியார் அவர்களால்**
வெளியிடப்பட்டது.

# அண்ணுமலைப்பல்கலைக் கழகப் புரவலரும், புலவரும்.

க. தா. நந்தகோபால், எம். ஏ., சென்னை.

பேரறிஞர்களாக இருந்தவர்கள் அனைவரையும் தம் பல்கலைக் கழகத்தில் பணியாற்றச் செய்து, அவர்களை உயர்த்தி மகிழும் பேருளம் படைத்த செட்டிநாட்டரசர், பண்டிதமணி எனும் நந்தா விளக்கில், பல்கலைக்கழகப் பணி எனும் திரியிட்டு, ஆதரவு எனும் எண்ணெய் ஊற்றித் தமிழகமே அறிவொளி பெறும்படி செய்தார்.

தமிழகம் ஈன்றெடுத்த நல்முத்தாம், நாடே அறியும் சிந்தனைச் சிற்பி மகாமகோபாத்தியாயர் பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் அவர்களின் தமிழ்த்தொண்டு பொன்னெழுத்துக்களில் பொறிக்கப்பட வேண்டியதாகும். அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் பணிபுரியும் பேறு பெற்ற நான் கண்ட அறிவுச்செம்மல், ஞான ஒளி, பேராசிரியர் பண்டிதமணியைப் பற்றி இக்கட்டுரையில் வரைய முனைந்துள்ளேன்.

'பயிலும் நிலை இன்றியே பயிலுவிக்கும் கலையை எங்ஙனம் கற்ருரோ?' 'பாடநூல் எனும் துடுப்பின்றியே அறிவுக்கடலின் எதிர்க் கரையை அடைந்தவரன்ருே? இது இயற்கை தந்த வரமா ? அல்லது நாவுக்கரசரின் வழியில், தமிழன்னை யால் ஞானப்பால் ஊட்டப் பெற்றவரா?'

இத்தகைய வினுக்களைத் தன் நாவன்மையைக் கேட்போர் மனத்தில் ஒரே சமயத்தில் தோற்றுவிக்கும் வியத்தகு புலமையைப் பெற்றவர் இக்கவி. 'அளக்கலாக அளவும் பொருளும்' உடைய இவரது அறிவின் திறம் ஒவ்வொரு நாளும் புதியதாகவே தோன்றியது.

பண்டிதமணி 1934-ஆம் ஆண்டு அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் ஆசிரியர் பணி ஏற்ருர். பாடஞ் சொல்வதில் இந்நாவலர் பெருந்தகைக்குச் சலிப்பே உண்டாவதில்லை. தமக்குத் தெரிந்தவற்றை யாவரும் அறிந்துகொள்ள வேண்டும் எனும் உபகாரச் சிந்தையுடையவர். அனைவரும் ஓய்வு பெறும் வயதினிலே பல்கலைக் கழகத்திலே பணியேற்ற இவர், பாடம் சொல்லிக் கொடுக்கும் வன்மை யாரும் மறக்க முடியாத ஒன்று. அவர் பாடம் நடத்தும் பாணி, கடினமான பகுதிகளையும் மாணவர் மனத்தில் பசுமரத்தாணி போல் பதியும்படி செய்யும் பாடலின் நயத்தைச் சொற்சாதுரியத்துடனும், நகைச்சுவையுடனும் விளக்கும் இவருடைய திறமை யாரும் எளிதில் பெற முடியாத ஒன்ருகும்.

பண்டிதமணி அவர்கள் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்திலே தமிழ் விரிவுரையாளராகவும் தமிழ்ப் பேராசிரியராகவும், தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவராகவும் பத்து ஆண்டுகள் முடிசூடா மன்னரைப் போல் பணியாற்றினர். ஆங்கிலப்பட்டம் பெருவிடினும், அம்மொழியில் பல அலுவல்களையும் திருத்தத்துடன் செய்யும் திறமை கொண்டிருந்தார். அண்ணுமலைப் பல்கலைக் கழகத்திலும், சென்னை, மைசூர், திருவனந்தபுரம் பல்கலைக் கழகங்களிலும் பாடப் புத்தகக் குழு, பரீட்சகர் குழு ஆகியவற்றின் தலைவராகவும், உறுப்பினராகவும் பணியாற்றியிருக்கிருர். அண்ணுமலை பல்கலைக் கழகப் பேரவை, கல்விக்குழு ஆகியவற்றிலும் உறுப்பினராகப் பணியாற்றியிருக்கிருர். இவர் ஆற்றிய தமிழ்ப் பணிக்குச் சிகரம் வைத்தாற்போல் அமைவது, இவரால் நிறுவப்பட்ட அண்ணுமலை நகர் மணிவாசகர் மன்றமும், தில்லைத் தமிழ்க் கழகமும் ஆகும்.

பேரவைகளிலே அறிவுடைச் சான்ருேர்கள் வியக்கும் வண்ணம் காப்பியச் சுவைகளை எடுத்துரைக்கும் புலமையும், இனிமை சுரக்கும் பாடல்கள் இயற்றும் திறமையும், கருத்துச் செறிவுடைய கட்டுரை வரையும் இவர் பாணியும், வடமொழி நூல்களைத் தமிழில் மொழி பெயர்க்கும் புலமையும் இவருக்கு இறவாத புகழை அளித்துவிட்டது. பண்டிதமணி அவர்கள் சோதிடப் புலமை உடையவர். நாடகக் கலைஞர். சிலேடை நயத்தொடு பேசி, பிறரை நகைச்சுவையில் ஆழ்த்துவதில் தனித் தன்மை கொண்டவர்.

கௌடலீயம் என்ற அர்த்த சாஸ்திர வடமொழி நூலைத் தமிழில் மொழி பெயர்க்கும்படி இவரை வேண்டிக்கொண்ட அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தாரின் விருப்புக்கேற்ப பண்டிதமணி அவர்கள் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்திற்கு ஆராய்ச்சித் தலைவராக மீண்டும் அமர்ந்து மொழி பெயர்ப்பினை வெற்றிகரமாகச் செய்தார். இம்மொழிபெயர்ப்பு பண்டிதமணி அவர்களின் இருமொழிப்புலமையையும், மொழிப்பெயர்ப்பு வன்

மையையும் நன்றாகக் காட்டுகிறது. இவரால் எழுதப்பட்ட "சுக்கிர நீதி" என்னும் பேரிலக்கியத்தை வெளிப்படுத்திப் பேராதரவு தந்த பெருமகனார் இராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களைப் பற்றிக் குறிப்பிடாமல் இருக்க முடியாது. இவர் கடிதத் தொடர்பு கொண்டிருந்த புலவர்களுக்குப் பாடல்களாகவே இவர் கடிதங்கள் எழுதியிருப்பது இவரது தமிழ்மொழிப் பயிற்சியைத் தெரிவிக்கின்றன. மற்றும், மேலைச்சிவபுரி பிள்ளையார் மீது பதிற்றுப்பத்தந்தாதி பாடியுள்ளார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலே தொண்டாற்றியபோது தமிழிசை வெளியீடுகளுக்கெனப் பண்டிதமணி பல பாடல்களைப் பாடியிருக்கிறார். "செட்டிநாட்டரசர் இசைமாலை" என்னும் நூல் ஆண்டுதோறும் நிகழும் அண்ணாமலை அரசர் பிறந்த நாள் விழாவுக்குப் பண்டிதமணி இயற்றிய தொகுப்பேயாகும்.

தமிழிலே பெரும்புலமை பெற்ற பண்டிதமணி அவர்கள் திருவாசகத்திற்கு உரை எழுதும் தெய்வப்பணி ஏற்று முடித்தவர். "அண்ணாமலைப் பல்கலைக்கழகம் வாழ வேண்டுமானால் இந்த அறிவுச் சுடர் விளக்கம் எழுதுவதற்கு இடம் கொடுத்த ஒன்றே போதும்," என்று தெளிவாக மனமுவந்து பன்மொழிப்புலவர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் கூறிய வாக்கு நினைவுக்கு வருகிறது.

பண்டிதமணியின் வியக்கத்தகு புலமையைப் பல முறைகள் அண்ணாமலை அரசர் பாராட்டியுள்ளார். அவருடைய ஆற்றலையும், பெருமையையும் வெளியுலகிற்குப் பரப்புவதற்கு ஒரு தூண்டுகோலாக அரசர் இருந்தார் என்று கூறுவது சாலப் பொருந்தும்.

சிறந்த முறையில் மொழிப்பணியாற்றுபவர்க்கு அரசியலார் வழங்கும் மகாமகோபாத்தியாயர் என்ற பட்டம் இவருக்கு வழங்கப்பட்டது. இதற்காக முழு முயற்சியும் செய்தவர் இராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களே. வடமொழியிலும் பண்டிதமணி புலமை பெற்றிருப்பதால் பல்லாண்டுகளுக்கு முன்னரே இப்பட்டம் வழங்கப்பட்டிருக்க வேண்டும் என்பதை அப்போது குமாரராஜாவாக இருந்த டாக்டர் இராஜா சர் முத்தைய செட்டியார் அவர்கள் மாநிலக் கவர்னரிடம் தெரிவித்தனர். 28-2-1955-இல் டாக்டர் சோமசுந்தர பாரதியாருக்குப் பொன்னாடை போர்த்திய போது இராஜா சர் முத்தைய செட்டியார் அவர்கள் புலவர்களைச் சிறப்பிக்கும் தமிழ்ப் பட்டத்தை அரசியலார் ஏற்படுத்த வேண்டும் என்று வேண்டிக்கொண்டதை இங்கு குறிப்பிட்டே ஆகவேண்டும். தமிழ்ப்புலவர்கள் பண்டிதமணிக்கு வழங்கிய முதுபெரும் புலவர் என்ற பட்டமும் இராஜா சர் முத்தைய செட்டியார் அவர்களின் தலைமையிலேயே சூட்டப்பட்டது.

1940-இல் பண்டிதமணியின் உருவச்சிலை இராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. படத்திறப்பன்று பண்டிதமணி அவர்கள் "நிகரற்ற செல்வமும், அறிவும் ஆட்சித்திறனும் அமைந்த பெருங்கொடை வள்ளலாகிய கனம் செட்டிநாட்டு இராஜா அவர்கள் உள்ளத்தில் எனக்கும் ஓர் இடம் அளித்துச் சிறப்பித்து வரும் பெருமையே நான் அடைந்துவரும் சிறப்புக்களில் எல்லாவற்றிலும் தலைசிறந்ததாகும்" என மனமுருகி இராஜா ஸர் அவர்களைப்பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார்.

தமிழகத்தில் தமிழ் மணம் பரப்ப இத்தகைய புலவர் பெருமானைத் தோற்றுவித்த இறைவன், அதே சமயத்தில் அவர் புகழ் மணம் பரப்பப் புரவலர் பெருந்தகை இராஜா சர் அண்ணாமலைச் செட்டியாரையும் தோற்றுவித்த விந்தையினை என்னென்று புகழ்வது!

★ **31-5-1944-இல் வலம்புரியில் நிகழ்ந்த தமிழிசை மாநாட்டுத் தலைவர், பண்டிதமணி திரு. மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் கூறிய முன்னுரைச் சுருக்கம்**

சிறப்பு வாய்ந்த தமிழிசை இடைக்காலத்தில் தமிழ்மக்களின் விழிப்பின்மையாலும், தெலுங்கர் முதலிய வேற்று மொழியாளர்கள் தமிழ்நாட்டில் செய்த முயற்சியாலும், தன் ஆக்கம் குன்றுவதாயிற்று சிறப்பாகத் தெலுங்குப் பாடல்களும், பொதுவாக வேறு சில மொழிப் பாடல்களும், தமிழ் நாட்டில் பெரிதும் இடம் பெறலாயின. இயற்பாக்களின் பொருள் உணர்ச்சியில் தலைப்படுதற்கு ஆற்றலில்லாத தமிழ் மக்கள் தனி இசையிலும், வேற்று மொழி இசைப்பாடல்களிலும் விருப்பத்தைச் செலுத்திப் போலியான இன்பத்தை அடைந்து வரலாயினர். எந்நாட்டில் எம்மொழி வழங்குகின்றதோ அந்நாட்டில் அம்மொழியிலேயே இசைப்பாடல்கள் இருக்க வேண்டுமென்பது மறுக்கொணாததொன்று.

பக்—3

## பண்டிதமணியின் இலக்கிய நயங்கள்

திரு. பூ. ஆலால சுந்தரனுர், M.A.,
சிறப்புத் தமிழ்ப் பேராசிரியர், சென்னை கிறித்தவக் கல்லூரி.

அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் 1931-ஆம் ஆண்டு தமிழில் முதுகலை வகுப்பு (B.A. (Hons.) Tamil Language and Literature) தொடங்கப் பட்டது. செட்டிநாட்டு அரசர் இராஜா சர் M. A. முத்தைய செட்டியார் அவர்களின் அன்பின் பயனுலும், அவர் எனக்கு அளித்த ஆக்கத்தாலும் ஊக்கத்தாலும் யான் 1931-ஆம் ஆண்டு தமிழ் முதுகலை வகுப்பில் (B A.(Hons.) Tamil) மாண வனுகச் சேர்ந்தேன். 1934-ஆம் ஆண்டில் நாங்கள் எழுவர் முதுகலை வகுப்பு(B.A. Hons). பல்கலைக் கழகத் தேர்வில் சிறப்பாக வெற்றி பெற்ருேம். சந்திர குப்த மன்னரின் அவைக்களத்தில் நவமணிகள் எனப் பெயர் பெற்ற காளிதாசன் முதலிய ஒன்பது மேதையர் விளங்கினர் என இந்திய வரலாறு கூறும். அதைப் போலவே, அண்ணுமலை அரசரால் நிறுவப்பட்ட அண்ணு மலைப் பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறையில் நவமணிகள் எனக் கருதத்தக்க ஒன்பது தமிழ்ப் பேறறிஞர் விளங்கினர். சுவாமி விபுலானந்தர், டாக்டர் S. சோமசுந்தர பாரதியார், மகாமகோ பாத்தியாய, பண்டிமணி மு. கதிரேசன் செட்டி யார், டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை, நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டார், திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த பொன் ஓதுவார், சர்க்கரை இராமசாமிப் புலவர், கந்தசாமியார், இந்திய வரலாற்று ஆசிரியர் எஸ். கே. கோவிந்தசாமிப் பிள்ளை ஆகிய ஒன்பதின்மரும் எங்களுக்கு ஆசிரி யராக விளங்கினர்.

எங்கள் ஆசிரியப் பெருந்தகை பண்டிதமணி அவர்கள் வடமொழியினையும் தமிழ் மொழி யினையும் எழுத்து எண்ணிப் படித்தவராவர். வடமொழியிலுள்ள "மிருச்சகடிகா" என்ற நாடகத்தினை அவர் "மண்ணியல் சிறுதேர்" என்ற தலைப்பில் மொழி பெயர்த்தனர். "சுக்ர நீதி", "சுலோசனை", "உதயண சரிதம்" முதலிய நூல்கள் இவரது மொழிபெயர்க்கும் திறனை விளக்குகின்றன. கௌடல்யர் அர்த்த சாஸ் திரத்தினையும் இவர்கள் தமிழில் மொழிபெயர்த் துள்ளனர். இவர்களது கட்டுரைகள் சமயக் கட்டுரைகள், இலக்கியக் கட்டுரைகள் என இரண்டு பகுதிகளாக வெளியிடப்பட்டுள்ளன. இதுவன்றித் திருவாசகத்திலுள்ள திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம், திருவெம்பாவை என்ற பகுதிகளுக்குக் கதிர்மணி விளக்கம் என்ற தலைப் பில் அரிய உரை எழுதி வெளியிட்டுள்ளார்கள். அவர் நகைச்சுவை தோன்றப் பேசுவதிலும் இலக்கிய நயம் காண்பதிலும் தமக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாராய் விளங்கினர் என்பதைத் தமிழ்நாடு நன்கு அறியும். இத்தகைய அரிய புலவர் பெருமானைத் தமிழ்நாடு நன்கு பயன் படுத்திக்கொள்ளவில்லை என்றே கருத வேண்டியுள்ளது. மண்டிதமணி அவர்களைக் கொண்டே திருவாசகம் முழுமைக்கும் உரை எழுதும்படி செய்திருக்கலாம். பண்டிதமணி அவர்கள் கலைச்செல்வமும் பொருட்செல் வமும் அருட்செல்வமும் பெற்றவர்கள். அவர் சொற்பொழிவு ஆற்றும்போது அவரது தித்திக் கும் மணிவார்த்தைகள் கேட்போர் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன என்பேனுகில் அது புனைந்துரையன்று.

12-10-41இல் நடைபெற்ற பண்டிதமணி அவர் களின் மணிவிழா வாழ்த்துச் செய்தியில் திரு. வி. கலியாணசுந்தரனுர் அவர்கள் கூறியதை ஈண்டு நினைப்பூட்ட விழைகின்றேன். "பண்டித மணியின் புலமையில் பல திறச் சிறப்புக்கள் உள்ளன. அவைகளுள் குறிக்கத்தக்கது ஒன்று. அது பாட்டின் நுகர்ச்சி:- திரு. செட்டியார் காவியங்களைப் பயிலுந்தோறும் பயிலுந்தோறும் பாவுள்ள இடங்களில் அவர் பாக்களுடன் இரண்டறக் கலப்பர்...கதிரேசனுர் காவியக் கடலில் மூழ்கி மூழ்கித் திளைத்துத் திளைத்து இருமையற ஒன்றி ஒன்றி அக்காவியக் கடலான வர் என்று கூறல் மிகையாகாது. கதிரேசனுர் காவியமானுர். காவியம் அவராயிற்று." பண்டிதமணி அவர்கள் நகைச்சுவை தோன்றப் பேசும் இயல்பினைப் பெற்றவர். ஒரு நாள் ஒரு வீட்டில் அவருக்குப் பால் கொடுத்தார்கள். அதில் ஒரு எறும்பு கிடந்தது. அதைக் கண்ட பண்டிதமணி அவர்கள் பாலில் எறும்பு கிடக்

கிறது என்று கூறுமல் "பாற்கடலில் சீனிவாசன் பள்ளி கொள்கின்ருன்" எனக் கூறிஞராம்.

பண்டிதமணி அவர்கள் புலமை நயத்தினையும் நுண்மாண் நுழைபுலத்தினையும் விளக்கச் சில சான்றுகளை இனிக் காண்போம். அவர் 16-4-1944-இல் சென்னைக் கம்பர் மாநாட்டுத் தலைமையுரையில் கூறிய கவி நயங்கள் என்றும் படித்து இன்புறத்தக்கன. கம்பர் காவியத்தின் செய்யுள் நடையில் எளிமை, இனிமை, ஆழம் உடைமை என்னும் மூன்று குணங்களையும் காணலாம் என்பதை அவர்கள் நன்கு விளக்கிக் காட்டினர்கள். கம்பர் கோசல நாட்டின் சிறப்பினைக் கூறும் போது,

**"வண்மை இல்லையோர் வறுமை இன்மையால்**
**திண்மை இல்லைநேர் செறுநர் இன்மையால்**
**உண்மை இல்லைபொய் உரைஇ லாமையால்**
**வெண்மை இல்லைபல் கேள்வி மேவலால்"**

எனப் பாடியுள்ளார். இப்பாடலில் உள்ள சொற்களைப் படிக்கும் போதே பதப்பொருள் வெளிப்பட்டுக் கிடப்பதால் இப்பாடலின் எளிமை நன்கு புலப்படுகின்றது. இப்பாட்டினைப் படிக்கும் போது சொல் இனிமையும் பொருள் இனிமையும், ஓசை இனிமையும், தொடர் இனிமையும் தோன்றுவதால் இதில் இனிமை விளங்கக் காணலாம். இனி, இப்பாட்டிலுள்ள ஆழம் உடைமை எங்ஙனம் அறிய முடியும் என்பதைப் பண்டிதமணி அவர்கள் நன்கு விளக்கியுள்ளார்கள். கல்வி, தறுகண், இசைமை, கொடை என நான்கும் பெருமிதச் சுவைக்கு நிலைக்களனும் என்பர் தொல்காப்பியர். இதனை,

**"கல்வி தறுகண் இசைமை கொடையெனச்**
**சொல்லப் பட்ட பெருமிதம் நான்கே"**

என்ற நூற்பா விளக்குதல் காண்க. பெருமிதம் என்பது வீரமாகும். பெருமிதச் சுவை கல்வி, அஞ்சாமை, புகழ், கொடை என்ற நான்கு பற்றித் தோன்றும் என்பர் தொல்காப்பியர். கோசல நாட்டு மக்களின் பெருமிதத்தினை விளக்க வந்த கம்பர், அவர்களிடத்தில் கல்வி, அஞ்சாமை, புகழ், கொடை என்ற நான்கு பண்புகளும் அமைந்திருந்தன என்பதனை மேலே காட்டிய பாட்டில் விளக்கியுள்ளார். கோசல நாட்டில் வறுமை என்பதே இல்லாமையால் அங்குக் கொடைச் சிறப்புத் தெரிவதில்லை. இதனைக் "கொள்வாரில்லாமையால் கொடுப்பார்களும் இல்லை மாதோ" என்று மற்றோர் இடத்திலும் கம்பர் குறிப்பிட்டுள்ளார். கோசல நாட்டில் பகைவர் இல்லாமையால் மக்கள் வீரம் விளங்க வாய்ப்பில்லை. அங்கு மக்கள் பொய் பேசுதல் இல்லாமையால் உண்மையின் சிறப்புத் தெரிவதில்லை. மேலும், அங்குள்ளவர் கேள்வி ஞானம் பெற்றதனுல் அறியாமை என்பதே அங்கு இல்லை எனக் கோசல நாட்டு மக்களின் சிறப்பினைக் கம்பர் விளக்கியுள்ளார். மேலே காட்டிய பாடலில் "வண்மை இல்லையோர் வறுமை இன்மையால்" என்பதனுல் கொடையும், "திண்மை இல்லைநேர் செறுநர் இன்மையால்" என்பதனுல் அஞ்சாமையும், "உண்மை இல்லை பொய் உரை இலாமையால்" என்றதனுல் புகழும், "வெண்மை இல்லைபல் கேள்வி மேவலால்" என்றதனுல் கல்வியும் புலனுதல் அறிக. இங்கு இசைமை பற்றிய புகழ் வெளிப்படையாகக் கூறப்படவில்லையே என ஐயுறுவார்க்குப் பண்டிதமணி அவர்கள் பொய்யாமையால் புகழ் உண்டாகும் என்ற கருத்தினை, "பொய்யாமை யன்ன புகழில்லை" என்ற திருக்குறளை மேற்கோளாகக் காட்டியுள்ளனர். மேலும், கம்பர் தசரதனைப் பற்றிக் கூறும் போது, "பரவு மெய்யினுக்கு உயிரளித்து உறுபுகழ் படைத்தோன்" எனக் கூறி, அவன் மெய்ம்மையை நிலை நிறுத்தற்பொருட்டு உயிரைக் கொடுத்துப் புகழை நிலை நிறுத்தினன்" என்பதனையும் எங்கள் ஆசிரியப் பெருந்தகை எடுத்துக் காட்டியுள்ளார். இதனுல், ஆழம் உடைமை என்பது இப்பாட்டில் அமைந்துள்ளது என்பதனை அறிகிருேம். பெருமிதச் சுவை பற்றி மேலே காட்டிய தொல்காப்பிய நூற்பாவினை நினைவில் வைத்துக் கொண்டு, கம்பர் கோசல நாட்டு மக்களின் பெருமிதப் பண்பினை விளக்கியுள்ளார் எனப் பொருத்திக் காட்டிய நயம் பண்டிதமணி அவர்களின் நுண்மாண் நுழைபுலத்தினை விளக்குவதாகும்.

பண்டிதமணி அவர்கள் சங்க நூல்கள், இதிகாசங்கள் முதலியவைகளில் மட்டுமன்றி, சமய நூல்களிலும் நயம் காணும் புலமை பெற்றவர் என்பதற்கு ஒரு சான்று கூற விழைகின்றேன். திருநாவுக்கரசர் பாடிய திருக்குறுந்தொகைப் பாடல் ஒன்றில், இறைவன் விறகில் தீயைப் போலவும், பாலில் நெய்யைப் போலவும், மணியில் ஒளியைப் போலவும் மறைந்துள்ளான் என்றும், நாம் அன்பு என்ற கோலை நட்டு, உணர்வு என்ற கயிற்றினுல் முறுக வாங்கிக் கடைந்தால் அவன் நம்முன் தோன்றி அருள் செய்வான் என்றும் கூறப்பட்டுள்ளது. இதனைத் திருநாவுக்கரசர்,

**"விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்**
**மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்**
**உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினுல்**
**முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே"**

என்ற திருப்பாடல் மூலம் நமக்கு விளக்கிக் காட்டியுள்ளார். இத்திருப்பாட்டில் வந்துள்ள "முறுக வாங்கிக் கடைய" என்ற தொடருக்கு, நன்றாகக் கடைய வேண்டும் என்று எல்லோரும் பொருள் சொல்வர். ஆனல்பண்டிதமணி அவர்கள்

கள் அத்தொடருக்குச் சிறந்த நயம் காட்டியுள்ளார். விறகில் நெருப்பு மறைந்துள்ளது. அதனை முறுகக் கடைந்தால்தான் நெருப்புத் தோன்றும். பாலில் நெய் மறைந்துள்ளது. அதனை வாங்கிக் கடைந்தால்தான் நெய் பெறலாம். மணியில் ஒளி உள்ளது. ஆனால், பூமியினின்று எடுத்த மணியினை நன்ருகக் கடைந்தால்தான் அதில் ஒளி தோன்றும். எனவே, விறகு, பால், மணி—இவற்றுள் மறைந்து நிற்கும் தீ, நெய், ஒளி என்ற இவைகளை முறுகக் கடைதல், வாங்கிக் கடைதல், கடைதல் என்பன வற்ருல் வெளிப்படுத்த இயலும். "முறுக வாங்கிக் கடைய" என்ற தொடரினை மூன்று பொருள்களுக்கும் பொருத்திக்காட்டிய நயம் பண்டிதமணி அவர்களைச் சார்ந்ததாகும்.

பண்டிதமணி அவர்களின் நினைவுச் சின்னமாக மகிபாலன்பட்டியில் மணி மண்டபம் அமைத்தல் சாலவும் போற்றத் தக்கது. இதனேடு, பண்டிதமணி அவர்களின் உருவம் அமைந்த தபால் தலையினை (Stamp) இந்திய அரசாங்கத்தார் வெளியிட வேண்டும் என்பது எனது அவா. பண்டிதமணி அவர்களின் புகழ் வாழ்க! வளர்க!

## விவாக முறை



நம்மவர் விவாக முறையைப் பற்றிச் சில ஆராய வேண்டுதலவசியமாகின்றது. விவாகமாவது பிரமசரியம், வானப் பிரத்தம், சன்னியாசம் என்று மூவகை நிலையினுள்ளாரும் அவரவரொழுக்க நெறிகளின் முடியச் செல்லுமளவும் அச்செலவிற்குப் பசி, நோய், குளிர், முதலியவற்ருன் வரும் இடையூறு வாராமல் உண்டியுமருந்தும் உறையுளு முதலியவுதவி அவ்வந்நெறியில் வழுவாமற் செலுத்தற்கும், பாதுகாப்பாரின்றித் துன்புறுவோர்க்கும் வறுமையாளர்க்கும் தென்புலத்தார்க்கும் முறையே களைகணுதற்கும், உணவு முதலிய கொடுத்தற்கும், நீர்க்கடன் முதலிய செய்தற்கும் உரித்தான இல்லறத்தை நடாத்தற்கு ஒரு தலைவனும் தலைவியுங்கூடுங் கூட்டமாகும். இம்மணம் எட்டு வகைப்படுமென்று நூல்கள் கூறுகின்றன. இவற்றுள் சில மணம் உயர்ந்த வருணத்தாரானும், சில மணம் இழிந்தவர்களானுங் கோடற்பாலனவாம். இவற்றுட் பிராசாபத்தியம் என்னு மணமே மகட்கொள்ளுவோரிடத்து கொடுப்போர் பரிசம் வாங்கலாமென்று விதிக்கின்றது. மற்றவை இங்ஙனம் விதித்தில. இனி, அப்பிரசாபத்திய விவாக விதியாற் கூறியாங்குப் பரிசம் வாங்குவதானல் எவ்வளவு வாங்கலாம்? அங்ஙனம் வாங்கியவற்றை யென் செய்யலாமெனின், வாங்கும் பரிசத்துக் கிரட்டி சேர்த்துத் தம் மகட்குக் கொடுத்துவிடல் வேண்டுமென்று அவ்விவாக விதி கூறுகின்றது. இதனை "அரிமத ருண்க ணயிழை யெய்துதற், குரியவன் கொடுத்த, வொண்பொரு ளிரட்டி, திரிவின்றந்தை திண்ணிதிற் சேர்த்தி யரியதன் கிளையோ டமைவரக் கொடுத்தல், பிரித லில்லாப் பிரசாபத்தியம்" என்னுஞ் சான்ருேர் கூற்ருனு முணர்க.

# என் ஆசிரியர்க்கு ஆசிரியர்

பேராசிரியர் வ. பெருமாள், எம்.ஏ., பி.டி., எம்.ஆர்.ஏ.எஸ்.,
தமிழ்ப் பேராசிரியர், முதல் நிலைக் கல்லூரி,
உரிகம், கோலார் தங்கவயல் (K.G.F.) கருநாடக மாநிலம்.

நான் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் முதுகலை வகுப்பில் மாணாக்கனாகப் பயின்ற போது எனக்குப் பேராசிரியப் பெருமக்களாகத் திகழ்ந்தோர் பலர். டாக்டர் அ. சிதம்பரநாதனார் அவர்கள் தமிழ்த்துறைத் தலைவராகவும், தலைமைத் தமிழ்ப் பேராசிரியராகவும் விளங்கினார்கள். ஈராண்டு நான் அவர்களிடம் தமிழ்ப் பாடம் கேட்கும் நல்வாய்ப்பும் பெரும்பேறும் பெற்றேன். என் பேராசிரியப் பெருமகனார்க்கு நல்லாசிரியராக விளங்கியவர் முதுபெரும் புலவர் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்கள். பண்டிதமணி அவர்கள் என் பேராசிரியர்க்குப் பேராசிரியர். வேறு வகையில் குறிப்பிட்டால், நான் பண்டிதமணி அவர்களின் மாணாக்கர்க்கு மாணாக்கன். என் பேராசிரியர் சிதம்பரநாதனார் தம் ஆசிரியரைப் பற்றி அவ்வப்போது உரைத்த நல்லுரைகள் என் உள்ளத்தில் இன்றும் பசுமையாகவே உள்ளன.

பண்டிதமணியின் பேருரையை நேரில் கேட்டு இன்புறும் பேறு எனக்குக் கிட்டவில்லை. அவ் விழப்பை ஓரளவு ஈடு செய்யும் வகையில் எழுத்து வடிவத்தில் அமைந்துள்ள அவர் பேருரைகளைப் படித்து இன்புற்றிருக்கின்றேன். அவ்வுரைகளைக்கொண்டு அறியலாகும் பண்டிதமணியின் பண்பு நலனையும் நுண்மாண் நுழை புலத்தையும் இவண் ஓரளவு சிந்திப்போம்.

### பண்பு நலன்

தாய்க்கு முதலிடம் அளித்த பெருமை நமக்கு உண்டு. 'மாதா பிதா குரு தெய்வம்'; 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்'; 'தாயிற் சிறந்த தொரு கோவிலும் இல்லை' முதலிய முதுமொழிகள் தாயின் அருமைபெருமையினை நன்கு விளக்குகின்றன. பண்டிதமணி அவர்கள் தம் உரைநடைக்கோவையை (இரண்டாம் பகுதி) தம் அன்னையார்க்குக் கடமையுணர்ச்சியுடன் உரிமையாக்கியிருக்கின்றார்கள்.

''என்னையின் றெடுத்தென் உடல்நலம் பேணி
இருந்தமிழ்ப் புலவர்தங் குழுவில்
துன்னியான் இருப்பக் கண்டுள மகிழ்ந்து
சொலற்கரும் உதவிகள் புரிந்து
முன்னையான் செய்த நல்வினைப் பேற்றின்
முதிர்ச்சியால் நெடிதுநாட் புரந்த
அன்னையி னருளை நினைவுறீஇ யுருகற்
கமையடை யாளமீ தாமால்''

என்னும் பண்டிதமணியின் மணியான பாடல் அவர்தம் அன்னையார்க்குக் காட்டியுள்ள நன்றியின் ஆழத்தை நன்கு புலப்படுத்துகின்றது.

'பணியுமாம் என்றும் பெருமை' என்பது பெரியோர்க்கு வள்ளுவர் வகுத்த இலக்கணம். இவ்விலக்கணத்திற்குச் சீரிய இலக்கியமாகத் திகழ்ந்தவர் பண்டிதமணி. கரந்தைத் தமிழ்ச் சங்கத்துப் பதினான்காம் ஆண்டு விழாத் தலைமைப் பேருரை ஆற்றியஞான்று பண்டிதமணி அவர்கள் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

'செந்தமிழ்த் தெய்வச் சீர்நலம் போற்றுதலே தன் முழு நோக்கமாக மேற்கொண்டு திருவருட் பாங்கால் தோன்றிய இக்கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் பதினான்காம் ஆண்டுத் திருவிழாவில் யான் தலைமை பெறத் தந்தது, சிறியேன்மாட்டு இச்சங்கத்தார் வைத்துள்ள பேரன்பின் பெருமையையே விளக்குவதாகும். இவ்வுரை அவர்தம் சீரிய பணிவுடைமைக்கு ஓர் எடுத்துக் காட்டாகும்.

பண்டிதமணியின் மற்றொரு சிறப்பியல்பு நடுநிலைப் பண்பாகும். பிற மொழியாளர் நம்

மொழியைப் பழித்துரைத்தால் நாம் எவ்வாறு நடுநிலை தவறாமல் செயல்பட வேண்டும் என்பதைப் பண்டிதமணியின் வாய்மொழி துணை கொண்டு இங்கு அறியலாம்.

'வேற்று மொழியாளர் அறியாமையால் நம் மொழியைப் பழித்துரைப்பாராயின், தக்கவாறு ஏதுக்களைக் காட்டி, உண்மை நிலை உரைத்து, அவரை நன்னெறிப்படுத்த முயலல் வேண்டும். அந்நெறிக்கு வாராராயின் 'நெறியின் நீங்கியோர் நீரல கூறின், அறியாமை என்று அறிதல் வேண்டும்', என்றாங்கு, அவர் தன்மைக்கு இரங்கி யொழிதலே நாம் மேற்கொள்ளற்பாலதாம். இங்ஙனமல்லாமல், நாமும் அவரியல்பைக் கைப் பற்றி, அவர் மொழிக்கண் இல்லாத குறைகளை ஏறிட்டுப் பழித்துரைத்தல் நடுநிலை திறம்பாத் தமிழ்க் குடியிற் பிறந்த நமக்கு ஒல்லாததொன்றும்.'

பிறர் அறியாமையால் செய்யும் பிழையை நாம் பொறுத்துக்கொள்ளல் வேண்டும் என்னும் அவர்தம் சீரிய அறவுரை, அவரது பரந்த நோக்கத்தையும் நடுநிலைப் பண்பையும் தெளிவாக்குகின்றது.

பண்டிதமணியின் பண்பு நலன் பல இருப்பினும், விரிவஞ்சி, அவற்றுள் அன்னையார்பால் காட்டிய ஆழ்ந்த நன்றி, பணிவுடைமை, பரந்த நோக்கத்தில் விளைந்த நடுநிலைமை ஆகிய மூன்றையும் இவண் சுருக்கமாகக் கண்டோம். இனி, அவருடைய புலமை நலத்தை ஓரளவு காண்போம்.

பண்டிதமணி அவர்களது நுண்மாண் நுழை புலத்தை தமிழ் உலகம் முழுவதும் நன்கு அறியும். ஒரு பாடலை ஆராய்கின்ற போது, அதன் பதவுரை, பொழிப்புரை ஆகியவற்றுடன் மட்டும் நின்றுவிடாமல் அதன் விளக்கவுரை, அகலவுரை, நுட்ப உரை, நயவுரை, சிறப்புரை ஆகிய அனைத்தையும் பண்டிதமணி அவர்கள், தம் ஆழ்ந்தகன்ற நுண்ணிய கூரறிவினால் செம்மையாக ஆராய்ந்து விளக்கும் வன்மை பெற்றவர். 'பொருப்பிலே பிறந்து, தென்னன் புகழிலே கிடந்து' என்னும் பாடலை ஆய்ந்த பண்டிதமணி அவர்கள், முத்தொள்ளாயிரத்தை உளத்தில் கொண்டு, 'பொருப்பிலே பிறந்து' மூவர் புகழிலே கிடந்து' என்று பாடியிருத்தல் வேண்டும் என்று உண்மை உரை கண்டார்.

பண்டிதமணி அவர்கள் 'புலமைக்கு வகுத்த சீரிய இலக்கணம் சிந்தைக்குப் பெருவிருந்தாக அமைந்திருக்கின்றது. அதனை அவர் வாசகத்தின் வாயிலாகவே காண்போம் :

' ஒரு நூலை ஆசிரியர்முகமாகக் கற்ற அளவினானும் இயன் முறை தெரிக்கும் நூற்பாக்களையும் எடுத்துக் காட்டாஞ் செய்யுட்பகுதிகளையும் சொற்பொருள் அறிந்துகொள்ளும் அவ்வளவினானும் புலமை நிரம்புவதன்று. இவ்வெல்லாம், சிறந்த புலமையின் உறுப்புக்களாமன்றி உறுப்பியாகா. ஒன்றனை ஊன்றிப் படிக்குங்கால், படிக்கப்படுஞ் சொற்குழுவினின்று உணரப்படும் பொருட்கண் உள்ளம் உறைத்து நிற்ப, சார்ந்ததன் வண்ணமாந் தன்மைத்தாகிய உயிர், அவ்விழுமிய பொருட்கண் பிரிப்பின்றிக் கலந்து அப்பொருட்பயனை நுகர்தலும், நுகர்ச்சிக்குப் பின் வெளியுலகத்து மீண்டு நினைவுகூர்தலும், தீர்ந்த உண்மைகளைக் கடைப்பிடித்துத் தம் குறிக்கோளாக ஒழுக்கியலின் மேற்கோடலும் மேற்காட்டிய உறுப்புக்களோடு இயைபுமாயின், ஒருவாறு புலமை நிரம்பியதாகக் கொள்ளலாம் '

இவ்வாறு புலமைக்கு இலக்கணம் வகுத்திருக்கின்றார் பண்டிதமணி. அவர், புலமைக்கு இலக்கணம் வகுத்ததோடு அமையாது, புலமையின் குறிக்கோளையும் நன்கு தெளிவுபடுத்தியுள்ளார். அவர் சுட்டிய புலமையின் குறிக்கோள் பின்வருமாறு :-

'புலமையின் குறிக்கோள் உலகியற்பொருளளவின் இருப்பின், அது சிறுமை எய்திமாசுடையதாகும். அறிவை ஒளி வலியுடையதாக்கி, அகலமுறச் செய்து, அவ்வகன்ற ஒளி விளக்கத்தின்கண்ணே முன்னர்க் காணப்படாதனவும், உலப்பிலா இன்ப விளைவிற்கேற்றனவுமாகிய அரிய பல நுண்பொருள்களை அகக்கண்ணுக் கண்டு இன்புறுதலாகிய வாழ்க்கையே புலமை வாழ்க்கையாகும் !

புலமையின் குறிக்கோள் மிகவும் உயர்ந்திருத்தல் வேண்டும். அதனை வயிற்றுப் பிழைப்புற்காகப் பயன்படுத்தல் கூடாது. இதனைப் பண்டிதமணி, 'புலமையை உடலோம்பற்கு வேண்டிய பொருளளவிற் பயன்படுத்த எண்ணுதல் பொற்கொழுக்கொண்டு வரகுக்கு உழ எண்ணுவதனோடு ஒக்கும்' என்னும் உவமையைச் சுட்டிக் காட்டி நினைவுபடுத்தியுள்ளார். பண்டிதமணியின் வாழ்க்கை நூற்றுக்கு நூறு புலமை வாழ்க்கையாகத் திகழ்ந்தது என்பதற்கு இவை யாவும் தக்க சான்றுகளாக அமைந்திருக்கின்றன.

என் பேராசிரியப் பெருமகனார் டாக்டர் அ. சிதம்பரநாதனார், தம் நல்லாசிரியரிடமிருந்து பாராட்டுதல் பெற்றது போல, நானும் என் பேராசிரியப் பெருந்தகையிடமிருந்து அவ்வப்போது பாராட்டுதல் பெற்றிருக்கின்றேன் என்பதை மிக்க பணிவுடன் குறிப்பிட விரும்புகின்றேன். பண்டிதமணி உருவாக்கிய ஆசிரியர்-மாணவ அறிவுப் பாரம்பரியம் தமிழகத்துடன் மட்டும் அமைந்துவிடாமல் தமிழ் உலகம் முழுவதும் பரவியுள்ளது. அப்பாரம்பரியம் சிறந்தோங்கி வாழ்க; வெல்க; உயர்க.

## பண்டிதமணி கதிரேசச் செட்டியாரும் தென்னிந்தியப் பிராமணர்களும்

மகிபாலன்பட்டி முதுபெரும் புலவர் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்கள், 1933 எப்பிரல் 1, 2-ஆம் நாள்களில் இலங்கை யாழ்ப்பாணம் ஆரிய திராவிட பாஷாபிவிருத்தி சங்கத்தின் பதினேராவது ஆண்டு நிறைவு விழாவில் தலைமை ஏற்றுத் தமது தலைமையுரையில்,

> "தென்னிந்தியாவிலுள்ள பிராமணர் ஒரு வகுப்பாராகவே இருந்து தமிழைத் தாழ்த்தியடக்கியும் சமஸ்கிருதத்தை ஆதரித்துயர்த்தியும் வருகின்றனர். எனவும், சென்னை, அண்ணாமலை என்னும் இரு பல்கலைக் கழகங்களிலும் பிராமணர் வலுத்த கட்சியாயிருந்து அத்துணை பலமாகத் தமிழுக்குத் தடை செய்து வருவதால் தமிழர்கள் தங்கள் தாய்மொழியின் நிலையினை உயர்த்துவதற்கு ஒன்றுமே செய்துகொள்ள முடியாதவராகின்றனர் எனவும்''

தமது பட்டறிவிற் கண்டதை உள்ளபடியே கூறினர்.

இச்செய்தியினைக் கீழே காணப்பெறும் யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரி சமஸ்கிருதப் பேராசிரியர் * திரு. என். நாராயணன், பி.ஏ., பி.எல்., எல். டி., சென்னை அட்வொகேட் எஸ். சத்தியமூர்த்தியவர்கட்கு 3—4—33-இல் எழுதிய கடிதத்தாலும் திரு. சத்தியமூர்த்தியவர்கள் 14—4—33-இல் திரு. என். நாராயணனுக்கு எழுதிய மறுமொழிக் கடிதத்தாலும் அறிவீர்கள்,

யாழ்ப்பாணம், இந்துக் கல்லூரி,
வண்ணார்பண்ணை (சிலொன்)
3, ஏப்ரல், 1933.

என். நாராயணன், பீயே, பியெல், எல்.டி.,
ஸம்ஸ்கிருத பேராசிரியர்.

அன்பார்ந்த ஐயா,

யாழ்ப்பாணம் ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கத்தின் பதினேராவது ஆண்டு நிறைவு விழா தென்னிந்தியாவில் ராமநாதபுரம் ஜில்லாவைச் சேர்ந்த மகிபாலன்பட்டி(யிலிருக்கும்) **யாரோ மிஸ்டர் கதிரேசச் செட்டியார்** என்னும் ஒருவரது தலைமையில் எப்ரல் 1-ஆம் 2-ஆம் தேதிகளில் நடைபெற்றது. முதலாந்தேதி காலையில் குறிப்புரைகளாக அவர் நிகழ்த்திய பேச்சில், 'தென்னிந்தியாவிலுள்ள பிராமணர் ஒரு வகுப்பாராகவே, தமிழைத் தாழ்த்தியடக்கியும் ஸம்ஸ்கிருதத்தை ஆதரித்துயர்த்தியும் வருகின்றனர்' எனக் கூறினர். இன்னும் சென்னை, அண்ணமலை என்னும் இரு சர்வ கலாசாலைகளிலும் பிராமணர் வலுத்த கக்ஷியாயிருந்து அத்துணை பெலமாகத் தமிழுக்குத் தடை செய்வதால் தமிழர்கள் தங்கள் தாய்ப்பாஷையின் அந்தஸ்தை உயர்த்துவதற்கு ஒன்றுமே செய்துகொள்ள முடியாதவர்களாகின்றனர் எனவுங் கூறினர்.

எப்ரல் 2 உ ஆகிய மறுநாட் காலையில் 'மனுவும் குறளும்' என்னும் விஷயத்தில் உபந்யாசஞ் செய்யும்படி யான் ஏற்படுத்தப்பட்டிருந்தேன். விஷயத்தைத் தொடங்கு முகத்தானே யான் தலைவர் முதனுட்கூறிய குறிப்புரைகளை மறுத்துப் பிராமணர்களும் தமிழர்தாம் எனவும், அவர் தாய்ப்பாஷையும் தமிழேயெனவும், கடந்த அறுபது எழுபது வருடங்களில் தென்னிந்திய மக்களுள் தமிழின் அந்தஸ்தை உயர்த்துவதில்

* திரு என். நாராயணையர் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள சேரன்மாதேவியிற் பிறந்தவர். அவர் ஆங்கிலத்தில் 'ஆர்த்ரா' என்ற முத்திங்களிதழை வெளியிட்டு வந்தார். ஒருசில இதழ்களே வெளிவந்தன. 1940-இல் ஓய்வு பெற்றபின் தமது சொந்த ஊரிலுள்ள ஓர் இரவுப் பள்ளியின் தலைமையாசிரியராகவிருந்து சில ஆண்டுகளில் காலமாகியுள்ளனர்.

பிராமணர் முன்னணியாய் நின்றுழைத்துள்ளார்களெனவும் கூறினேன். என் கூற்றை நிரூபித்தற்காக மகாமகோபாத்தியாய வே. சாமிநாதையர், சென்னை வழக்கறிஞர்கள் கே. வீ. கிருஷ்ணசாமி ஐயர், ரீ. எம். கிருஷ்ணசாமி ஐயர் என்போர், ராமநாதபுரம் பண்டிதர்கள் ராகவ அய்யங்கார்கள், செந்தமிழ்ப் பத்திராசிரியர் திரு. நாராயண அய்யங்கார், காலஞ்சென்ற வீ. கிருஷ்ணசுவாமி அய்யர் (செட்டியார் தானே தம் முன்னுரையில் இவரைக் குறிப்பிட்டனர்) என்பவர்களதும் வேறு சிலரதும் பெயரை எடுத்துக் காட்டினேன். இன்னும் என் கூற்றை வலியுறுத்தற்காகக் கலித்தொகையின் முதற்பதிப்பாளர் காலஞ்சென்ற மிஸ்டர் சி. வை. தாமோதரம் பிள்ளையொருவர் நீங்கலாக எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்னும் சங்க நூல்களைப் பதிப்பித்த இக்காலப் பதிப்பாளர்களெல்லாரும் பிராமணர்களேயென்றும் எடுத்துச் சொன்னேன். சி. வை. தாமோதரம் பிள்ளையென்பவர் தென்னிந்தியாக்காரரேயல்லர், யாழ்ப்பாணக் கனவானவர்.

என்னுடைய பேச்சைப் பற்றிக் குறிப்புரை கூறுங்கால் தலைவர், தாம் முன்பு தென்னிந்தியப் பிராமணர்கள் தமிழைத் தாழ்த்தி யொடுக்குகிறார்களென்று குறை கூறியபோது, பொது ஜனங்களுக்குத் தங்களை நன்றாய்த் தெரியும்படி செய்து கொண்டவர்களும், நான் பழகியதிலும் அல்லது பழகக்கூடியதிலும் பார்க்க மிக அணுக்கமாய்த் தாம் கூடிப் பழகியுள்ளவர்களுமாகிய நல்லவர்களான இச்சிலரைக் கருதவில்லையென்றும், மற்று வேறு பிராமணர்கள் ஆயிரக்கணக்கானவர் பத்து லக்ஷக் கணக்கானவர்களைக் கருதினேனென்றும், பெயரைச் சொல்லுதல் துன்பிழைக்கு மாறாகலின் அவர்கள் பெயர்களைத் தான் சொல்ல முடியாதென்றும் சொன்னார்கள். மேலும், சென்னை, அண்ணாமலை என்னும் சர்வகலாசாலைகளின் அதிகார சபைகளிலுள்ள பிராமணர்களைக் குறிப்பிட்டுக் காட்டி, அவர் சொன்னபடி தமக்கு மிஸ்டர் சாமிநாதையராலேயே கொடுக்கப்பட்ட தகவலின்படி அந்தப் பிராமணர்கள் தமிழுக்கு நீங்காத கடும் வைரிகளென்றும் சொன்னார்.

இன்னும் அவர் காலஞ்சென்ற பி. ரீ. சிறீநிவாச அய்யங்காருடைய பெயரைச் சொல்லி, மதுரையில் ஒரு முறை அவர் கண்ணியமான பெரும் பண்டித சபையொன்றில் தமிழைக் காமப்பாஷை என இழிவுபடுத்திக் கூறினார். ஆனாலும், அவரது வாழ்விறுதிக் காலத்தில் தமிழின் நலன்களை ஒப்புக்கொள்பவராக மாறிவிட்டாரென்றும் சொன்னார்.

செட்டியாருடைய இக்குறிப்புரைகளுக்கிடையிடையே உரத்த கரகோஷம் நிகழ்ந்து வந்தது, சபையார் மனதில் அவர் விஷமத்தனமான கருத்தைப் பதித்து வந்தார் என்பதைக் காட்டிற்று. இது உண்மையானால் குறிப்பிட்ட இரண்டு சர்வகலாசாலைகளினதும் அதிகார சபையாரது பெயருக்குக் கெடுதலான பெரும் இழுக்குச் செய்வதாகும். பொய்யாயின் இவை வன்மஞ்சாதிக்கும் பெரும் பழிமொழிகளாகுமாகலின் கூடியளவு விரைவாயும் வற்புறுத்தியும் பொய்யை வெளியாக்கி மறுத்தல் வேண்டும்.

இந்த நிலைமையில் தங்களை நான் வேண்டுவது, குறிப்பிட்ட இரண்டு சர்வகலாசாலையாருக்கும் இவ்விஷயத்தை ஆலோசனைக்கு உய்ப்பித்து, இங்குள்ள மக்கள் இதைப் பற்றிய நிஜமான உண்மையை அறியும்படி செய்ய வேண்டுமென்பது. இதைப் பற்றித் தங்களுக்கு நேரே அறிந்தனவுளவேல் அவ்வறிவுச் சுடர் கொளுத்தி இதனை விளங்கச் செய்வீர்களாயின் அந்நன்றியையும் நான் பாராட்டுவேன்.

இங்ஙனம்,
இவ்வறிவித்தலுக்கு விரைவில்
மறுமொழியை எதிர்பார்த்திருக்கும்
(ஒ—ம்) என். நாராயணன்.

* * *

எஸ். சத்தியமூர்த்தி
அட்வொகேட்

2/18, தோடித் தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை, 14—4—33

அன்புள்ள மிஸ்டர் நாராயணன்,

ஆதிரை பிரதியொன்றும் உங்களுடைய கடிதமும் கிடைத்தன. மிக்க வந்தனம். தங்கட்கு எல்லா நன்மையுமுண்டாக விரும்புகிறேன்.

பிராமணர் தமிழுக்கு இடையூருக இருக்கிறர்கள் என்று குறை கூறுவது பொய்யானதாயும், பொருமையுடன் சொல்லப்பட்டதாயும் இருக்கிறது. அது பிராமணரல்லாதார் கூட்டத்தின் இயற்கை. ஒரு மனிதன் தமிழ், சமஸ்கிருதம் இரண்டையும் நேசிக்க முடியாது என்ற மூடக் கொள்கையை அது ஆதாரமாகக் கொண்டுள்ளது. இந்தத் தீர்மானத்தின்படி ஒருவர் ஒன்றையோ அல்லது மற்றென்றையோ வெறுக்க வேண்டும். என்னைப் பொறுத்தவரையில் என் தாயாரையும் தகப்பனரையும் போல நான் அவ்விரண்டையும் நேசிக்கிறேன். வெளிப்படையாக அப்படியே சொல்லியுமிருக்கிறேன். சமஸ்கிருதத்தையும் தமிழையும் வளரச் செய்ய வேண்டிய முயற்சிகளைக் கூடுமானவரை செய்துகொண்டிருக்கும் அண்ணுமலை, சென்னை சர்வகலாசாலைகளின் சிண்டிகேட்டின் அங்கத்தினராக நான் இருந்திருக்கிறேன். இப்பொழுதும் இருக்கிறேன். மேலும் சமஸ்கிருதத்தை ஆதரிக்காமல், தமிழைப் பலப்படுத்த முடியாதென்பது என்னுடைய நம்பிக்கை. தமிழை விரும்பி சமஸ்கிருதத்தை வெறுப்பதை நான் மறுக்கிறேன். அதுதான் என்னுடைய எதிர்ப்புக்குத் தலையாயுள்ளது. அண்ணுமலை சர்வகலாசாலையில் தமிழில் ஆனர்ஸ் வகுப்பு நடத்தப்படுகிறது. மற்றெரு ஒப்பற்ற விஷயம் தமிழில்– தர்க்க சாஸ்திர சம்பந்தமான ஒரு பாட புத்தகத்துக்காக ரூ 1,000 பரிசளிக்கப்பட்டது. பி. ஏ. வகுப்பிலும் இண்டர்மீடியேட் வகுப்பிலும் 2 வது பிரிவிற்குத் தமிழ் கற்பிக்கப்படுகிறது. வித்துவான் வகுப்பிற்குத் தயாரிக்கும் ஒரு தனித்தமிழ்ப் பிரிவும், ஆசிரியர்களின் போதனுமுறை பயின்ற யோக்கியதாபத்திரங்களளிக்கும் பரிக்ஷைகளும் உள்ளன. சென்னை சர்வ கலாசாலையும் தமிழுக்கு ஏராளமான நன்மையைச் செய்து கொண்டிருக்கிறது. அதில் தமிழாராய்ச்சிக் கழகம் ஒன்று இருக்கிறது. சுமார் 6 லக்ஷ ரூபாய் செலவில் தமிழ் லெக்சிகன் பிரசுரமாகிக்கொண்டு வருகிறது. மாணவர்களின் பாடக்கிரமத்தில் தமிழுக்கு மேன்மையான இடத்தையுங் கொடுத்திருக்கிறது. இதைவிட அதிகஞ் செய்ய முன்வருவது ஒன்றுமில்லை.

(ஒ—ம்) சத்தியமூர்த்தி

தமிழிலும் வட மொழியிலும் நிறைந்த புலமையுடையவரும், தமிழ் நாட்டில் பல தமிழ்ச் சங்கங்களின் மாநாடுகளிலும், சமயப் பேரவைகளிலும் சொற்பொழிவாற்றியவரும், வடமொழி இலக்கியங்களிலும் வடமொழி நீதி நூல்களிலும் ஈடுபட்டு அவற்றைத் தமிழரிடையே பரப்ப அந்நூல்களுட் சிறந்தவையான மிருச்சகடி, சுக்கிர நீதி, கௌடிலிய சாத்திரம் ஆகியவற்றைத் தமிழில் மொழிபெயர்த்தவரும், பெரும் புலவர்களோடு பழகியவருமாகிய பண்டிதமணியவர்கள் தமது 52 - ஆம் அகவையில் மேலே கண்டவாறு தென்னிந்தியப் பிராமணர்களைப் பற்றிக் கூறியது உண்மைக்குப் புறம்பானது என்று எங்ஙனஞ் சொல்ல முடியும்? அவர் முன்னிகழ்ந்தவற்றையெல்லாம் நேரிற்கண்டும், பின் நிகழவிருப்பனவற்றையெல்லாம் உய்த்துணர்ந்தும், பிராமணர்கள் நேரிலும் மறைமுகமாகவும் தமிழ் வளர்ச்சிக்குச் செய்யும் இடையூறுகளை நினைந்தும் மனம் நொந்து கூறினர்கள் என்பது தெள்ளத் தெளிய விளங்குகிறதன்றே!

திரு. நாராயணனுக்கு விடை எழுதிய திரு. சத்தியமூர்த்தியவர்கட்கு நன்கு தெரியும், பண்டிதமணியின் பண்பாடும் சிறப்பும். ஆதலின், அவரைப் பற்றிக் குறை கூறிற்றிலர். ஆனல், 'பிராமணர் அல்லாதார் கூட்டத்தியற்கை' என அதிற் பண்டித மணி அவர்களைச் சேர்த்தது வருந்தத்தக்கது. அவர் தமிழைத் தாய்மொழியாகவும்

சமஸ்கிருதத்தைத் தந்தை மொழியாகவும் நேசிப்பதாகக் குறிப்பிட்டுள்ளார். தமிழர் கட்குத் தாய்மொழி ஒன்றுதான் உண்டு. அது சாவா மூவாத் தமிழேயாகும். மதிப்புக்குரிய சீனிவாச சாத்திரியாரோ சமஸ்கிருதத்தை முந்தையோர் மொழி என்றும், தமிழை வீட்டு மொழியென்றும் கூறியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

முதுபெரும்புலவர் பண்டிதமணியவர்கள் தமது முடிவுரையில் கூறியது போல், மறைத்திரு மறைமலையடிகளும், பார்ப்பன அறிஞர்களுள் திரு. பி. டி. சீனிவாச ஐயங்கார், டி. ஆர். சேசையங்கார், திரு. இராமசந்தர தீட்சிதர், சுப்பிரமணிய பாரதியார் போன்ற சிலரை நேர்மையானவர்கள் என்று கூறியதுண்டு.

**டாக்டர் வே. சாமிநாதையரவர்களுடைய கருத்தும் விளக்கமும்**

ஆர்த்ரா ஆசிரியர் திரு. என். நாராயணையர் திரு. சத்தியமூர்த்தி ஐயருக்கு அனுப்பிய கடிதத்தின்படி (நகல்) ஒன்றினை முதுபெரும் புலவர் வே. சாமிநாதையரவர் கட்கும் அனுப்பி, அவர்களுடைய கருத்துரையினையுங் கேட்டுள்ளனர். அக் கடிதத்திற்கு மதிப்புக்குரிய டாக்டர் ஐயரவர்கள் எழுதிய மறுமொழிக் கடிதத்தில், "சென்னை, அண்ணாமலைப் பல்கலைக் கழகங்களின் அதிகார சபைகளிலுள்ள பிராமணர்கள் தமிழுக்கு நீங்காத வைரிகளென்று தாம் சொன்னதாகத் திரு. பண்டித மணியவர்கள் பேசியிருப்பது, தமது பெயரைச் சுட்டினால் அவர்தம் பேச்சுக்கு ஆதாரமாகி வலுவூட்டும் எனக் கருதியே பேசியிருப்பார்கள்" என்று எழுதியுள்ளார் கள் போலும். அக்கடிதத்தின் படியொன்றைத் திரு. நாராயணையர் பண்டிதமணி அவர்கட்கு அனுப்பி வைக்கவே, உடனே அவர்கள் மிகவும் வருந்தி டாக்டர் ஐயரவர் கட்குக் கடிதம் எழுதியிருப்பதாகத் தெரிகிறது. அந்தக் கடிதத்திற்கு டாக்டர் ஐயரவர்கள் திருப்பனந்தாளிலிருந்து 22—6—1933-இல் திரு. பண்டிதமணியவர்கட்கு எழுதிய கடிதம் வருமாறு.

திருப்பனந்தாள்,
22—6—33.

அன்புமிக்க ஐயா,

உபயகுசலோபரி. நான் சில தினங்களாக இவ்விடம் தலைவரவர்களுடைய விருப்பத்தின்படி இருந்து வருகிறேன்.

பட்டணம் விலாஸத்திற்குத் தாங்களெழுதியனுப்பிய கடிதமும், சென்னைக்கு வந்திருந்த ஆர்த்ராவென்ற பத்திரிகைப் பிரதியும் ஒருங்கே நேற்று இங்கே எனக்குக் கிடைத்தன. தங்கள் கடிதத்தைப் பார்த்துத் தங்களினும் மிக்க வருத்தத்தை அடைந்து ஆர்த்ரா என்னும் பத்திரிகையைப் பிரித்து, அதில் நான் எழுதியதாகவுள்ள கடிதத்தையும் பார்த்தேன். அக்கடிதத்தை இப்பொழுதுதான் பார்த்தேன்.

ஸ்ரீமான் நாராயணையர் முன்பு ஒரு கடிதமும் அச்சுக் கடிதமொன்றும் அனுப்பி யிருந்தார். அச்சுக் கடிதத்தில் தாங்கள் யூனிவர்ஸிடியிலுள்ள சிலர்மேல் குறை கூறி, நானும் அங்ஙனமே கூறினேனெனச் சொல்லியதாக உள்ளதைப் பிறர் மொழி பெயர்த்துச் சொல்ல அறிந்து சிறிது மனவருத்தமடைந்ததுண்டு. யூனிவர்ஸிடி சம்பந்தமாகக் குறை கூறுதல் அதன் தொடர்புடைய என்பால் விபரீத உணர்ச்சி உண்டாக்கக் காரணமாகும். ஒரு கலாசாலையில் ஆசிரியராக இருந்து பத்திரிகை ஒன்றை நடத்திவரும் தகுதியுடைய ஒருவர் பொய் கூறுவாரென எண்ணவில்லை. அக்கடிதத்தை மொழிபெயர்த்துக் கூறியவரும் உடனிருந்த சிலரும் 'இதற்கு என்ன விடையளிப்பது?' என்று கேட்டபொழுது, **"யூனிவர்ஸிடி சம்பந்தமாக நான் குறை கூறியதாக ஞாபகமில்லை. பொதுவாகத் தமிழ்க் கல்வி குறைந்து வருகிறதென்று சொல்லியிருப்பேன்"** என்று கூறினேன்: சில காலமாகக் கடிதம் எழுதுதல் முதலிய வற்றைப் பிறருடைய ஸகாயத்தைக் கொண்டே செய்துவரும் இயல்புடையவனாக இருத்தலின், அக்கருத்தையே விடையாக எழுதிவிடலாமென்று சொன்னேன்.

உடனிருந்த ஒருவர் ஒரு விடைக் கடிதத்தை எழுதிக் கொணர்ந்து நான் சொல்லிய வற்றையே எழுதியிருப்பதாகச் சொன்னார். தபாலுக்கு நேரமாயினமையாலும், சோர்வடைந்த சமயமாக இருந்தமையாலும், அவர் கூறியதை நம்பி, அக்கடிதத்திற் கையெழுத்திட்டேன்.

நேற்று "ஆர்த்ரா"வில்தான் அக்கடிதத்திலுள்ள வாக்கியங்களையும் படித்துப் பார்த்தேன். தாங்கள் வருந்தி எழுதுவதற்குரிய காரணங்கள் அதில் இருத்தலையும், அது வழக்கமாக நானெழுதும் அமைப்பில் இல்லாதிருத்தலையும் உணர்ந்தேன். இச்செயல் கால வித்தியாசத்தால் நிகழ்ந்தது என்றெண்ணி மிக வருந்தினேன். அப்பொழுது இருந்த என் மனநிலை இத்தகையதென்றெழுதல் இயலாது.

என்னை யார் எவ்வாறு தூஷித்தாலும் இழிவாக நடத்தினாலும் பொறுத்துக் கொண்டு கடமைகளை நிறைவேற்றி வருவதே இளமை தொடங்கி நான் கொண்ட கொள்கை. அது தாங்களும் அறிந்ததே. அங்ஙனமிருக்க, நெடுநாட் பழக்கமும் மிக்க உள்ளன்பும் உடைய தங்கள்பால் அன்பும் தாங்கள், பலவகையிற் செய்த உபகாரங்களை மறவா உணர்ச்சியும் என்றும் என் உள்ளத்தினின்றும் மாறா. 'ஆர்த்ரா'விற் காணப்படும் கடிதம் எழுதிய பின்னரே, தாங்கள் இயற்றிய 'மண்ணியல் சிறுதேர்' என்ற மொழிபெயர்ப்பு நூலுக்குச் சிறப்புப் பாயிரம் மனமுவந்து அளித்தேனென்பது நினைவிருக்கலாமே. தங்கள்பால் மாறுபாடான எண்ணம் இருக்கு மாயின் அவ்வாறு செய்ய மனம் இடங்கொடுக்குமா ?

தங்கள் கடிதத்திலுள்ள, 'நீண்ட காலமாக வளர்த்த அன்பை ஒரு கணப் பொழுதில் வேரறக் களையும்', 'தாங்கள் வெறுத்தொதுக்கினும்' என்பனவும் பிறவு மாகிய சொற்றொடர்களைத் தங்கள் மூலமாகக் கேட்க வைத்த ஊழ்வினையை நினைந்து வருந்துகின்றேன். எல்லாவற்றையும் மறந்துவிட வேண்டும். நேரிற் சந்திக்கும் பொழுது எல்லாம் கூறுவேன்.

இங்ஙனம்,
அன்பன், வே. சாமிநாதன்.

இந்தக் கடிதத்திலிருந்து டாக்டர் ஐயரவர்கள் பண்டிதமணியவர்கள்மீது எத்துணை அன்பு வைத்திருந்தனர் என்பதும், அதே போல் பண்டிதமணியவர்கள் டாக்டர் ஐயரவர்களுக்கு 22—3—1924, 4—4—1924 ஆகிய இரு நாள்களில் எழுதிய கடிதங்களினால் அவர்களைத் தமது குருவாகக் கொண்டு அவர்கள்பால் எத்துணை மதிப்பும் அன்பும் வைத்திருந்தனர் என்பதும் அறியப் பெறலாம்.

**22—3—24 கடிதம் வருமாறு :**

அன்பிற் சிறந்த ஐயா அவர்களுக்கு,

அனந்த நமஸ்காரம். சுபம்.

அவ்விடமிருந்தருளிய பெருங்கதைப் புத்தகங் கிடைத்த செய்தியைப் பற்றி இதற்கு முன் அனுப்பிய கடிதம் கிடைத்திருக்குமே.

தங்கள் உடல்நலத்தைத் தெரியப் பேரவாவுடையேன். இப்போது நோய் நீங்கிச் சௌக்கியமாக இருக்கின்றதா ? தயை செய்து தெரியச் செய்ய வேண்டுகிறேன்.

யான் மொழிபெயர்த்தெழுதிய 'உதயண சரிதம்' அச்சிட்டு முடிந்தது. இன்று புக் போஸ்டில் தங்கள் மேலான பார்வைக்கு ஒரு பிரதி யனுப்பியிருக்கிறேன். கடைக்கண் சாத்தி ஆசீர்வாத ரூபமான தங்கள் அபிப்பிராயத்தை யனுப்ப வேண்டுகின்றேன். தங்கள் அபிப்பிராயப் பத்திரம் வந்தபின் அதனையும் அச்சிட்டுச் சேர்த்துப் பைண்டு செய்ய வேண்டும்.

தாங்கள் கருணை கூர்ந்தளிக்கும் அபிப்பிராயப் பத்திரம் எனக்கு எதிர் காலத்தில் பயன் விளைக்கும் ஆசிமொழியாகும். அதன் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருக் கிறேன்.

(ஒப்பம்) மு. கதிரேசன்

**4—4—24 - இல் எழுதிய கடிதம் :**

அருமை மிக்க ஐயா அவர்களுக்கு,

அனந்த நமஸ்காரம். சுபம்.

தாங்கள் கருணை கூர்ந்தருளிய ஆசீர்வாத அபிப்பிராய பத்திரமும் மார்ச்சு மாதம் 24, 28 தேதி கடிதங்களிரண்டும் உதயண சரிதம் புக் பாக்கெட்டும் உரிய காலத்தில் வரப்பெற்று மகிழ்ந்தேன். **அபிப்பிராய பத்திரம் எதிர்காலத்தில் என் நலத்தை வளர்த்தற்குரியதாகவும், தங்கள் உண்மை நட்புரிமையையும் கருணையையும் புலப்படுத்துவதாகவும் விளங்குகின்றது;** படித்தின்புற்றேன்."

பல்வகைச் சுவைகளுக்கும் நிலையமாகிய 'பெருங்கதை மூலம்' படிக்கத் தொடங்கியுள்ளேன். தங்கள் நினைவு இடையறாதிருக்கப் படித்து இன்புறுவேன். அப்புத்தகத்தின் விலைக்காக ரூ (7-8-0) ஏழரை இன்று மணியார்டர் செய்திருக்கின்றேன். **பெருங்கதை விலையில்லாத சிறந்த இரத்தினமாகும்.**

சுக்கிர நீதி மொழி பெயர்ப்பில் மூன்றும் அத்தியாயமும் நான்காம் அத்தியாயமும் முதற் பிரகரணமும் தங்கள் பெயருக்கு ரிஜிஸ்டர் செய்தனுப்பியிருக்கிறேன். உடல் தளர்ந்திருக்கும் நிலையில் சிரமந்தர நினைக்கலாகாதெனினும் ஆசை யென்வழி நிற்கவில்லை. பொறுத்தருள்க. அவசரத்தில் கடைக்கணித்துதவும்படி வேண்டுகின்றேன்.

தங்கள் உடல் நோய் நீங்கி வன்மை மிகப்பெற்று எம்மனோர் மனத்தை இன்புறுத்தும்வண்ணம் இறைவனை இடையறாது பிரார்த்தித்துக்கொண்டிருக்கிறேன்.

(ஒப்பம்) மு. கதிரேசன்.

திரு. பண்டிதமணியவர்கள் விரும்பி வேண்டியபடி டாக்டர் ஐயரவர்கள் உதயண சரிதம், சுக்கிர நீதி ஆகியவற்றைப் பார்வையிட்டு அனுப்பிய அதிகாரப் பத்திரம் பண்டிதமணியவர்கள் 1934 முதல் 1937 முடிய அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் விரிவுரையாளராகவும் அதன்பின் தமிழ்ப் பேராசிரியராகவும் பணி புரியும் பேற்றினை நல்கியதெனின், அது எத்துணை வியப்பையும் மகிழ்ச்சியையும் நம்மனோர்க்கு விளைக்கின்றது.

உயர்திரு பண்டிதமணியவர்கள் தென்னிந்திய பிராமணர்களில் தமது காலத்தில் வாழ்ந்த தமிழ்ப் பெரும்புலவர் பலரோடு நெருங்கிப் பழகி அவர்களின் நன்மதிப்பைப் பெற்றவர்களாவர். அவர்கள் தமது முடிவுரையில் நூற்றுக்கணக்கான லட்சக்கணக்கான பிராமணர்களைப் பற்றியே குறை கூறியதாகவும் சொல்லியுள்ளார்கள். அங்ஙனம் அவர்கள் கூறியதில் உண்மையில்லாமலிருக்க முடியாது.

ஆயினும், நெல்லை மாவட்டம் சேர்மாதேவியிலிருந்து இலங்கைக்குச் சென்ற திரு என். நாராயணையர் தமது குலப்பற்றினால் பண்டிதமணியவர்கள் தமது பட்டறிவிற் கண்ட உண்மைக் கருத்துக்களை உள்ளபடி கூறியதைக் கேட்க மனம் பொறாமல் எத்துணைக் கலகம் விளைத்துள்ளனர் என்பது அறிந்து வருந்துதற்குரியது.

**வ. சுப்பையா**
*26—12—73*

# பண்டிதமணியாரின் நகைச்சுவை

சி. ராம. நாகப்பன்,
மகிபாலன்பட்டி

முதுபெரும்புலவர் பண்டிதமணி கதிரேசச் செட்டியார் அவர்கள் நகைச்சுவையுடன் குலுங்கக் குலுங்கச் சிரித்துப் பேசுவார்கள். அவர்கள் சொற்பொழிவுகளிலும் நயமும் நகைச் சுவையும் இழையோடும்; உரையாடல்களிலும் சொல் நயமும் நகைச்சுவையும் தவழும். அவர்களோடு நெருங்கிப் பழகியவர்கள் அன்றடம் அவர்கள் பேச்சில் தவழும் நகைச்சுவையில் ஊறித் திளைத்து மகிழ்வார்கள். அவர்களிடம் வேலை பார்த்தவர்கள் பலர் தம் வேலையின் அலுப்புத் தெரியாமல் மனம் மகிழ்வதற்கு இந் நகைச்சுவைப் பேச்சு துணை புரியும். எந்த நேரத்திலும் புன்சிரிப்போடுதான் பேசுவார்கள்; பிறரையும் சிரிக்கவைத்து மகிழ்விப்பார்கள். 1948-ஆம் ஆண்டிலிருந்து 52-ஆம் ஆண்டுவரை, ஏறத்தாழ ஐந்தாண்டுகள் எனது கல்லூரி விடுமுறைக் காலங்களில் அவர்களுக்குப் பணிவிடை செய்யும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. என் தந்தையார், திரு. சி. ராம. இராமசாமிச் செட்டியார் அவர்கள் 'சித்தாந்தமணிமொழிச் செல்வர்' என்றும், பண்டிதமணியவர்களின் "வீட்டு மாணவர்" என்றும் போற்றப் பெற்றவர்கள். பண்டிதமணியவர்களின்பால் ஈடுபாடும் பணி செய்யும் மனநிலையும் வாய்க்கப்பெற்றமைக்கு என் தந்தையாரின் இவ்வுறவே காரணமாகும். அவ்வாறு நான் பண்டிதமணியவர்களுக்குப் பணிசெய்து பழகிய காலங்களில் கேட்ட நகைச்சுவைகளில், ஒருசில இன்றும் என் நினைவில் நின்று மகிழ்விக்கின்றன. அன்னரது நினைவைக் கொண்டாடும் இந்நாளில் அந்நிகழ்ச்சிகளில் ஒருசிலவற்றை இங்கு எடுத்துரைக்க விரும்புகின்றேன்.

## தலை தாங்குமா ?

பண்டிதமணியவர்கள் நடக்கமுடியாத சூழ்நிலையில் இருந்ததால், வீட்டிலிருந்துகொண்டே படித்தார்களாம். திருக்குறள் முழுதும் மனப்பாடமாகப் படித்துவிட்டு, அதை அப்படியே தக்கார் ஒருவரிடம் ஒப்பித்துச் சரி பார்த்துக் கொள்ள விரும்பினர்களாம். வேறு எவரும் தமது ஊரில் அகப்படாததால், ஓரளவு தமிழறிந்த செட்டியார் நண்பர் ஒருவரிடம், "இதிலுள்ள பாட்டுக்கள் எல்லாவற்றையும் அதில் உள்ளபடியே ஒப்பிக்கின்றேன். சரிபார்த்துச் சொல்லுங்கள். எதுவும் பிழை கண்டால் நன்ருக நறுக்கென்று என் தலையில் ஒரு பிழைக்கு ஒரு கொட்டு வீதம் கொட்டிவிடுங்கள். சிநேகித முறையில் தாட்சிணியம் பார்க்க வேண்டாம். நன்ருகக் கொட்டிவிடுங்கள்" என்று கேட்டுக் கொண்டு, முதல் குறளை ஒப்பிக்கத் தொடங்கினர்களாம். "அகர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு" என்ருராம். ஒப்பித்து முடிக்கும் முன்னேயே 'நறுக்கென்று' ஒரு கொட்டு விழுந்ததாம். பண்டிதமணியாருக்கு ஒன்றும் புரியவில்லை. 'என்ன பிழையாகச் சொல்லிவிட்டோம் ?' என்று ஆச்சரியப்பட்டு, "இதில் என்ன ஐயா பிழை? ஏன் கொட்டினீர்கள் ?" என்று கேட்டாராம். அதற்கு அந் நண்பர் "நீ சொன்ன பாடல் புத்தகத்தில் "அகர முதல 'வெ'ழுத்தெல்லாம் என்று 'வெ' அச்சுப் போட்டிருக்கிறது. நீ சொன்னதில் எழுத்தெல்லாம் என்று 'எ' உச்சரிப்பு வருகிறது. புத்தகத்தில் உள்ளபடி சொல்லாததால்தான் கொட்டினேன்" என்ருராம். பண்டிதமணியார் சிரித்துக் கொண்டே, "உங்கள் கிட்டே ஒப்பித்தால் 1330 குறளுக்கும் 1330 கொட்டு வாங்க வேண்டும். அதற்கு ,என் தலை தாங்காது" என்று சொல்லி, அவரை மிகவும் சமாதானப்படுத்தி வீட்டுக்கு அனுப்பி வைத்தார்களாம். இவ்வாறு ஒழுங்கான படி சரிபார்த்துக் கேட்பதற்குக்கூட அந்தக் காலத்தில் ஆள் அகப்படாது என்று கூறிச் சிரிப்பார்கள்.

## எனக்காக ஒன்றும் வேண்டாம்!

பண்டிதமணியார் சைவ உணவுதான் சாப்பிடுவார்கள். உணவு வகைகளை நல்ல முறையில் விரும்பி ரசித்துச் சாப்பிடுவார்கள்.

அவர்கள் எங்கேனும் மற்ற ஊர்களுக்குச் செல்லும்பொழுது விருந்து கொடுப்பவர்கள், "சாப்பாடு எங்கள் வீட்டில் இன்றைக்குத் தயாராகிக்கொண்டிருக்கிறது. உங்களுக்குப் பிடித்தமான கறி வகைகளை எதுவும் சொன்னால் அதையும் செய்கிறோம்" என்று பிரியமாகக் கேட்டால், பண்டிதமணியவர்கள் தயங்காமல் பின்வருமாறு கூறுவார்கள்: "அப்படியா, எனக்காக என்று ஒன்றும் செய்ய வேண்டாம். உள்ளபடி செய்வதோடு நல்ல கீரை கிடைத்தால் மசியல் செய்யலாம். உருளைக்கிழங்கு வீட்டிலிருக்கும்; அதை வறுத்து வைக்கலாம். முருங்கைக்காய் இப்பொழுது காய்க்கிற காலம். பிஞ்சுக்காய் கிடைத்தால் வாங்கிப் பொரிக்கலாம். வெண்டைக்காய் பச்சடி நன்றாக இருக்கும். மற்றப்படி கத்தரிக்காய், வாழைக்காய் எல்லாம் நீங்கள் நடப்பாகச் செய்திருப்பீர்கள். சாம்பார், ரசத்தோடு ஒரு மோர்க் குழம்பு போடலாம். மல்லித் துவையல் எனக்கு ரொம்பப் பிடிக்கும். பாயசம், அப்பளம் சொல்ல வேண்டியதில்லை" என்று கூறுவார்களாம். விருந்து எப்படி வைக்க வேண்டும்; எந்த எந்தக் கறியை, எவ் வகையாகச் செய்ய வேண்டும் என்றெல்லாம் கூறி, விருந்தினை மகிழ்வோடு சுவைத்துச் சாப்பிட்டு, விருந்து வைத்தவர்களை மகிழ்விக்கும் பாங்கு பண்டிதமணியவர்களிடம் மிகவும் உண்டு.

## செலவில் சிக்கனம்

ஒரு நாள் பண்டிதமணியவர்கள் என்னிடம், "ஓர் ஆள் ஒரு மணிக்குச் சைக்கிளில் வேகமாக ஓட்டினால் எத்தனை மைல் ஓட்ட முடியும்?" என்று கேட்டார்கள். '10 மைல்' என்று கூறினேன். "கண்டரமாணிக்கம் இங்கிருந்து (மகிபாலன் பட்டியிலிருந்து) எத்தனை மைல்?" என்று கேட்டார்கள். '10 மைல்' என்றேன். "ஓர் ஆள் போய் வர வேண்டுமென்றால் என்ன கொடுக்க வேண்டும் ?" என்று மீண்டும் கேட்டார்கள். "ஆறணா கொடுத்தால் போதும்" என்றேன். சைக்கிள் வாடகை மணிக்கு எவ்வளவு?" என்று கேட்டார்கள் "மணிக்கு ஓர் அணா தான். போக வர இரண்டு மணி நேரம். ஆக இரண்டணா. போய் வருவதற்கு ஆறணா கூலி. ஆக எட்டு அணா தான்" என்று விளக்கமாகக் கூறினேன். உடனே அவர்கள், "அப்படியானால் ஓர் ஆள் ஏற்பாடு செய். எட்டு அணா கொடுத்துவிடுவோம். போனவுடன் வந்துவிடலாம். அங்கொன்றும் வேலை இல்லை" என்றார்கள். "வேலை இல்லை என்றால் ஆள் அனுப்புவானேன் ?" என்றேன். குலுங்கக் குலுங்கச் சிரித்துவிட்டு, "அப்படி இல்லையப்பன். அதிக வேலை இல்லை. இரண்டு மணி நேரத்திலேயே வந்துவிடலாம். சைக்கிள் வாடகை இரண்டணாவிற்குள் முடிந்துவிடுமல்லவா என்பதற்காகச் சொன்னேன்" என்றார்கள். போகின்றவன் சுணங்காமல் வந்துவிட்டால் சைக்கிள் வாடகை மிச்சமல்லவா ? பண்டிதமணியார் செலவில் அவ்வளவு சிக்கனமாக இருப்பார்கள்.

## சலவைக்கும் துவையலுக்கும் வித்தியாசம் என்ன ?

செட்டிநாட்டில் முன்பெல்லாம் "குடி வண்ணான்' என்று உண்டு. வருடக் கூலியாகச் சிறு சம்பளமும், நாள்தோறும் மதியச் சோறு கொஞ்சமும் ஊதியமாகப் பெற்றுக்கொண்டு அன்றாடம் உடுத்தும் துணி மணிகளைக் கண்மாயில் துவைத்துத் தருவான். அதற்குத் துவையல் (துவைத்துக் கொண்டு வருதல்) என்று கூறுவர். சில சமயம், மாதம் ஒரு முறை சலவைக்குக் கொடுத்தால் அதற்கு உருப்படிக்கு ஓரணா கொடுப்பது வழக்கம். துணிமணிகளை நன்கு சலவை செய்து, பெட்டி போட்டுக்கொண்டு வருவான். ஒருநாள் பண்டிதமணியாரின் வீட்டில் வண்ணான் சலவை உருப்படியும் துவையல் உருப்படியும் சேர்த்துக்கொண்டு வந்து, தனித்தனியே எடுத்து வைத்துச் சரிபார்த்துக்கொள்ளக் கூறினான். அப்போது அருகிலிருந்த என் தந்தையாரவர்கள் இரண்டு உருப்படிகளையும் மாறி மாறிப் பார்த்துவிட்டு, "என்னப்பா, சலவைக்கும் துவையலுக்கும் வித்தியாசமே தெரியவில்லையே" என்றார்கள். சலவை சரியாகச் செய்யாமல் துவையலுருப்படி போலவே இருந்ததால்தான் அப்படிக் கேட்டார்கள். உடனே பண்டிதமணியார் தமக்கேயுரிய நகைச்சுவையுடன், "எனக்கு நன்றாக வித்தியாசம் தெரிகிறதே !" என்றார்கள். இதைக் கேட்டு அனைவரும்– வண்ணான் உட்பட - ஆச்சரியப்பட்டுஅவர்களைப் பார்த்தோம். உடனே அவர்கள், "ஓரணா வித்தியாசம் இருக்கு. இல்லையா, இராமையா ?" என்று என் தந்தையாரிடம் கூறக் கேட்டு அனைவரும் குலுங்கக் குலுங்கச் சிரித்தோம்.

## நாணயத்திற்கும் ஒரு தேர்வு

பண்டிதமணியாரிடம் நகைச்சுவை மிகுதியாக இருந்தது போலவே சிக்கன வாழ்வும், நாணயம், நேர்மை ஆகியவற்றில் அழுத்தமான

பிடிப்பும் இருந்தன. தான பிறரிடம் இவற்றை எதிர்பார்த்ததுமட்டுமல்லாமல், தாமும் அப்படியே வாழ்ந்து காட்டினர்கள். அதற்கும் இங்கு ஓர் எடுத்துக்காட்டுக் காணுதல் பொருந்தும்.

இன்று வங்கிகளில் கடன் வாங்குபவர்கள் ஆறு மாதத்திற்கு ஒரு முறை வங்கியில் முழுத் தொகையையும் போட்டுவிட்டுப் பிறகுதான் மீண்டும் எடுத்துக்கொள்ள வேண்டும் என்ற விதி இருக்கிறது. வணிகர்கள் பணத்தைப் பிற வழிகளில் வீணகச் செலவழித்துவிடாமல் தடுக்கவும், அவர்களது நாணயத்தைப் பரிசோதிக்கவும் இது வழி செய்கிறது.

பண்டிதமணியாரிடம் நான் கண்ட ஒரு வழக்கம், இதனை ஒத்ததாகும். தம்மிடம் சேரும் தொகையில் வட்டி நட்டம் இல்லாமலிருக்கத் தக்கவர்களிடம் சிறிய தொகைகளாக வட்டிக்குக் கொடுத்து வைப்பார்கள். ஆறு மாதம் கழித்து, கடன் வாங்கிய நபருக்குக் கடிதம் எழுதி, "இது சமயம் தேவையிருப்பதால் கடன் தொகையை நேரில் கொண்டுவந்து தரவும்'' என்று அறிவிப்பார்கள். அப்படியே அந்த நபரும், கார் வசதி இல்லாத எங்கள் கிராமத்திற்கு மாட்டுவண்டியில் வந்தும் பணத்தைக் கொடுப்பார்கள். உடனே பண்டிதமணியார், "நீங்கள் கொண்டுவந்து விட்டீர்களா? ஆமாம், நீங்கள் உறுதியாகச் சொன்னபடி கொண்டுவந்துவிடுவீர்கள் என்று எனக்குத் தெரியும். நான் வேறு ஒரு நபரிடம் கொடுத்துவைத்திருந்ததும் நேற்றுத்தான் கிடைத்துவிட்டது. ஆகவே, இந்தப் பணம் மேலும் ஓர் ஆண்டுக்கு உங்களிடம் இருக்கட்டுமே'' என்பார்கள். உள்ளபடியே தமக்குப் பணம் தேவையில்லாவிட்டாலும், கடன் வாங்கியிருப்பவர்களை இப்படிக் கேட்டு, நல்ல நிலையில் அந்நபர் இருப்பதை அறிந்துகொள்வார்கள்.

புலவர்களுக்கெல்லாம் புலவராக இருந்த பண்டிதமணியார், தாம் பிறந்த குலத்திற்கு ஏற்ப, நேர்மைமிக்க வணிகத்திறனும் வாய்க்கப்பெற்றவராக விளங்கினர் என்பதை இந்நிகழ்ச்சி எடுத்துக்காட்டும். நகைச்சுவைமிக்க நேர்மையான வாழ்வு பெற நம் அனைவருக்கும் பண்டிதமணியார் ஓர் எடுத்துக்காட்டாக இலங்கினர்கள் என்றால் அது மிகையாகாது.

* *
* *

31-5-1944-இல் வலம்புரியில் நிகழ்ந்த தமிழிசை மாநாட்டுத் தலைவர்,

பண்டிதமணி திரு. மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் கூறிய

## முன்னுரைச் சுருக்கம்

நல்ல பயிர்க்குச் சில புழு முதலியவற்றால் இடையூறு நேர்தல் போலத் தமிழிசைக்கும் இடையே எதிர்ப்புகள் சில தோன்றின. அவ்வெல்லாம் செட்டிநாட்டரசரவர்களின் திட்டநுட்பஞ் செறிந்த மெய்யுரைகளாலும், மற்றைத் தமிழன்பர்களின் விடை மொழிகளாலும், தக்கவாறு மறுக்கப்பட்டு ஒழிந்தன. ஒருவகையில் அவ்வெதிர்ப்பாளரையும் தமிழிசைக்கு ஆக்கம் தந்தவர்களென்று சொல்லலாம். அன்னர் கருத்து, ஊறு விளைப்பதாயினும், அவர் எதிர்ப்புரைகள் தமிழரைத் தட்டி எழுப்பி விழிப்புடையராகச் செய்தன என்னலாம். 'இவ்வாழ்வு பெறு தரு சூலையினுக்கு எதிர் செய் குறை என்கொல்'' என்று அப்பர் அடிகள் தமக்குற்ற சூலை நோய் இறையருளைப் பெறுதற்குக் காரணம் ஆயதெனக் கொண்டு, அதற்கு நன்றி செலுத்தியது போல, நாமும் தமிழ் இசை எதிர்ப்பாளருக்கு ஒருவகையில் நன்றி செலுத்தும் கடப்பாடுடையேம் ஆவேம்.

கடவுள் துணை

யாழ்ப்பாணம்

ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கத்தின்

பதினோராம் ஆண்டு நிறைவு விழாவில் தலைவராக வீற்றிருக்கும்

பண்டிதமணி ஸ்ரீமான் மு. கதிரேசச் செட்டியார் அவர்களுக்குச் சமர்ப்பிக்கும்

# நல்வரவேற்புப் பத்திரம்

நேரிசையாசிரியப்பா

இன்வர வாகுக வின்வர வாகுக
எண்டிசை பரவுநற் பண்டித மணியே
நின்வர வெமக்கிங் கின்வர வாகுக
நலன்சேர் செழுந்தமிழ் நாட்டவைக் களனெலாம்
தலைமை வகிக்கும் நிலபே ராள !
அண்ணா மலைநகர்க் கண்ணார் பல்கலைக்
கழகத் துறுப்பொடு கவினிய முதல்வ !
பழகு முத்தமிழ்ப் பயன்விளை மதுரைச்
சங்கநிர் வாக சபைக்கொரு சிங்கம் !
ஆரியந் தமிழெனுஞ் சீரிய நங்கையர்
வடுவின்றி நின்னிரு மருங்குவந் தமர
நடுவீற் றிருந்து நயந்துவரு மணாள !
கல்லுங் கனியச் சொல்லுஞ் செல்வ !
வெள்ளி நீதியைத் தெள்ளு சுவைத்தமிழ்க்(கு)
அள்ளிக் கொடுத்த வருணிறை வள்ளால் !
மண்ணியற் சிறுதேர் எனுநா டகத்தைக்
கண்ணின் மணியெனக் கலைவலார் போற்றுமா(று)
உண்மகிழ்ந் துதவும் நுண்பெரும் புலவ !
சமயச் சூழற் சலதியுண் மூழ்கியாங்(கு)
அமைமும் மணியெடுத் தணிந்தொளிர் மகுட !
சூழு மாழ்கட லீழ மண்டலத்(து)
ஆரிய திராவிட பாஷாபி விருத்திச்
சங்கந் தனக்குச் சார்பதி னென்றும்
ஆண்டு விழாவிற் கவைசேர் தலைமை
பூண்டெம் வேண்டுகோள் பொலிதரவருளிய
ஆண்டகாய் ! உலகெலா நீண்டசீர் நெடியோய் !
சேதுமா நாட்டின் றிலதமா நிதியொடு
நீதி யார்ந்து நிலவுமகி பால
நகரம் விளக்கு நன்மணி விளக்கே !
சீர்மது ரேசர் திருவடி சிந்தையில்
தேர்கதி ரேசனும் பேர்மகிழ் பெரும !
ஆழிசூ ழுலகிடை யணிந்து
வாழிநீ டூழி வளனெலாம் படைத்தே.

இங்ஙனம்,
தங்கள் அன்பர்கள்,
யாழ். ஆ. தி. பா. சங்கத்தார்,

யாழ்ப்பாணம்,
1-4-33.

உ
கணபதி துணை

அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ் விரிவுரையாளர்
மகிபாலன்பட்டி முதுபெரும்புலவர் பண்டிதமணி
திரு. மு. கதிரேசச் செட்டியாரவர்கள்
அறுபதாம் ஆண்டு நிறைவு விழாவில்
மேலைச்சிவபுரி சன்மார்க்க சபைப்
பழைய மாணவர் சங்கத்தார் படித்துக் கொடுத்த

# வாழ்த்துப் பத்திரம்

செந்தமிழா மணங்கினுக்கோர் திலகமெனப் புலவர்புகழ் செழியர் நாட்டில்
கொந்துமலர்ப் பொழிலெங்கும் குழுமுமகி பாலநகர் குலவி வாழும்
முந்துமிளங் கோக்களிலே முதல்வன்முத்துக் கறுப்பமுகில் முற்று நோன்பின்
வந்துதித்த கதிரேச வணிகர்குல மணியணையான் வாழ்க மாதோ.

ஆரியத்தி லிலக்கணங்க ளிலக்கியங்கள் வரன்முறையா லாய்ந்து கற்றுச்
சீரியநந் தமிழ்மொழியி லெவ்வகைநூல் களும்பயின்ற தெளிவினோடு
கூரியநல் லறிவுவள மீங்கிவன்பால் கண்டறிஞர் குழுக்க ளானோர்
பேரியல்பண் டிதமணியாம் பெருஞ்சிறப்புத் தந்தனரிப் பெற்றி நன்றே.

வேத்துமொழி பயின்றவரே வினைசெயவல் லுநரென்ன விளம்பும் பல்லோர்
வார்த்தைமறுத் திடுபவன்போல் மன்னுபெருங் கலாநிலயம் மருவி ஞாலம்
ஏத்துதமிழ் கற்றவரீண் டெய்தரிய உயர்பதவி யினிதிற் கொண்டெத்
தேத்துமருஞ் செயலெனினும் திறமையுற நடாத்தும்வகை தெளிவான் அம்மா.

செங்கமலை வளர்மேலைச் சிவபுரிசன் மார்க்கசபை சேர்ந்த கல்விச்
சங்கமதிற் கலைப்பயிற்சி சால்பழைய மாணவர்கள் சபைதான் கொண்ட
பொங்கியநல் விருப்பின்முனம் போந்ததன்கட் பேரன்பு பூண்ட வாற்றல்
எங்குமிசை பரப்பிவளர் பிறைபோல நாளும் இலங்கு மாதோ.

இப்பெரியோன் மூவிருபான் ஆண்டுநிறை வெய்தியஇவ் வினிய நாளில்
ஒப்பரிய தமிழ்ப்புலவர் வாழ்த்துரைப்ப ஒக்கலெலாம் உவந்து சூழச்
செப்புமறை விதியின்வழிச் சாந்திமணம் செயலின்மகிழ் சிறந்தோ மின்னேன்
அப்பணிசெஞ் சடைப்பெருமான் திருவருளால் எந்நலமு மமைந்து வாழி.

தங்கள் அன்புள்ள
பழைய மாணவ சங்கத்தார்,
சன்மார்க்க சபை
மேலைச்சிவபுரி,

மகிபாலன்பட்டி
விசு. புரட்டாசி, 26
12 - 10 - 1941

## மகாமகோபாத்யாய
## பண்டிதமணி கதிரேசச் செட்டியார் காலமானுர்!

மகிபாலன்பட்டி, அக். 25—இந்தத் தலைமுறையின் நிகரற்ற தமிழ்ப் பெரும் புலவர்களில் இரட்டைச் சிறப்பிற்குரியவர் பண்டிதமணி.

தமிழுக்காகப் பண்டிதமணி செய்த சேவை பட்டியலுக்கு அடங்காதவை.

அவைகள் அவ்வளவும் தமிழ்க் கலையின் ஆக்கத்திற்கும் அழியாத்தன்மைக்கும் அமரத்வம் பெற்ற ஆதரவுகள்.

அவர் தமிழுக்காகச் செய்த அளவிடற்கரிய சேவைகளில்:தலையாயது, தெய்வ ஒளி வீசும் அருள் நூலாகிய திருவாசகத்திற்குக் 'கதிர்மணி விளக்கம்' என்னும் விரிவுரை இயற்றியதாகும். இவ்விரிவுரை முற்றுப் பெறுவதற்குள் காலமாகிவிட்டது வருந்தத் தக்கதாகும்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகம், தமிழ் மகளின் தனி அணியாக இலங்கு வதற்குப் பண்டிதமணியின் தமிழ்த்திறன்தான் முக்கியக் காரணம் எனக் கூறுவது மிகையாகாது.

அவரின் மரணச் செய்தி கேட்ட தமிழ்ப் புலவர்கள், மாணவர்கள், மக்கள் அனைவரும் நெஞ்சதிர்ந்து அனுப்பிய செய்திகள், பண்டிதமணியின் இல்லம் கொள்ளாமல் குவிந்தவண்ணமிருக்கின்றன.

குறிப்பாகத் தமிழகமே பண்டிதமணியின் பிரிவால் துயர் கவிந்து நிற்பதாக மாபெரும் புலவர்கள் அறிவிக்கின்றனர்.

—'தமிழ்நாடு'-மதுரை, 26 - 10 - '53.

* * * *

### பண்டிதமணி கதிரேசனுரின் இறுதிச் சடங்கு!
### தமிழ்ப் பெருமக்களின் கடைசி மரியாதை!

மகிபாலன்பட்டி, அக் 29—முதுபெரும்புலவர் மகாமகோபாத்யாய பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியாரின் ஈமச்சடங்கு 24-10-53-ஆம் தேதி மாலை மகிபாலன் பட்டியில் நடந்தது. தமிழ்நாட்டின் மதிப்புக்குரிய பெருமக்கள் பலர் ஈமச்சடங்கில் கலந்துகொண்டனர்.

23-10-53 அன்று மாலை உயிர் நீத்த பண்டிதமணியின் உடல் பலருடைய வருகைக்காவும் 24-10-53 மாலை வரை வைக்கப்பட்டிருந்தது. மாலை 5 மணி சுமாருக்கு முறைப்படி உடலுக்கு ஈமச்சடங்குகள் செய்விக்கப்பட்டன. பண்டிதமணியவர்களால் தோற்றுவிக்கப்பட்டு அவரது மேற்பார்வையிலேயே வளர்ந்த மேலைச்சிவபுரி சன்மார்க்க சபையினர் பண்டிதமணிக்குப் பட்டுச் சாத்தி, மலரணிவித்து மரியாதையைச் செலுத்தினர். தமிழகத்தில் தமிழும் சைவமும் வளரத் தொண்டாற்றும் குன்றக்குடி திருவண்ணமலை ஆதினப் பிரதிநிதி பண்டிதமணியின் சடலத்திற்குப் பொன்னுடை சாத்தி மரியாதை செய்தார். பிறகு, சடலம் பூப்பல்லக்கில் வைக்கப்பட்டு இடு காட்டிற்கு எடுத்துச் செல்லப்பட்டது. அங்குத் தமிழக மக்களின் சார்பில் இறுதி வணக்க உரை ஒன்றும் நிகழ்ந்தது. கலைத்தந்தை திரு. கருமுத்து தியாகராசன் செட்டியார் தலைமை தாங்க, காரைக்குடி மகளிர் இல்ல அதிபர் சொ. முருகப்பா, அழகப்பா கல்லூரி விரிவுரையாளர் திரு. வ. சுப. மாணிக்கம் ஆகியோர் பேசினர். மேலைச்சிவபுரி கணேசர் செந்தமிழ்க்கல்லூரி முதல்வர் திரு. சா. ஆறுமுகனர் ஒரு இரங்கற்பாவை வாசித்தார். பின் பண்டிதமணியின் உடலுக்கு எரியூட்டப்பட்டது.

திரு. வி. க. இறந்தபொழுது பண்டிதமணி அவருக்கு ஒரு இரங்கல் உரை எழுதியனுப்பினுராம். அதுதான் அவருடைய கடைசி எழுத்து எனத் தெரிய வருகிறது.

—'தமிழ்நாடு-29 - 10 - '53.

# இரங்கற்செய்தி

அரும்பெரும் புலவர்களை இழந்து வருகிறது தமிழ் நாடு. பழைய முறையில் ஆழ்ந்து கற்ற தமிழ்ப் பேரறிஞர்கள், முதுபெரும் புலவர்கள் ஒவ்வொருவராக மறைந்து விட்டார்கள். அண்மையில் தமிழ்நாடு, தமிழகத் தந்தை திரு. வி. க.வை இழந்த துன்பத்தை மறக்கவில்லை. இதற்குள் மற்றொரு தமிழ்ப் பேரறிஞரை இருமொழிக் கடல் கண்டுணர்ந்த பெரும்புலவரை - பண்டிதமணியை இன்று இழந்துவிட்டோம். இந்த 1953-ஆம் ஆண்டு மிகமிகக் கொடிது ; கொடிது.

பண்டிதமணியின் ஒப்புயர்வற்ற கட்டுரைகளையும் ஆழ்ந்து கற்றதன் பயனாக வந்த உரை நூல்களையும், வடமொழி நூலின் மொழிபெயர்ப்பான மண்ணியல் சிறு தேர் என்னும் நூலையும் படித்துப் பயன் பெற்ற பல்லாயிரம் புலவர்களுள் நானும் ஒருவன். அவர்கள் இலக்கியச் சுவையை எடுத்துக் காட்டி விளக்கும் திறம் வியத் தொறும் வியத்தொறும் வியப்பிறந்து நிற்கும். அவர்கள் ஊன் கலந்து, உயிர் கலந்து, உவட்டாமல் இனித்திடும் திருவாசகத்துக்கு அரிய உரை எழுதி வந்தார்கள். கதிர்மணி விளக்கப் பேருரை என்னும் பெயரால் திருவாசகவுரை, பகுதி பகுதியாக வெளிவந்துகொண்டிருந்தது. பிற பகுதிகள் வருவதற்குள் அவர்கள் இறைவனடி புகுந்துவிட்டது, தண்டமிழ் மொழிக்குப் பெரியதொரு இழப்பாகும். அவர்களிடத்தை நிரப்புவார் இனி யாரும் இல்லை ; இல்லை.

பண்டித மணியே எங்கள்
 பகர்பெரும் புலவ, இந்நாள்
தண்டமிழ் நாட்டை விட்டுத்
 தற்பரன் தாளை உற்றாய் ;
வண்டமிழ் அன்னை நின்னை
 வையகத் திழந்தாள் ஐயா !
அண்டர்கள் போற்ற வாழி !
 அமைதியை உறுக ஆன்மா !

—பேராசிரியர் அ. கி. பரந்தாமனார்.

* * * *

பண்டிதமணி தமிழ் ஞாயிறு ஆவார். அஞ்ஞாயிறு பண்டிதமணி என்ற பட்டத்தை இளங்காலை ஒளியாகக்கொண்டு மேலெழுந்தது. எல்லாக் கழகங்களும் "பண்டிதமணி" என்ற பட்டத்தை ஒப்புக்கொண்டு பாராட்டின. நாட்டுக் கோட்டை நகரத்தார் மரபிலே பிறந்ததால் தன்னம்பிக்கை, தன் முயற்சி என்ற இரண்டின் வழி யாகப் பண்டிதமணி முன்னேறினார். தஞ்சைப் பெரிய கோயிலைப் போல, தாஜ் மகாலைப் போல, புலவர்களிடையே பண்டிதமணி நிலைபெற்று விளங்கினார். மணி வாசகருக்கு உரைக்கோயில் கட்டிய பெருமை படைத்தவர். தமிழ் பயிலுவோர்க்குப் பேராதரவு தந்தவர். அவர் தலைமையில் பேசுவதென்றால் சொற்பொழி வாளர்கள் அஞ்சுவார்கள். தயாரித்துக்கொண்டுவந்து கவனமாகப் பேசுவார்கள். ஒரு பிழை கண்டாலும் பண்டிதமணி கண்டிக்காமல் விடமாட்டார். ஆயிரக்கணக்கான மக்கள்முன் பேசும் போது தவறான கருத்தை விதைத்துவிடக்கூடாது என்பதே பண்டிதமணியின் கருத்து. பண்டிதமணி தலைசிறந்த மொழிபெயர்ப்பாளர். பார்ப்பனரல்லாதார் வடமொழி படிக்க முடியாத காலத்திலேயே அதைப் படித்து, அதனால் தமிழுக்கு ஆக்கந்தேடியவர் பண்டிதமணி. அவர் உரையெழுதும் பலரோடும் ஆராய்ந்து, தெளிந்த பிறகே ஒரு பாட்டின் உரையை முடிப்பார். நாம் செய்த பாவம் அவருடைய திருவாசகவுரையை முற்றும் பெற முடியாமல் தடுத்துவிட்டது."

—ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை.

* * * *

"பண்டிதமணி கதிரேசச் செட்டியார் காலமானது தமிழகத்துக்குப் பெரிய நட்டமாகும். அவருடைய உறவினர்களுக்கு எனது வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்."

—சு. நடேசன், இலங்கை தபால்-தந்தி அமைச்சர்.

பண்டிதமணி அவர்களின் மறைவால் தமிழ்நாடு, தமிழ்ப் பேரறிவுக் கருவூலத்தை இழக்கின்றது ; தமிழன்னை, தண்டாப் புகழ் படைத்த வண்டமிழ்ப் புலமை கொண்டு குன்றாவொளி சான்ற இலக்கிய நல்லணி செய்யும் நன் மகனை இழக்கின்றாள். சைவ சமயம் சிவஞானமணி விளக்காகிய மணிவாசகத்தின் மணிக்கதிரை விரிந்து விளங்கச் செய்யும் செம்பொன் வள்ளத்தை இழக்கின்றது. செந்தமிழ்ப் பணியாலும் திருந்திய கலைப்பணியாலும் சிறப்புற்று விளங்கும் தனவணிகப் பெருமரபு, தன் வரலாறு விரித்துரைத்த தக்கோரை இழக்கின்றது. சுருங்கச் சொல்லின், தமிழ்ப் புலமை வானத்தில் சிவஞானச் செந்தமிழ் ஒளி செய்து செய்து விளங்கிய செஞ்ஞாயிறு மறைந்தது.

**''அற்றைத் திங்கள் அவ்வெண் ணிலவில்**
**எந்தையும் உடையேம்எம்**
**தமிழும் இனிது திகழ்ந்தது !**
**இற்றைத் திங்கள் இவ்வெண் ணிலவில்**
**நின்றொளிர் பண்டிதமணியாம்**
**நன்றுடைத் தமிழறிவு தந்த**
**எந்தையை இழந்தேம் இரங்குகின்றனமே''**

—**தியாகராசச் செட்டியார்.**

*　　*　　*　　*

''சைவமும் தமிழும் தழைக்கத் தோன்றிய தமிழ்ப் பெரும்புலவர் பரம்பரையில் பண்டிதமணி ஒருவர். அவருக்குப் பின் அவரை ஒத்தவர் என்று சுட்டிக் காட்ட இன்று தமிழகத்தில் வேறு யாருமில்லை. தேன் கலந்து, பால் கலந்து, செழுங்கனித் தீஞ்சுவை கலந்து உவட்டாமல் இனிக்கும் திருவாசகத்திற்குக் கதிர்மணி விளக்கவுரை தந்த பெரியார் மறைந்தது சைவ உலகத்திற்கே பெரிய நட்டமாகும். அவரது சிவவேடப் பொலிவும், அளவு கடந்த திருவாசகப் பற்றும் தமிழ்ப் புலமையும் அவரை நம் அன்பிற்குப் பெரிதும் உரியராக்கிற்று. அவரது பிரிவுக்குச் சைவ உலகமும் தமிழுலகமும் மிகவும் வருந்தும். அவரது புனித ஆன்மா இறைவன் திருவடியில் திளைக்க அண்ணாமலையண்ணலைச் சிந்திக்கின்றோம்.

—**குன்றக்குடி அடிகள்.**

*　　*　　*　　*

இப்பெரியார் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் ஆரய்ச்சித் துறைத் தலைவராகவும் இருந்து தொண்டாற்றியவர் ; தொல்காப்பியம், பெரியபுராணம், சிந்தாமணி, சிலப்பதிகாரம், கம்பராமாயணம் போன்ற பெருநூல்களிலும் சைவத்திரு முறைகளிலும் சைவ சித்தாந்த சாத்திரங்களிலும் மிகுந்த புலமையுடையவர். இவருடைய சொற்பொழிவுகளில் சொற்சுவையும் பொருட்சுவையும் சிறந்து காணப் படும். செய்யுள் நயம் காண்பதிலும் அதனைப் பிறருக்கு எடுத்துரைப்பதிலும் இவர் சிறந்தவர்.

இப்பேராசிரியர், திருவாசகத்திற்கு மிகச் சிறந்த உரையை எழுதி வந்தவர். இவர் இறுதியாக வெளியிட்ட 'திருவெம்பாவை' உரை இவரது பெரும்புலமைத் திறனைக் குன்றின்மீதிட்ட விளக்கென ஒளிரச் செய்வதாகும். திருவாசக நூல் முழுமைக்கும் இவரது உரை வெளிவரும் என்றெண்ணி மகிழ்ந்த தமிழறிஞர் பலராவர். அவரனைவரும் மணியின் மறைவு கேட்டு வருந்துவரென்பதில் ஐயமுண்டோ ?

—**டாக்டர் இராசமாணிக்கனார்.**

*　　*　　*　　*

பண்டிதமணியவர்கள் தமிழின் உயிராகவும் சைவத்தின் கண்ணாகவும் விளங்கியவர்.

இயல்பாகவே, என்றும் மாறாத இளமையும் இனிமையும் கொண்ட தமிழ் மொழி, பண்டிதமணி அவர்களின் உள்ளத்தைத் தொட்டுப் புதிய இளமையும்

இனிமையும் பெற்றுவிட்டதென்றே கூறலாம். பண்டிதமணியவர்கள், எடுத்தாளு கின்ற இன்றமிழ்ச் சொற்கள் ஒவ்வொன்றும் அவரின் புலமையுள்ளத்தில் தோய்ந்து, புதிய ஒளியும் பொருளு ம் கனிவும் பெற்றுப் பொலிகின்றன.

கதிர்மணி விளக்கங்கண்ட கலைச்செல்வனை, இனி நாங்கள் காண முடியாது. சிலப்பதிகாரப் புலமை நிரம்பிய செந்தமிழ்ச் செட்டியை இனி நாங்கள் காண முடியாது. மண்ணியல் சிறுதேர் உருட்டிய மகிபாலன்பட்டிக் கதிரேசச் செட்டியை இனி நாங்கள் காண முடியாது. பனுவற் பூங்காவிற் பிறந்து, பறந்து, அறிவுத் தேன் எடுக்கும் செட்டிநாட்டுத் திருக்கோத்தும்பியை இனி நாங்கள் காண முடியாது. பாவலர் புகழப் பொருள்மழை கொட்டும் பண்டிதமணியைத் தமிழன்னை பறி கொடுத்துவிட்டாள். சிந்தாமணித் தீஞ்சுவை காட்டும் செல்வப் புதல்வனைத் தமிழன்னை பறிகொடுத்துவிட்டாள். சேக்கிழார் திருவுள்ளங் கண்டுவக்கும் சித்தாந்தச் செங்கதிரைத் தமிழன்னை பறிகொடுத்துவிட்டாள். முறையாகத் தமிழ் கற்ற முதுபெரும் புலவனைத் தமிழ் மக்கள் இழந்துவிட்டார்கள். இனிக்க இனிக்க இலக்கிய நயத்தை எடுத்துக் காட்டும் இணையில்லாப் பேரறிஞனைத் தமிழ் மக்கள் இழந்துவிட்டார்கள். அழுத்தப் புலமை வளங்கனிந்த ஆராய்ச்சியாளனை அறிஞருலகு இழந்துவிட்டது.

—பண்டித வித்துவான் **க. வேந்தனார்,**
பரமேசுவரக் கல்லூரித் தமிழ்ப் பேராசான், கொழும்பு.

* * * *

மறைமலை அடிகளும், திரு. வி. க.வும், பண்டிதமணியும், தமிழ்நாட்டின்-தமிழ் மொழியின்-தமிழ் மக்களின் ஒப்பற்ற தலைவராவார்கள். அடுத்தடுத்து இம்மூவரையும் தமிழகம் இழந்துவிட்டது.

பண்டிதமணி இக்காலப் புலவர் பெருமக்கள் அனைவர்க்கும் தலைவராய் விளங்கிச் செய்தற்கரிய நூல்களைச் செய்து தந்து பேரறிவுக் களஞ்சியமாய், பெரும் பேராசிரியராய்த் திகழ்ந்தவர்கள். இழந்தோம்.

**—கி. ஆ. பெ. விசுவநாதம்.**

* * * *

பண்டிதமணி அவர்களிடம் இயல்பாய் அமைந்த இனிய சுபாவமும், எந்த நூலையும் மானவர் மனம் இலயிக்குமாறு பல்வகைச் சுவையும் சொட்டச் சொட்டப் பாடஞ்சொல்லுந் திறமையும் மாணவர் அனைவரையும் காந்தமென ஈர்த்தன.

சித்தியார் சிவப்பிரகாசம் போன்ற சமய சாத்திரங்களாயினுஞ்சரி, திருக்குறள் போன்ற நீதி நூலாயினுஞ்சரி, அகநானூறு, சிந்தாமணி போன்ற அகப்பொருளிலக் கியங்களாயினுஞ்சரி, சுவை பெருக உரை கூறி நயங்காட்டலில் அவருக்கு நிகர் அவரென்றே கூறல் வேண்டும். அந்நூல்களை அவர் எவ்வளவு நேரம் நடத்தினலுஞ் சிறிதும் தெவிட்டாது. சிறு சிறு பதங்களை எடுத்து அழகழகாக விரிப்பார். கேட்கக் கேட்க ஆனந்தம் மிகும். அவரது சொற்பொழிவுகளும் அத்தகையனவே. அவருக் கென்றே தனிப்பட அமைந்த ஒரு கனிவுங் குழைவும் அவர் பேச்சுக்கு எங்குமில்லாத ஒரு கவர்ச்சியை அளிக்கும்.

சொற்பொழிவாற்றுங் கூட்டங்களைவிடப் ,பன்மடங்கு சிறப்படைவன அவர் தலைமை தாங்கும் மாநாடுகள். சைவ சித்தாந்த மாநாடுகளாயினுஞ்சரி, இலக்கிய மாநாடுகளாயினுஞ்சரி பண்டிதமணியவர்கள் தலைமையில் நிகழ்வனவாயின் அவற்றின் சிறப்பே தனி. சொற்பொழிவாளர் எவராயினும், அவர் எடுத்துக்கொள்ளும் பொருள் எதுவாயினும் அவரவருக்கும் அததற்கும் மிகப்பொருத்தமாகவும் அழகாயும் நகைச் சுவை விரவப் பேசி, அவையை மகிழ்விப்பதில் அவர் கைதேர்ந்தவர். அத்தகைய திறன் கைவரப் பெற்றோர் மிக அணி செய்து சேவித்த பெருமையுடையவர். நிகரற்ற கற்பனைத் திறனும் கவிதா சக்தியுங் கைவரப்பெற்றவர். எந்த நூலுக்கும் அவரைப் போலச் சொல் நயமும் பொருள் நயமும் காணவல்லோரைக் காண்டல் அரிதினும் அரிது. அத்துறையில் அவர் ஒரு மன்னர். அது அவருக்கு இயற்கை அளித்த அருநிதி.

**—இ. இலக்குமண ஐயர்,** கொழும்பு றேயல் கல்லூரித் தமிழ்ப் பேராசான்.

இலகுவான நடையில், இனிமையாக எழுதுவதில் பெயர் பெற்ற இவர், சுக்ரநீதி, கௌதில்யா, அர்த்த சாஸ்திரம், மிருச்சகடிகம் போன்ற வடமொழி நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்திருக்கிறார்.

சென்ற 10 வருஷ காலமாகத் திருவாசகத்திற்கு விரிவான விளக்க உரை எழுதி வந்தார். ஏற்கனவே 3 பகுதிகள் வெளியிடப்பட்டிருக்கின்றன. இவருடைய திருச் சதகம், நீத்தல் விண்ணப்பம், திருவெம்பாவை உரைகள் மதிப்பிற்குரியன. பழைய சம்பிரதாயப்படி கல்வி பயின்ற வித்வான்களில் இவர் ஒருவர். இவருடைய பிரிவு தமிழ் நாட்டிற்கும் தமிழ் இலக்கியத்திற்கும் ஈடுசெய்ய முடியாத நஷ்டம்.

—'தினமணி'-26-10-53.

* * * *

பண்டிதமணி அவர்கள் தம் சொந்த முயற்சியாலேயே இலக்கிய உலகில் முன்னுக்கு வந்தவர். பழம்பெரும் தமிழ்நூல்களின் சுவையைத் தமிழகத்திற்கு எழுத்தாலும் பேச்சாலும் எடுத்துக் காட்டித் தமிழின் சிறப்பை உயர்த்தியவர். வடமொழியைத் தெளியக் கற்றதோடமையாது அம்மொழியிலுள்ள காப்பியங்களைச் சிறிதும் சுவை குன்றாது தமிழில் ஆக்கி, வேறு யாரும் பெற முடியாத பெருமையைத் தேடிக்கொண்டவர். பாடல்களை எடுத்துக்கொண்டு நுண்பொருள் காண்பதில் பண்டிதமணி நிகரற்றவர். அவரைப் போலச் சுவைபடவும் நகைச்சுவை மலியவும் பாடம் சொல்பவர்கள் தமிழ் நாட்டில் வேறு யாருமில்லை என்றே சொல்லலாம். அவருடன் சிறிது நேரம் பேசிக்கொண்டிருப்பதே இன்பம் பயக்கும் ஒரு செயலாகும். பண்டிதமணி எழுத்து நடை ஒரு தனிப்பட்ட இனிமையுடையது. அவரது வடநூல் மொழி பெயர்ப்புக்கள் முதல் நூலினும் மேம்பாடுடையதென்று வடமொழி வல்லுநர்களே ஒப்புக்கொண்டிருக்கின்றனர். பண்டிதமணியெழுதிய 'மண்ணியல் சிறுதேர்' என்ற மொழி பெயர்ப்பு நூலைப் பற்றிக் கூறும்போது வடமொழிக் கல்லூரித் தலைவர் ஒருவர், "வடமொழி முதல் நூலில் தெளிவு குன்றிக் கிடக்கும் சில இடங்களில் இத்தமிழ் மொழிபெயர்ப்பு தெளிவு மலிந்து காணப்படுகிறது" என்று குறிப்பிடுகிறார்.

அவருடைய ஆன்மா சிவயோகப் பெருவாழ்வில் திளைக்கவும், தமிழகத்திற்காக அவர் கண்ட கனவுகள் நிறைவேறவும் நாம் இறைவன் திருவடியை ஏத்துவோமாக.

—'தமிழ்நாடு'-28-10-53.



# பண்டிதமணி பற்றி

கட்டுரை வரைவதிற் றன்னிகரில்லாக் கதிர்ப்பெரும் பரிதியாமென இக்கலைஞரை கோவைக் கட்டுரைப்பதிற் றடையாதுளது ? 'சன்மார்க்கம்', 'சிவபிரான் கருணையும் சீவர்கள் கடமையும்', 'ஓர் பெரிய புராணப் பாசுர விளக்கம்', 'காதற்கடிதங்கள்', 'மணிமேகலை', 'மாணிக்கவாசகர்' என்ற வியாசங்கள் பெரும்புலவரும் சிரமேற் 'கொண்டு போற்றும் உரமிக்கவுடையனவெனின், மற்றிவற்றின் சிறப்பை யானோ அளக்கவல்லேன் ? தொடக்கத்து அவர் துவக்கும் விடயமும், இடையே யெத்துணைக் கல்வி வல்லுநரானுங் கடக்கலாகாப் பெருமித மாண்புடன் அதனைத் தொடர நடாத்துந் தனித்ததோர் தோரணையும் பன்னூரன் முடிபுகட்கினிது பொருந்தத் தாங்கொண்ட பொருள்களை முடித்துக் காட்டும் பெருந்திறனும் பன்முறையும் புலவர் பெருமக்களால் எண்ணியெண்ணி வியக்கத்தகுவன.

— ஆந்திர காசியப திம்மப்ப அந்தணனர்.

* * * *

திரு. மு. கதிரேசச் செட்டியாரவர்களைப் பார்க்கவும், அவர்களுடைய அரிய பெரிய சொற்பொழிவுகளைக் கேட்டுப் பயனெய்தவும் நேர்ந்த நேர்ச்சிகள் பல. இவர்கள் அங்ககர்ப் பொது மன்றத்தில் மணிமேகலைக் காப்பியத்திறன் பற்றியும், மலைக் கோட்டைச் சைவ சபைச் சார்பில் கண்ணப்பர் சரித விஞ்ஞானர்த்தம் பற்றியும், நூற்றுக்கண் மண்டபத்தில் திருவாசகம் பற்றியும் சொற்பொழிவாற்றிய போது அரிய பெரிய பொருள்களை நுண்ணிய திண்ணிய முறையால் விரித்துரைக்கக் கருத்தூன்றிக் கேட்டுப் பயன் பெற்ற போதெல்லாம், இவர்கள்பால் எனக்கு இறும்பூது சான்ற எத்துரைப்பாங்கே என்றும் மிகுந்து தோன்றியது. அக்காலங்களில் இவர்கள் புலமைப் பெருந்தகையாளர்களாகிய திருவாளர் பா. வே. மாணிக்க நாயக்கரவர்கள், பண்டித. ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் முதலிய பெரியார்களுடனுறைவு பெற்றிருந்தகாலை எளியேன் ஏழைமையால் இவர்கள்பால் அணுகிப் பழக்கமும் பயனும் பெற நேரவில்லை. எனினும், என் உள்ளத்தில், இவர்கள் தேர்ந்த புலமையும் செஞ்சொற்றிறனும் நுண்பொருள் தெருட்டும் நோன்மையும் மாண்பும் எண்ணுந் தோறும் இன்பூற்றுகவே இருந்தன. இதனால் இவர்களையடைந்து தமிழ்க் கல்வி யூற்றம் பெறல் வேண்டுமென்று என்னுள்ளத்தில் பலகால் எண்ணங்கள் வலுப் பெற்றெழுந்தன; ஆயினும், கிட்டாமை என் தவக்குறையே.

—வெள்ளக்கால் ப. சுப்பிரமணிய முதலியார்.

* * * *

அண்ணமலைப் பல்கலைக்கழகத்தில் யான் தமிழ் ஆசிரியப்பணி மேற்கொண்ட சின்னட்குப்பின்னர், இவர்கள் அப்பல்கலைக் கழகத்தின் சார்பில் நான்கு பேருரைகள் நிகழ்த்தற்பொருட்டு எழுந்தருளினர்கள். அப்போது பெருங்கவிஞராகிய கம்பர், நறுங் கவிஞராகிய இளங்கோவடிகள் அருங்கவிஞராகிய சேக்கிழார், அருட்கவிஞராகிய மணி வாசகர் ஆகிய நான்கு தமிழில் பெரியார்களின் செம்மை சால் திறங்களை எம்மனோ ரெல்லாம் தெளியுமாறு தெருட்டிக் காட்டினர்கள். அங்கு ஆசிரியர்கள் பெருங்குழுவில் இவர்கள் இருமொழிப் புலமையும் பெருமொழித்திறனும் நுண்பொருளுணர்ச்சியும், சங்கதவாணர், அங்கிலவாணர் முதலியோரால் பண்பெறப் பாராட்டப்பட்டது எளியேன் உளத்தே என்றும் நிலைபெறும்.

தி. பொ. பழனியப்பபிள்ளை.

## கதிர்மணி விளக்கம் பற்றி

இப்பேருரையின் உயர்ந்த தன்மைகளை முற்றும் என்னால் அளவிட்டு எழுத இயலாமையால் சிற்சில சிறப்புகளை மட்டும் இங்குக் குறிக்க நினைக்கின்றேன். திருவாசகத்துள், திருச்சதகப் பகுதி முதலிய பொருளும், அதன் உட்பிரிவுகளாகிய பதிகங்கள் முதலிய பொருள்களும், ஆங்காங்குப் பெறப்படும் வகைகளைத் திருப்பாட்டுக்களுள் விளங்க வைத்துக் காட்டிச் செல்லுதல் அருமைப்பாடு. உரையைக் கருத்துரை, பதவுரை, விளக்கவுரை என்று பாற்படுத்தி அமைத்த நிலை திருப்பாட்டுக்களின் பொருளினையும் உள்ளுறை நயங்களையும் நன்குணர்ந்துகொள்ளுதற்குப் பேருபகாரமாயுள்ளது. விளக்க உரையினுள் இலக்கண இலக்கிய நயங்களும், சாத்திர உண்மைகளின் விளக்கங்களும் பாட்டுக் கருத்துத் தொடர்ச்சிகளும் புலப்படத் தடைவிடைகளால் ஆய்ந்து நிறுவுதலும், இன்னோரன்ன பிற நலன்களும் பொருந்தியிருத்தல் இவ்வுரையாசிரியரது பேராசிரியத் தன்மையானன்றி இயலாது. உரைநடை திட்பநுட்பஞ்செறிந்த தூய தமிழின் இயல்கின்றதாதலின் கற்போர்க்குச் சுவை பயத்தலோடு நற்றமிழ்ப் பழக்கத்தின் வரும் நிலையினை உண்டாக்கும் அமைதியும் உடையது.

—திரு. C. K. சுப்பிரமணிய முதலியார்.

* * * *

இந்நூல் முழுமையும் ஒரு முறை யான் படித்தேன். "வழங்குகின்றாய்க்குன் அருளாரமுதத்தை வாரிக்கொண்டு விழுங்குகின்றேன்" என்று எம் குருநாதர் கூறிய வண்ணமே இவ்வரிய உரை நூலைத் தெவிட்டாது படித்துத் திளைத்தேன். இதன் மூலம் யான் பெற்ற பயனும் இன்பமும் இயம்புதற்கியலுவன அல்ல. மணிவாசகப் பெருந்தகையின் திருவுளப்பாங்கினையும் திருவாசகத்தின் உட்கருத்தையும் மானிடராகிய யாம் எத்துணையளவு உணர்தற்கியலுமோ அத்துணையும் நம் உரையாசிரியர் அவர்கள் தம் கூர்த்த மதியாலும், குழைந்த உள்ளத்தாலும், கூடிய அனுபவத்தாலும், பரந்த கல்வியாலும் பண்புறக் கண்டறிந்து கண்ணாடியைப் போல் கதிர்மணி விளக்கத்தின் மூலம் நமக்குக் காட்டியருளியுள்ளார்கள். ஆழ்ந்த கருத்துக்களை முகந்தெடுத்துத் தெளிந்த முறையில் தெரிப்பதில் பண்டிதமணியவர்கட்கு இணை பண்டிதமணியவர்களேதான் என்னும் உண்மை ஈண்டும் நன்கு புலப்படுகின்றது. சைவ உலகத்தின் நீண்ட நாள் தேவையை இன்று நம் உரையாசிரியர் அவர்கள் வெகு அருமையாகப் பூர்த்தி செய்துள்ளார்கள். ஒவ்வொரு பாட்டின் உண்மைப் பொருளும் அதன் உயரிய சித்தாந்தக் கருத்தும் யாவரும் எளிதில் அறியும் வண்ணம், தமக்கே உரியதொரு தனித்தமிழ் நடையில் எழுதி நமக்கு இனிது உதவிய பண்டிதமணியவர்கட்குத் தமிழ் உலகமும் சைவமும் யாண்டும் கடப்பாடுடையன.

—திருவாசகம் K. M. பாலசுப்பிரமணியம், B.A., B.L.

* * * *

இவ்வினிய உரை நூலின் எவ்வெப்பக்கத்தே எவ்வெவ்விடத்தே காணினும் ஆங்காங்கெல்லாம் தெய்வத் திருவாசக நூல் அடிகளின் ஒண்மையினையெல்லாம் வெளிப்படுத்தும் நுண்ணிய பொன்னுரைகள் எத்தகையோரும் மிக எளிதில் உணர்ந்துகொள்ளும் வண்ணம் எண்மைய நெறியில் செல்லுதலை, நன்கு உணரலாம். மற்றும், இதன்கண் சமய நூற்புலமையும் தத்துவ உணர்ச்சியும் கூடித் ததும்பும் கனிவுரைகளின் இனிமைகளோ அப்புலமைப் பொன்னுரையிற் பொருந்தி மணக்கும் அருமை நறுமணமெனத் திகழ்வது இனிது உணரலாம். வேண்டுமிடங்களில் ஒத்த வடமொழி மேற்கோள்களும் இணைக்கப் பெற்றுத் திகழ்கின்றன. இங்ஙனமாகிய இவ்வுரையின் தனிப்பெருஞ்சீர்களை எடுத்துக்காட்டி விரிப்பின், அஃது ஓர் உரைநடைப் பெரு நூலாகும். சிவபெருமான் திருவருட்பெருக்குடன் மணிவாசகரது புலமை, கனிவுகள் சான்ற உள்ளத்தெழுந்தது திருவாசகம் ஆகும். மணிவாசக அடிகள் திருவருட்பெருக்குடன், நம் பண்டிதமணியார் புலமை கனிவுகள் சான்ற உள்ளத்தெழுவது இவ்வினிய பேருரையாகும்.

—தமிழ்ப்பொழில், துணர் 23 மலர் 5 - 6

The work under review consists of 100 verses forming a part of Tiruvacakam, which are the outpourings of Manickkavacakar, one of the four great Tamil Saints. He was at that time an elderly man who, having served as a minister under a Pandyan king at Madura and having tasted all pleasures of life, became completely averse towards worldly happiness and appealed to God for His mercy to enable him realise His feet. Verses 30, 36 and 100 clearly tell us that he belonged to the school of Saiva Siddhanta Philosophy. His experience cannot but remind the readers that Nilakantha Dikshitar, an Advaiti, who occupied a similar position at Madura a few centuries later, was influenced to follow his footsteps.

It is but befitting therefore, that a veteran scholar in Tamil language and literature and Saiva Siddhanta Philosophy ripe in age, with a handsome knowledge in Sanskrit Literature in the person of Mahamahopadhyaya Chettiar has come forward with his commentary on the same and Sri Karumuthu Tyagaraja Chettiar has been kind enough to meet the cost of publication. TheTamil public must be deeply indebted to Mm. Chettiar for this welcome publication.

—**The 'Hindu'**-*23-1-48*

* * * *

**வெள்ளகால் ராவ்சாகிப் வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள் G. B. V. C. கூறிய வாழ்த்து.**

மகிபாலப் பதியில் வாழும் அண்ணல்
செட்டிநாட் டரசர் திலகம் போல்வான்
மூதறி வோர்புகழ் "முதுபெரும் புலவன்"
பண்டித மணிகதி ரேசப் பாவலன்
நிலவு சுக்கிரநீதி நன்னூல்
திகழு மண்ணியல் சிறு தேர்ப் பெருநூல்
சமயம் இலக்கியம் தம்பொரு ளாகக்
கொண்ட உரைநடைக் கோவை நூல்கள்
பிறபல நூல்கள் பெருவிருந் தாக
வண்டமிழ் வாணர் கூட்டுண்டிட வழங்கினேன்
இனர் பல சபைகளிற் கேட்டார்ப் பிணிக்கும்
பெருஞ்சொல் வழங்கும் பிரசங்க சிங்கம்
மதிவா ரண்ணு மலைப்பல் கழகத்
தண்டமிழ்ப் பெருந்துறைத் தலைமை வகித்துப்
பேராசிரியனுய் பிறங்கிய பெரியோன்
அகவை யறுபதாண் டான மானவன்
இன்று மறுபதாண்டினும் நெடுங்காலம்
எல்லாம் வல்ல இறைவன் அருளால்
உடற்றுன் புளத்துய ரொன்று மின்றி
இன்ப நலங்க ளெல்லா மெய்தி
வாழ்க வாழ்க வாழ்க மன்னே.

**பண்டித மணியின் அறுபதாம் ஆண்டு நிறைவு விழா நிகழ்ச்சியும் பாராட்டும்**

**பக்கம் 68 — 69**

**மதுரை, 21 - 2 - 42.**

# நகைச்சுவை நாயகர்

எம். எஸ். மெய்யப்பன். பி. இ.

1. சங்க காலக் கணியன் பூங்குன்றன் தோன்றிய பகுதியே மகிபாலன்பட்டியாம். மாண்புமிகு மகிபாலன்பட்டியில் 'சாரதா விலாசம்' என்ற கலைமகள் பெயர் பொறித்த மனையில் கலைமகளும் திருமகளும் ஒன்றித் திகழ வாழ்ந்தவர் மகா மகோபாத்தியாய பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் ஆவர்.

கடந்த அறுபது ஆண்டுகட்கு மேலாக மேலைச் சிவபுரிச் சன்மார்க்க சபை தோன்றுவதற்கும் அதன் சார்பில் கணேசர் செந்தமிழ்க் கல்லூரி நடப்பதற்கும், தொல்காப்பியர் நூல்நிலையம், உதவுவதற்கும் ஆதி காரணமாக இருந்தவர்.

தொல்காப்பியப் பாயிர விருத்தி எழுதிய சோழவந்தான் அரசன் சண்முகனார். மு. ரா. கந்தசாமிக்கவிராயர், ரா. ராகவ ஐயங்கார் மு. ராகவஐயங்கார், ச. சோமசுந்தரபாரதி, தெ. பொ. மீனாட்சிசுந்தரம்பிள்ளை இன்னோரன்ன பெரும் புலவர்களிடையே 'பண்டிதமணி' எனச் சிறப்பாக அழைக்கப் பெற்று வந்த மு. கதிரேசக் செட்டியார் அவர்கள் 'மணி' யாகத் திகழ்ந்தார்.

2. தென்தமிழ்க் கடலும் வடநூற் புலமையும் நன்கு அறிந்தவர். இவர் வடமொழியிலுள்ள நூல்களைத் தமிழில் இயற்றிய 'சுக்கிரநீதி' 'மண்ணியல் சிறுதேர்' முதலியன இலக்கியச் சுவை நனி சொட்டச் சொட்ட விளங்குவன.

இலக்கியச் சொற்பொழிவாற்றுவதில் வல்லுநரான 'பண்டிதமணி' அவர்கள் கருத்தாழமும் இலக்கிய நயமும் மிக்க நகைச் சுவையுடன் பேசுவார். திருச்சிராப்பள்ளித் தேவர் கூடத்தில், சொற்பொழிவு ஆற்றியபோது பெண்கள் இருந்த பகுதியில் 'ஒலி' எழுந்தது. இவரது சொற்பொழிவைக் கேட்கத் தடை செய்தது. உடனே "பெண்மணிகள் ஒலிக்கத்தான் செய்யும்" என்றார். பின் ஒலி அடங்கியது.

சென்னையில் கம்பர் விழா நடந்தபோது தலைமை உரை ஆற்றிக் கொண்டிருந்தார். சிலர் இடையிடையே குரல் எழுப்பினர் ; பேச்சைத் தடுக்க முயன்றனர் ; அது போது "நான் சொற்போர் புரிய வந்தேன் மற்போர் புரிய அல்ல' என்றார். குரல் முழக்கிய நண்பர்கள் ஓய்ந்தனர்.

காரைக்குடிக்கு அடுத்த அரியக்குடியில் இளைஞர் சங்க ஆண்டு விழா நடந்தது. திரு. பால் நாடாரும் வந்திருந்தார் ; இரவு உணவுக்குப்பின் அனைவர்க்கும் பால் வழங்கினர் சங்கத்தார். கிண்ணத்துடன் பாலைப் பெற்ற பண்டிதமணி, "சீனிவாசன் படுத்திருக்கிறார் பாலில் ; நான் எப்படிக் குடிப்பது" என்றார். ஒருவர்க்கும் பொருள் விளங்கவில்லை. பால் - திருப்பாற்கடல், சீனியில் வாசம் செய்யும் - எறும்பு - என்றார். அனைவரும் நகைத்தனர். உடனே இந்த ஊர் அரியக்குடி அல்லவா என்றார் தலைவர். திரு. பால்நாடார் அவர்களுக்கும் பருகப் பால் தந்தனர். பண்டிதமணி அவர்கள் 'அவர், பால்நாடார்' என்றார் ; நாடார் - விரும்பார். பால்நாடார் - பாலை - நாடார்.

மேலைச்சிவபுரி சன்மார்க்க சபையில் ஒரு நாள் பண்டிதமணி அகநானூற்றுப் பாடல் ஒன்றைப் பற்றிப் பேச வேண்டும் என திரு. பழ. சாமிநாதச் செட்டியார் கேட்டுக் கொண்டார்.

'மணிநா ஆர்த்த மாண்வினைத் தேரன்'

ஆன தலைவன் பரத்தை விட்டுக்குச் சென்று திரும்பினான் ; தேரின் மணிநாக்கை ஏன் அவன் கட்ட வேண்டும் ?

மலர்த் தேனை உண்ணும் வண்டுகட்கு இடையூறு செய்யக் கூடாது என்ற கருணையால் தலைவன் மணிகளின் நாக்குகளைக் கட்டினான் என்று கூறினார். விட்டுக்குள் நுழைந்தான் ; தலைவி, தன் மகன் மூன்றாண்டு உள்ளவனைச் சிறு கோலால் அடிப்பது போல் ஓங்கி "எங்கே போயிருந்தாய் ? இனிப் போகாதே" என்று கூறி மெதுவாக அடித்தார்.

பரத்தையர் திருமணம். தலைவன்தான் மாப்பிள்ளை. வாத்தியம் முழங்குகிறது; அந்த வாத்திய முழக்கம், விட்டில் இருந்த தலைவனை விரைந்து வா என்று அழைப்பது போல ஒலித்ததாம் என்று கூறினார்.

சென்னையில் ஒருகால் மாகாணத் தமிழ் மாநாடு நடந்தது. அம்மாநாட்டில் அந்நாள் அமைச்சர் ஒருவர் கலந்து கொண்டார்; மாநாட்டைத்திறந்து வைத்தார்; திறந்து வைத்துப் பேசியபோது அவ்வமைச்சர், 'தமிழில் என்ன இருக்கிறது? தெய்வத்தைப் பற்றி நிறைய இருக்கின்றன. மற்றொன்று காதலைப் பற்றி நிறைய இருக்கின்றன. இக்காலத்திற்கும் வருங் காலத்திற்கும் வேண்டிய நூல்கள் அல்லவா வேண்டும்' என்றார். தலைமை வகித்த பண்டித மணி அவர்கள் 'தமிழில் என்ன இருக்கிறது' எனக் கேட்டார்கள்! இவ்வுலகில் மக்களுக்கு வேண்டியன க; மற்றொன்று கா. அஃதாவது க என்றால் கடவுள், கா என்றால் காதல். இந்த இரண்டுக்குள் உலகம் அடக்கம்'என்றார். சபையில் ஒரே மகிழ்ச்சி ஆரவாரம்.

பாடம் கற்பிக்கும் ஆற்றல் மிக்கவர். பழகுவ தற்கு இனிமையானவர். பா நலங்களை நன்கு நுகர்ந்து உணர்ந்து தாம் அனுபவித்த இலக்கிய இன்பத்தைத் தம் நாநலத்தால் பிறர் மகிழும் படி பேச வல்லவர். 'கதிரேசனார் காவியமானார்; காவியம் அவராயிற்று' என்பார் திரு. வி. க. முத்தமிழ்க் காவியத்தில் ஊறிக் காவியமாகிய பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் புகழ் நீடுழி வாழ்க.

---

## இறைவனை அடைதற்குரிய நெறிகள்

உயிர் கட்டறுத்து வீடு பெறுதற்கு நம் அரிய சமயத்திலமைந்த சாதனங்கள் மிகச் சிறந்தனவாம். சரியை முதலிய நான்கு வழிகள் ஆன்மாக்களின் பக்குவ நோக்கியமைந்தன. அவற்றினியல்கள் மிக்க விரிவுடையன. சரியை முதலிய நான்கு வழிகளையும் ஒன்றுக்கொன்று சாதன சாத்திய முறையில் வைத்து இறுதியிலுள்ள ஞானத்தால் விட்டின்பம் அடையலாமென உணர்த்தப்பட்டது. இவ்வுண்மையைச் சிவயோகியாராகிய தாயுமானவ அடிகள் 'விரும்புஞ்சரியை முதல்மெய்ஞ்ஞான நான்கும் - அரும்பு மலர், காய் கனிபோல் அன்றோ பராபரமே' யென்று கூறியருளினர். ஒன் றினை யொன்று இன்றியமையாமைக்கு அரும்பு, மலர் காய் கனியென எடுத்துக் காட்டிய அநுபவ உவம அழகு மிகப் பாராட்டற்பாலது. இந்நெறிகளை இன்னும் சற்றுச் சுருக்கி அன்புநெறி, அறிவுநெறி யென வகுத்து விளக்கும் தெளிவு மிகச் சிறந்ததாகும். இவற்றை ஞான மார்க்கம், பக்தி மார்க்கம் என்றும் கூறுப.

(பக்கம் 7)

சைவ சித்தாந்த மகா சமாசத்தின் இருபத்தைந்தாவது ஆண்டு விழாத் தலைவர், மகிபாலன்பட்டி - சைவத்திருவாளர் பண்டிதமணி - **மு. கதிரேசச் செட்டியாரவர்கள்** சென்னை பச்சையப்பன் கல்லூரியில் நிகழ்த்திய தலைமைப் பேருரை *(25 - 12 - 1930).*